

தென்மொழிகளின் புத்தக டிரஸ்டு ஆதரவில் பதிப்பிக்கப் பெற்றது.

ரூ. 1'25

# பிரதாப முதலியார் சரித்திரம்

(நாவல்)



வேதநாயகம் பிள்ளை எழுதியது

சுருக்கப் பதிப்பு





தமிழிலே எழுதப்பெற்ற முதல் நாவல் இது. எழுதி ஒரு வைர விழாக்காலத்திற்குமேல் ஆகியும் இன்னும் இதன் சுவை மங்க வில்லை.

உமாதேவன் வெளியீடு

★



"...நம்மைப் பெற்றதும் தமிழ்; வளர்த்ததும் தமிழ்; நம்மைத் தாலாட்டித் தூங்க வைத்ததும் தமிழ். நம் முடைய மழலைச் சொல்லால், நமது தாய்தந்தையரைச் சந்தோஷிப்பித்ததும் தமிழ்; நாம் குழந்தைப் பருவத்தில் பேச ஆரம்பித்த போது முதலில் உச்சரித்ததும் தமிழ்; தாய், தந்தை, குரு முதலானவர்கள் நமக்கு ஆதியில் உப தேசித்ததும் தமிழ்; நம்முடைய வீட்டுப் பாஷையும் தமிழ்; நாட்டுப் பாஷையும் தமிழ்..."

ஏறக்குறைய எண்பது ஆண்டுகளுக்கு முன், தமிழ் மொழி வசன வளத்தைக் கண்டறியாத காலத்திலே, வேகமும் எளிமையும் நிறைந்த இந்த நடையை உருவாக்கியவர் வேத நாயகம் பிள்ளை. இதைப் போல உணர்ச்சி நிறைந்த பகுதிகள் இக்கதையிலே அநேகம் உள்ளன.

இச்சுருக்கப் பதிப்பில் கிளைக்கதைகளும், அவற்றோடு சம்பந்தப்பட்ட வருணனைகளுமே நீக்கப்பட்டுள்ளன. ஆசிரிய ரின் நடையழகும் சொல்லாட்சியும் சிறிதும் பாதிக்கப்பட வில்லை.

★

சென்னைப் பிரதம நீதிபதி பி. வி. ராஜமன்னார் அவர்களின்



## பொதுவுரை

தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் ஆதரவில் முதலில் வெளியாகும் நூல்கள் தென்னிந்திய மக்களுக்கு அளிக்கப் படுகின்றன. இந்த நிலையம் "போர்டு" நிலையத்தாரின் (Ford Foundation) நன்கொடையால் உருவாகி வளர்ந்தது. இதன் நோக்கம் தென்னிந்திய மொழிகளாகிய தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழி களிலும் அறிவும், கலையும் நிறைந்த நூல்களைக் குறைந்த விலைக்கு வெளியிடுவதை ஆதரிப்பதேயாகும். இந்நோக் கத்தை நிறைவேற்றப் "போர்டு" நிலையத்தாரும் தென் னிந்தியப் பல்கலைக் கழகத் துணை வேந்தர்கள் எழுவரும் சேர்ந்து சிந்தித்து, ஏராளமான, பல்வகையான சிறந்த நூல்களைக் குறைந்த விலையில் வெளியிட்டு விற்பனை செய்ய உதவ இந்த ஸ்தாபனத்தை நிறுவினர். இதற்கென நிறுவப் பட்ட மூன்றாண்டுத் திட்டத்தின் முதல் வெளியீடு இது. இந்நிலையம் கடுநடையுடைய நூல்களை வெளியிட மேற் கொள்ளவில்லை. ஆங்கிலக் கல்வி இல்லாத படித்த பாமரனுக் கும் பயன்படுமாறு எளிய நடையில் இன்பமும், பயனும் தரும் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்தலே இந்த ஸ்தாபனத் தின் இலட்சியமாகும்.

இலக்கிய வளம் நிறைந்த மூல நூல்களைப் பதிப்பித்தல், கலை, விஞ்ஞானப் புத்தகங்களை வெளியிடல், உலகத்திலே யுள்ள மற்ற மொழி நூல்களை மொழி பெயர்த்தல் ஆகியவையே இந்த ஸ்தாபனம் செய்ய விரும்பும் பணிக ளாகும்.

"மலிந்த விலையில் உயர்ந்த நூல்."—இதுவே தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் இலட்சியம். இந்த நோக்கம் எவ்வளவு தூரம் இம்முதல் வெளியீட்டால் நிறைவேறியிருக் கிறது என்பதைப் பொது மக்களே சொல்ல வேண்டும். இம் முயற்சியின் பயனும் வெற்றியும் பத்தாண்டுகளுக்குப் பிறகே வெளிப்படலாம். ஆனால், இத்திட்டத்தின் முக்கியத்துவம் உண்மையான கற்பனை நோக்குடையவர்களுக்குப் புலனா

கும். இதனுல் விளையக்கூடியன எண்ணிறந்தன. மலிவான இப்புத்தகங்களைத் திறமையான வகையில் தென்னிந்தியா முற்றிலும் பரப்பினுல் இவை பட்டித் தொட்டிகளிலுள்ள மக்கள் கரங்களிலும் தவழும். அப்போது இந்நாட்டின் உயிர்நாடி போன்ற அந்த மக்களின் வாழ்வில் இன்ப ஒளி வீசும்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலேயாளம் ஆகிய மொழி களுக்காகவே இந்நிலேயம் ஏற்படுத்தப்பட்டதற்குத் தக்க காரணங்கள் உண்டு. ஏனெனில், இவை தென் நாட்டு மொழிகள். "தக்கணம்" என்பது பூகோள நூற்படி பழைய இந்தியாவிலே, விந்தியத்தின் தென் பாகமாளுலும், பண் பாட்டின்படி இந்நான்கு மொழிகளையோ, அவற்றின் கிளை மொழிகளையோ பேசும் மக்களைக் கொண்ட பிரதேசத் தையே குறிக்கும். இம்மொழிகள் நான்கும் ஓரினத் தன என்பதில் ஐயமில்லே. "திராவிடம்" என்ற அடை மொழியைச் சேர்க்க நான் தயங்குகிறேன். ஏனெனில், அது 'மொழி,' 'இனம்' என்ற பொருளில் கொள் ளப்படாமல், கருத்து வேற்றுமை, அரசியல் என்ற நோக்குடன் பயன்படுத்தப்படுகிறது. இம்மொழிகளிடையே காணப்படும் ஒருமைப்பாடு தவிர, இம்மொழி பேசும் மக்களிடையேயும் காணப்படும் கலாசாரம் இப்பகுதியை இந்தியாவின் ஏனைய பகுதியினின்றும் தனித்துக் காட்டு கிறது. சாதாரணமாக நாம் அறிந்துகொள்ளும் கர்நாடக சங்கீதமும் இதைத் தெளிவுபடுத்தும். அவ்வாறே இப்பகுதி களில் உள்ள சிற்பக் கலேயும், கட்டடக் கலேயும் தனிப் பெருமையுடையன. மக்களின் பழக்க வழக்கங்கள், சடங்கு கள், விழாக்கள் முதலியவற்றிலும் குறிப்பிடத் தக்க ஒருமைப்பாட்டைக் காண்கிருேம். இத்தனிச் சிறப்புகள் இந்நூலகத்தாரின் வெளியீடுகளால் பிரதிபலிக்கும் என நம்புகிறேன். அத்துடன் இந்தியப் பண்பாட்டை விளக்கும் நூல்களையும் பிறநாட்டு மொழிகளில் உள்ள நூல்களின் மொழிபெயர்ப்புகளையும் வெளியிடுவதன் மூலமாகக் குறுகிய வேறுபட்ட மனப்பான்மை தவிர்க்கப்படும்.

பி. வி. ராஜமன்னுர்

# முன்னுரை

இந்நூலாசிரியர் வேதநாயகம் பிள்ளை (1826-1889) புகழ் பெற்ற உரைநடை ஆசிரியர். அவர் சிறந்த கவி என்று கூறுவதும் பொருந்தும். அவர் பாடிய சர்வசமய சமரசக் கீர்த்தனைகள் என்ற நூல், உண்மையை உரைத்து உள்ளத்தைக் கவர்வது.

பிரதாப முதலியார் சரித்திரம் 1876ல் முதன்முதலாக அச்சிடப் பெற்றது. இந்நூலில் பல உலக நீதிகள் தெளிவாக விளக்கப் பெறுகின்றன; பல இடங்களில் நகைச்சுவை மிளிர்கின்றது. மாணவர்க்கே அன்றி அனைவருக்கும் இது ஒரு பெரிய அறிவுப் புதையல் போன்றது.

விரிந்த இந்நூலைச் சுருக்கி அமைக்கும் பொறுப்பினைத் "தென் நாட்டு மொழிகளின் நூற்பொறுப்பு" (Southern Languages Book Trust) என்ற சிறந்த நிலையம் எமக்குத் தந்து போற்றியது. அதனால் இடையிடையே மலிந்து வரும் துணை வரலாற்றுப் பகுதிகளையெல்லாம் விட்டுவிட்டுப் பிரதாப முதலியார் சரித்திரத்தைமட்டும் தொடர்பு விடாது அமைத்துள்ளோம். இச்சுருங்கிய நூலளவினுக்குச் சிறிதும் குறையாததே இதில் விடப்பட்ட பகுதி.

இந்நூலில் பிறமொழிச் சொற்கள் கிருந்த எழுத்துக்களுடன் மலிந்து கிடக்கின்றன. அவைகளை நீக்கித் தமிழுருவாக்கி இந்நூலைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் அச்சிட்டு வெளியிட்டுள்ளது. ஆனால், யாம் ஆசிரியருடைய நடையினைச் சிறிதும் மாற்றாது சுருக்கியுள்ளோம். இதனைத் தமிழுலகம் படித்துப் பாராட்டி இன்புறுவதாக.

இதனை ஆக்கித் தமிழ் மக்களுக்கு உதவும் தென் நாட்டு மொழிகளின் நூற்பொறுப்பு வளர்ந்தோங்குவதாக! அதன் ஆதரவில் இதனை வெளியிட்டு உதவும் சென்னை, உமாதேவன் கம்பெனி சிறப்புற்று நீடூழி வாழ்வதாக!

*4—4—1957,*<br>*சங்கரநயினார் கோவில்.*

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை

# பதிப்புரை

" .........நம்முடைய சுய பாஷைகளில் வசன காவியங்கள் இல்லாமலிருக்கிற வரையில் இந்தத் தேசம் சரியான சீர் திருத்தம் அடையாது என்பது நிச்சயம்... "

இவ்வாறு, தமது முடிவான கருத்தை இந்நூலாசிரியர் தம் கதையின் மிக முக்கியமானதொரு பாத்திரத்தின் வாய்மொழி யாக வெளியிடுகிருர். அவர் எழுதிய ஒரு தொடரே இப்பதிப் புரைக்கு முகவுரையாக அமைந்துவிட்டது விசேஷந்தான்!

இந்நாவல் ஏறக்குறைய எண்பது ஆண்டுகளுக்கு முன் எழுதப் பெற்றது. அந்நாள், இலக்கியம் என்பது செய்யுள் வடிவத்தில்தான் இருக்க முடியும் என்ற எண்ணம் வேரூன்றி இருந்த காலம். புதிதாகப் பரவி வந்த ஆங்கில மொழி மோகத்தால் தமிழும் மற்றத் தேசீய மொழிகளும் வளர்ச்சியற்று வாடி நின்ற காலம் அது.

தமிழில் எளிய 'உரைநடை' என்பது, இத்தாலி தேசத் திலிருந்து கிறிஸ்தவச் சமயப் பணிக்காகத் தமிழ் நாட்டுக்கு வந்த பெஸ்கி பாதிரியாரால் உருவாக்கப்பட்டது. அவருக்கு முன் தமிழ் நூல்கள் எல்லாம் செய்யுள் வடிவிலேயே இயற்றப் பெற்று வந்தன. இறையனுர் அகப்பொருள் உரை யிலும், சிலப்பதிகாரத்தில் சில இடங்களிலும் உரைநடைப் பகுதிகள் உள்ளனவாயினும், 'வசனம்' எனும் வகையில் பண்டை நாளில் தமிழிலக்கியம் வளர்ச்சி பெறவில்லே. உரை யாசிரியர்கள் எழுதினவை பெயரளவில்தான் 'உரைநடை' என்று சொல்லக் கூடியவையாக இருந்தன. இதனுல் ஆழ்ந்த கல்வியறிவு பெற்றவரைத் தவிர, சாதாரணக் கல்வியறிவு உள்ள வர்களுக்கு இலக்கியம் என்பது எட்டாக் கனியாகவே இருந்து வந்தது. இந்த நிலேமை பெஸ்கி பாதிரியாரின் சமயப் பணிக்கு ஒரு முட்டுக்கட்டையாக இருந்தது. எனவே, அவர் சிறிது சிறி தாக உரைநடை ஒன்றை உருவாக்கி, அதில் தம் சமயப் பணிக் காக உதவக் கூடிய சில நூல்களேயும் எழுதி வெளியிட்டார். 'தமிழ் உரைநடையின் தந்தையார்' என்ற பாராட்டு அவருக்குப் பொருந்தும் என்ருலும், அவர் தம் சமயப் பணிக்காகவே உரை நடையை உருவாக்கினுர்.

அவர் காலத்துக்கு ஏறக்குறைய நூற்றிருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னர், உரைநடை பற்றி உயர்ந்த நோக்கம், கல்வியும் பண்பும் பொருந்திய ஒருவர் மனத்தில் கிளர்ந்து எழுந்தது. அவரே வேதநாயகம் பிள்ளையவர்கள். 'வசன நடை மட்டுமிருந்தால் போதாது; அந்நடையில் இலக்கியங்கள் எழ வேண்டும்; அப்போதுதான் நடையும் வளம் பெறும்; அந்நடையின் மூலம் இலக்கிய இன்பம் நுகரும் சாதாரண மக்களின் வாழ்வும் வளம் பெறும்,' என்பதை அறிந்தார் அவர். அப்போதிருந்த வசன நடையைத் தம் இலக்கியத்தை ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு வளப் படுத்தி, அவர் கருத்தழகும் நடையழகும் மிளிர, ஆங்காங்கே நகைச்சுவையும் தெறிக்க, "பிரதாப முதலியார் சரித்திரத்"தை இயற்றினர்.

இன்று, பலப் பலவாக வெளியிடப் பெறும் நாவல்களைத் தமிழ் மக்கள் ரசிக்கின்றனர். சில தமிழ் நாவல்கள் மக்கள் மனத்தை ஒரேயடியாகக் கொள்ளை கொண்டு, சாகா வரம் பெறக் கூடியவையாய் விளங்குகின்றன. உயர்ந்த உலக இலக்கியங்களோடு போட்டியிடும் மதிப்புக்கூட நமது நாவல் களுக்கு ஏற்பட்டுள்ளது. இத்தருணத்தில் நமது நாவலாசிரி யர்களுக்கெல்லாம் முன்னோடியாக வந்து வழி காட்டிவிட்டுச் சென்ற வேதநாயகம் பிள்ளையவர்களை நினைத்துக்கொள்வது நமக்கு நன்மை தருவதாகும்.

இந்நாவலின் முதனூல் சுமார் 380 பக்கங்கள் கொண்டது. இன்று நாவல் படிப்பதில் ஆர்வமுள்ளவர்கள் அவ்வளவு பக்கங்களையும் படிப்பது நல்லதுதான். ஆனல், இன்றைய வாழ்க்கை அவசர வாழ்க்கை. இன்று கற்பனையில் எழும் நாவல்களில்கூட வாழ்க்கை டெலிபோன், தந்தி, ரேடியோ, ஆகாய விமானம், தினசரிப் பத்திரிகை ஆகியவற்றை ஒட்டியே ஓடுவதைக் காண்கின்ருேம். இந்த அவசர யுகத்தின் தன்மையை உணர்ந்தே நாங்கள் தமிழகத்தின் முதல் நாவலான இதை 150 பக்கங்களில் சுருக்கி வெளியிட்டுள்ளோம். இதில் மூலக்கதையின் போக்கும் சுவையும் குன்ருத வகையில், இடையிடையே இருந்த கிளைக் கதைகள் அவற்றுடன் தொடர் புடைய வரலாறுகள் ஆகியவை மட்டுமே நீக்கப்பட்டுள்ளன. ஆசிரியரின் மூல நடையழகும் சொல்லாட்சியும் எவ்விதத் திலும் பாதிக்கப்படவில்லை. ஆகவே, பதிப்பு சுருங்கிய போதிலும் நாவலின் இலக்கிய மணமும் அழகும் குன்ற வில்லை.

இவ்வெளியீடு நாங்கள் ஆரம்பித்துள்ள இலக்கியப் பணியில் முக்கியமானதொரு முயற்சி என்று உணருகிறோம். நல்ல துறையில் எழும் முயற்சிகளுக்குத் தமிழகம் தன் ஆதரவைத் தர என்றும் தயங்கியதில்லை. அதுவே எங்கள் முயற்சிக்குத் தூண்டுகோலாக இருந்திருக்கிறது; இந்நூலைத் தமிழகம் வரவேற்கும் என்ற எங்கள் நம்பிக்கைக்கு அடிப்படையாக இருப்பதும் அதுவே.

பதிப்பகத்தார்

# 1. பிறப்பும், வளர்ப்பும்

இந்தத் தேசம் இங்கிலீஷ் துரைத்தனத்தார் ஸ்வாதீனமாகிச் சில காலத்திற்குப் பின்பு, சத்தியபுரி என்னும் ஊரிலே, தொண்டைமண்டல முதலிமார் குலத்திலே நான் பிறந்தேன். என் பாட்டனுராகிய ஏகாம்பர முதலியார் இந்தத் தேசத்தை ஆண்ட நவாபுகளிடத்தில் திவான் உத்தியோகம் செய்து, அள வற்ற திரவியங்களையும் பூஸ்திதிகளையும் சம்பாதித்தார். அவர் காலம் சென்ற பிறகு, அவருடைய ஸ்திதிகளெல்லாம் என் பிதாவுக்குக் கிடைத்து, அவர் அநுபவித்து வந்தார். என் தகப்பனுர் பெயர் கனகாசல முதலியார். என் தாயார் பெயர் சுந்தரத்தண்ணி. என்னுடைய பெயரைச் சொல்ல எனக்கே சங்கோசமாய் இருக்கின்றது. ஏனென்றுல், அந்த நாமத்துக்குத் தகுந்த குணம் என்னிடத்தில் இல்லை. மேலும், என்னுடைய பெயரை எழுதி நீட்டினுல், காதவழி தூரம் நீளும்; இந்தப் புஸ்தகமும் அந்தப் பெயருக்கே சரியாயிருக்கும். ஆகையால், என்னுடைய பெயரைச் சுருக்கி, 'பிரதாப முதலி' என்று என்னை எல்லாரும் கூப்பிடுகிறது வழக்கம்.

என் தாய்தந்தையருக்கு நான் ஏக புத்திரன் ஆதலால், என்னை மிகவும் அன்பு பாராட்டி அருமையாக வளர்த்தார்கள். என் தகப்பனுருடைய பிரியத்துக்கும் தாயாருடைய பிரியத்துக் கும் பேதம் என்னவென்றுல், என் தகப்பனுர் நாளை வருவதை யோசியாமல் இன்றைக்கு நான் சந்தோஷமாய் இருந்தால் போது மென்று நான் என்னுடைய இஷ்டப்பிரகாரம் கொட்டம் அடிக் கும்படி விட்டுவிடுவார்; என் தாயார் எப்போதும் நான் க்ஷேமமா யிருக்க வேண்டுமென்கிற நோக்கத்துடன் என்னை நயமும் பயமுமாக நடத்தி வந்தார்.

எனக்கு அஞ்சாம் பருவம் ஆரம்பமானது முதல் வித்தை கற்பிக்க வேண்டுமென்று என் தாயார் சர்வப் பிரயத்தனம் செய் தும் பலிக்கவில்லை. எனக்கு வயது போதாது என்று என் தகப்பனுர் காலதாமதம் செய்து வந்தபடியால், எட்டாம் வயது எட்டிப் பார்க்கிற வரையில், நான் சுத்த நிரக்ஷர குக்ஷியாயிருந்

தேன். என் மாதாவினுடைய அலட்டைப் பொறுக்கமாட்டாமல், என் தந்தையார் என்னை ஒரு நாள் தனியே அழைத்து, " உன் தாயார் உன்னைப் பள்ளிக்கூடத்தில் வைக்க வேண்டும் என்கிருளே! நீ என்ன சொல்லுகிருய்?" என்று கேட்டார். உடனே நான் என் தந்தையை நோக்கி, " ஐயா, நானும் படிக்க வேண்டுமா ? எனக்கு இருக்கிற சுய புத்தி போதாதா? ஏழைகள் ஜீவனம் செய்து பிழைக்க வேண்டியதற்காக அவர்களுக்குக் கல்வி அவசியந்தான். நான் படிக்க வேண்டிய அவசியம் என்ன ? ஏதாவது வாசிக்க வேண்டியிருந்தால் வாசிக்கவும், எழுத வேண்டியிருந்தால் எழுதவும் நமக்குக் காரியஸ்தர்கள் இல்லையா ? கணக்கர்கள் இல்லையா ?" என்றேன். இது நான் சுயமாகச் சொன்னதல்ல. என் பாட்டியார் அடிக்கடி அந்த வார்த்தைகளைச் சொல்ல நான் கேள்விப்பட்டிருந்ததால், அந்தப் பிரகாரம் நான் பாடம் பண்ணிக்கொண்டு சொன்னேன். அந்த வார்த்தைகள் என் சொந்த வார்த்தைகள் என்று என் பிதா எண்ணி, ஆநந்த சாகரத்தில் மூழ்கினர்.

இவ்வளவு சாதுரியமாய் நான் பேசின சமாசாரம் வீடு முழுவதும் பரவி, எங்கள் காரியஸ்தர்கள், கணக்கர்கள், பந்துக்கள், பணிவிடைக்காரர்கள் முதலான சகலரும் ஒவ்வொருவராய் வந்து, என்னுடைய சாமர்த்தியத்தைப் புகழ ஆரம்பித்தார்கள். என்னுடைய பாட்டியாரும் தம்முடைய உபதேசம் என்பதை மறந்துவிட்டு, என்னைக் கட்டித் தூக்கிக்கொண்டு, " என் கண்ணே ! பொன்னே ! இவ்வளவு சாமர்த்தியமாய்ப் பேச யாருக்காவது வருமா ?" என்று சொல்லிக்கொண்டு, நான் சுவாசம் விடுவதற்கு இடமில்லாமல் வாயாலும் பல்லாலும் அநேக முத்தங்கள் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த ஒவ்வொரு முத்தமும் எனக்குப் பிராணவஸ்தையாயிருந்தது. அப்போது அவ்விடத்திலே கட்டியிருந்த ஒரு கருங்குரங்கு, என் பாட்டியார் என்னை ஏதோ உபத்திரவம் செய்கிறதாக எண்ணிக்கொண்டு, அவர்கள் மேலே தாவி விழுந்து, அவர்களைக் கடிக்க ஆரம்பித்தது. அந்த வேதனை பொறுக்கமாட்டாமல், என் பாட்டியார் என்னைக் கீழே விட்டுவிட்டார்கள். நானும் அவர்கள் பற்கடிக்குத் தப்பிப் பிழைத்தேன்.

இவ்வளவு நடந்ததும் என் மாதாவுக்குத் தெரியாது. பிற்பாடு எவ்விதமாகவோ தெரிந்துகொண்டு, துயர முகத்தோடு வந்து என்னை நோக்கி, "என் கண்மணியே, நீ சொல்வது எவ்வளவும் சரியல்ல. கல்வி இல்லாதவர்களான சாமானிய பாமர ஜனங்களைப் பார். அவர்களுடைய செய்கைகளுக்கும் மிருகங்களுடைய செய்கைகளுக்கும் என்ன பேதம் இருக்கின்றது? நமக்கு முகக் கண்ணிருந்தும் சூரியப் பிரகாசம் இல்லாவிட்டால் என்ன பிரயோஜனம்? முகக் கண்ணுக்குப் பிரகாசம் எப்படி அவசியமோ, அப்படியே அகக் கண்ணுக்குக் கல்வியாகிய ஞானப்பிரகாசம் அவசியம் அல்லவா? சாணைக் கல்லில் தேய்க்கப்படாத நவரத்தினங்கள் பிரகாசிக்குமா? பிருதிவி ரூபமாயிருக்கிற பொன், வெள்ளி முதலான பஞ்சலோகங்களை எடுத்துக் காய்ச்சித் திரட்டாவிட்டால், அவைகளுக்கு ஒளி உண்டாகுமா? வெட்டித் திருத்தாத நிலம் கல்லும் முள்ளும் புல்லும் புதரும் மண்டிக் கெட்டுப் போவது போலக் கல்விப் பயிற்சியில்லாத மனம் துர்க்குணங்கள் நிறைந்து கெட்டுப் போகாதா? கல்வி ஏழைகளுக்குத்தான் முக்கியம் என்கிறாய். பல தொழில்களைக் கற்றுக்கொண்டு, பாடு பட்டுப் பிழைக்க வேண்டியவர்களான ஏழைகளுக்குப் படிக்க நேரம் ஏது? கல்வி விஷயத்தில் செலவழிக்க அவர்களுக்குப் பொருள் ஏது? அவர்கள் படித்தாலும், அரை படிப்பு, கால் படிப்புப் படிக்கலாமேயல்லாமல், பூரணமாய்ப் படிக்கக் கூடுமா? நாம் காரியஸ்தர்களுக்குமேல் அதிகமாய்ப் படித்திராவிட்டால் அவர்கள் நம்மை மதிப்பார்களா? அவர்களுடைய கணக்குகளிலிருக்கிற பிசகுகளை நாம் எப்படிக் கண்டுபிடிக்கக் கூடும்? வேலைக்காரர்கள், கிராமக் குடிகள் முதலானவர்களை நாம் எப்படி ஆளக் கூடும்? படியாதவர்கள் கையில் அகப்பட்ட தனமானது, பைத்தியக்காரர்கள் கையில் இருக்கிற கத்தி போலத் தங்களுக்கும் பிறருக்கும் துன்பத்தை விளைவிக்கும். ஆதலால், கல்வி தனவான்களுக்கே முக்கியம்," என்று என் தாயார் பிரசங்கித்தார்கள். அதைக் கேட்ட என் தகப்பனார், "நல்லது, பெண்ணே! உன் மனதுப் பிரகாரம் பிள்ளைக்கு வித்தியாப்பியாசம் செய்விக்க வேண்டிய முயற்சி செய்கிறேன்," என்றார்.

உடனே, என் தகப்பனர் ஒரு உபாத்தியாயரை எங்கள் வீட்டில் தினந்தோறும் வந்து எனக்குக் கற்பிக்கும்படித் திட்டம் செய்தார். எங்கள் கிராம காரியங்களையும், குடும்ப காரியங்களையும் என் தகப்பனர் எவ்வளவும் கவனிக்காமல் என் தாயாரே வகித்துப் பார்த்து வந்தபடியால், என் படிப்பைக் கவனிக்க என் தாயாருக்கு ஒரு நிமிஷமாவது ஒழிகிறதில்லை. ஆகையால், என் பாட்டியாரும் தகப்பனரும் என் கல்வி விஷயத்தில் கவனம் வைக்கத் தலைப்பட்டார்கள். அது எனக்கு அநர்த்தமாய் முடிந்தது. எனக்குப் படிக்க இஷ்டமான போது நான் படிக்கிறதென்றும், படிக்க இஷ்டமில்லாத போது நான் விளையாடுகிறதென்றும், என்னை உபாத்தியாயர் கண்டனை தண்டனை செய்யக் கூடாதென்றும், ஆனல் நான் படிப்பில் சுக்கில பட்சத்துச் சந்திரன் போல விருத்தி ஆக வேண்டுமென்றும் நிபந்தனை செய்தார்கள். இந்த நிபந்தனைகளின் பிரகாரம் சரியாய் நடக்கவில்லையென்று சில உபாத்தியாயர்கள் நீக்கப்பட்டார்கள். என்னை மரியாதையாக அழையாமல், 'வா,' 'போ,' என்று ஏகவசனமாகக் கூப்பிட்டதற்காகச் சில போதகர்கள் தள்ளப்பட்டார்கள். ஒரு உபாத்தியாயர் மாசம் முழுவதும் பிரயாசைப்பட்டுச் சொல்லிக் கொடுத்துச் சம்பளம் வாங்குகிற சமயத்தில் சம்பளம் இல்லாமல் நீக்கப்பட்டார். உபாத்தியாயர்களைத் தள்ளுகிற அதிகாரத்தை நானும் சில சமயங்களில் செலுத்தி வந்தேன். இவ்வகையாக நான் பன்னிரண்டு உயிர் எழுத்தும் கற்றுக்கொள்ளுவதற்குமுன் தள்ளுபடியான ஆசிரியர்களும் பன்னிரண்டு பேருக்கு அதிகமாயிருக்கலாம்.

இவ்வளவு ஆபத்துக்கும் தப்பி, ஒரு உபாத்தியாயர் மட்டும் நிலைத்திருந்தார். அவர் குடும்ப சகிதமாய் எங்கள் வீட்டில் இருந்துகொண்டு, எனக்கும் தம்முடைய பிள்ளை கனகசபை என்பவனுக்கும் பாடம் சொல்லிக்கொண்டு வந்தார். ஒரு நாள் என் பாட்டியார் உபாத்தியாயரைப் பார்த்து, "நம்முடைய பிள்ளையாண்டான் படித்துப் படித்துத் தொண்டை வறண்டு போகிறதே! இனிமேல் உம்முடைய மகன் கனகசபை பாடம் படிக்கட்டும். அவன் படிக்கிறதைக் கேட்டு, என் பேரன் கல்வி கற்றுக்கொள்ளட்டும். பிற்பாடு என் பேராண்டிக்குப் பாடம் தெரியாவிட்டால், அவனுக்குப் பயம் உண்டாவதற்காகக் கனக

சபையைப் பலமாக அடியும்," என்ருர்கள். உபாத்தியாயர், தமது வயிற்றுக்கொடுமையினுல் இந்த அநியாயமான நிபந்தனைக்கும் சம்மதித்தார். எனக்குப் பாடம் தெரியாத போதெல்லாம் உபாத்தியாயர் கனகசபையை அடிப்பார். அவன் இல்லாத போது உபாத்தியாயர் தம் முதுகிலும் அடித்துக்கொள்வார். நான் பாடத்தைச் சரியாய்ப் படித்த நேரமுமில்லை; கனகசபை அடிபடாத நேரமுமில்லை.

ஒரு நாள் உபாத்தியாயர் கனகசபையை முதுகில் அடித்த போது, அவன் அழுதுகொண்டு, " ஐயா! என் முதுகு ஒரு அபராதமும் செய்யவில்லையே! இவ்வளவு பாடும் வயிற்றுப் பிழைப்புக்காகத்தானே? ஆகையால், வயிற்றில் அடியுங்கள்!" என்ருன். அதைக் கேட்டவுடனே எனக்கு இரக்கம் உண்டாகி, என் கண்ணில் ஜலம் ததும்ப ஆரம்பித்தது. நான் ஒரு அட்சரம் கற்றுக்கொள்வதற்குக் கனகசபை அநேக அடிபடுவான். இப்படியாளுல், தமிழ் நெடுங்கணக்கு முழுவதும் எனக்குப் பாடம் ஆவதற்குமுன், அவன் எத்தனை அடிபட்டிருப்பானென்று புத்திமான்கள் கணக்கிட்டுத் தெரிந்துகொள்ளப் பிரார்த்திக்கிறேன். அவன் உயிருக்கும் உடலுக்கும் அபாயம் வரும்படியாக அவனுக்கு அடி வாங்கிக் கொடுத்த அட்சரங்களுக்கு உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து என்று பெயர் வந்தது கிரமம் அல்லவா?

## 2. பால லீலை

நான் படிப்பு விஷயத்தில் மந்தமாயிருந்தாலும், விளையாடுகிற விஷயத்தில் அதிக முயற்சி உள்ளவனுக இருந்தேன். என்னுடைய பாலிய சேஷ்டைகள் யாவருக்கும் வியப்பாயிருக்குமானதால், அவைகளில் சிலவற்றை அடியில் விவரிக்கிறேன்:

நானும் சில பிள்ளைகளும் தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது, அவர்களில் ஒரு பையன் என்னைப் பார்த்து,

" நான் கண்ணை மூடிக்கொண்டு ஒரு வித்தை செய்கிறேன் ; நீ அந்த வித்தையைக் கண்ணைத் திறந்துகொண்டு செய்வாயா ?" என்று கேட்டான். அதற்கு நான், " நீ கண்ணை மூடிக் கொண்டு செய்கிற வித்தையை, நான் கண்ணைத் திறந்து கொண்டு செய்யக் கூடாதா? அப்படி நான் செய்யாவிட் டால், உனக்கு நான் இவ்வளவு பந்தயம் கொடுப்பேன்," என்று ஒப்புக்கொண்டேன். உடனே அந்தப் பையன் நடுத் தெருவில் உட்கார்ந்து, கண்ணை மூடிக்கொண்டு, மண்ணை அள்ளி அள்ளித் தன் கண்மேலே போட்டுக்கொண்டான். பிற் பாடு அவன் என்னைப் பார்த்து, "நீ கண்ணைத் திறந்துகொண்டு இந்த வித்தையைச் செய்," என்று மண்ணை அள்ளி என் கை யில் கொடுத்தான். நான் கண்ணை இழந்து போவதைப் பார்க் கிலும் காசை இழப்பது நலமென்று நினைத்து, பந்தயக் காசை அவனுக்குக் கொடுத்துவிட்டேன்.

நானும், கனகசபையும், பின்னும் சில பிள்ளைகளும் எங்க ளுக்குத் தேக பலம் உண்டாவதற்காகச் சில நாளாய்ச் சிலம்பம் பழகிக்கொண்டு வந்தோம். ஒரு நாள் இராத்திரி வெகு நேரம் வரையில் நாங்கள் சிலம்பம் விளையாடிக்கொண்டிருந்து, வீட் டுக்கு வந்த போது, எங்கள் வீட்டுக்கு எதிரேயிருக்கிற மைதானத் தில் கூத்தாடிகள் வேஷம் போட்டுக்கொண்டு, ' இராம நாடகம்' ஆடிக்கொண்டிருந்தார்கள். நாங்கள் வந்தபோது இராமரும், சீதையும், இலட்சுமணரும் நகரத்தைவிட்டுப் புறப்பட்டுக் காட் டுக்குப் போகிற சமயமாயிருந்தது. அப்போது தசரதர், கௌசலை முதலான சகல ஜனங்களும் அழுது பிரலாபித்துக்கொண்டிருந் தார்கள். அதைக் கண்டவுடனே நான் கனகசபையைப் பார்த்து, "அந்தப் பொல்லாத கைகேசியினாலே இராமர் பட்டத்தை இழந்து ஆரணியம் போகவும், அதனால் சகல ஜனங்களும் மனமுருகி வாடவும் சம்பவித்திருக்கின்றதே! இந்த அநியாயத்தைப் பார்த்துக்கொண்டு நாம் சும்மா இருப்பது தர்மமா?" என்று கேட்க, அவன் " இந்த அக்கிரமத்தைத் தடுக்க முயற்சி செய்யா மல், நாம் சும்மா இருப்பது அழகல்ல," என்றான். நானும், அவ னும், மற்றப் பிள்ளைகளும் எங்கள் கைகளில் இருந்த சிலம்பக் கழிகளுடனே சென்று, வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த ஜனங்களின் தலைமேல் ஏறி மிதித்துக்கொண்டு, நாடகசாலைக்

குள்ளே பிரவேசித்து விட்டோம்; அங்கே தன் பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் ஆகுமென்கிற அகக்களிப்புடன் உட்கார்ந்து கொண்டிருந்த கைகேசியை வளைத்துக்கொண்டு, எங்கள் கை சலிக்கிறவரையில் அடித்தோம். அவள், "பரதனுக்குப் பட்டம் வேண்டாம்! வேண்டாம்!!" என்று சொல்லிக்கொண்டு ஓட்டம் பிடித்தாள். அப்போது கூனி அகப்பட்டிருந்தால், அவளை எம லோகத்துக்கே அனுப்பியிருப்போம். அவளுடைய அதிர்ஷ்டவசத் தால், அவள் அகப்படாமல் தப்பித்துக்கொண்டாள். காட்டுக்குப் போகிற இராமரிடத்திற்குப் போய், நகரத்துக்குத் திரும்பும்படிச் சொன்னோம். அவர், "பிதுர் வாக்கிய பரிபாலனம் செய்வதற்காக நான் காட்டுக்குப் போக வேண்டியது அவசியம்," என்றார். "நீர் போனால் காலை ஒடித்துவிடுவோம்," என்று வழிமறித்துக் கொண்டு, அவருக்கு நியாயத்தை எடுத்துக் காட்டி மெய்ப்பித் தோம்: "சும்மா இருந்த உம்மை, உம்முடைய தகப்பனார் அழைத்து, பட்டம் கட்டிக்கொள்ளும்படி சொல்லி, நீரும் அதற் குச் சம்மதித்து, ஊரெங்கும் முரசறைவித்த பிற்பாடு, உமக்குக் கொடுத்த ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுக்க அவருக்கு அதி காரம் உண்டா? அப்படி அவர் கொடுத்திருந்தால், அது அசத் தியம் அல்லவா? உமக்குப் பட்டாபிஷேகம் ஆனால்தான் உமது தந்தையாருடைய சத்தியம் நிலைக்கும்.

*'என்னை நிருப னியற்கை யிருந்தவா*
*தன்னை ரிலாத தலைமகற்குத் தாரணியை*
*முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்*
*பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்யென்பார்,'*

என்று கம்பரும் சொல்லியிருக்கிறபடியால், ஊருக்குத் திரும்பும்," என்றேன். இராமர் நான் சொன்ன வாய் நியாயத்தைப் பார்க்கி லும் தடியடி நியாயத்துக்குப் பயந்து, உடனே நகரத்துக்குத் திரும்பினார். நான் உடனே வசிஷ்டர் முதலானவர்களை அழைத்து, இராமருக்கு மகுடாபிஷேகம் செய்வித்தேன். இந்தப் பிரகாரம் இராமாயணம் சப்த காண்டத்தை ஒன்றரைக் காண் டத்துக்குள் அடக்கி, இராமரும், அவருடைய தம்பியும், சீதையும் வனத்துக்குப் போகாமலும், தசரதர் இறவாமலும், இராவணன் சீதையைச் சிறை எடுத்தான் என்னும் அபவாதம் இல்லாமலும்,

இராவணாதிகளை இராமர் கொலை செய்தார் என்கிற பழிச்சொல் இல்லாமலும், சிறு பிள்ளையாகிய பரதன் ராஜ்ய பாரம் தாங்கி வருந்தாமலும் செய்து, பிரதாப முதலி என்னும் என் பேரையும் நிலை நிறுத்தினேன்.

ஒரு நாள் நானும், கனகசபையும், பின்னும் சிலரும் எங்களுடைய வீரப் பிரதாபங்களைக் குறித்துப் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது நான் கனகசபையை நோக்கி, "அநேக சத்துருக்களை நான் ஓடும்படிச் செய்தேன்," என்றேன். அவன், "எப்படி ஓடச் செய்தீர்கள் ?" என்று கேட்க, "நான் சத்துருக்களைக் கண்டவுடனே ஓட ஆரம்பித்தேன். அவர்கள் என்னைத் துரத்திக்கொண்டு ஓடி வந்தார்கள். இப்படியாக நான் சத்துருக்களை ஓடச் செய்தேன்," என்றேன். அப்போது கூட இருந்த ஒரு சிப்பாய், தான் ஒரு சண்டையில் எதிரியினுடைய காலை வெட்டினதாக வீரம் பேசினான். நான் அவனைப் பார்த்து, "எதிரியினுடைய தலையை வெட்டாமல் காலை வெட்டின காரணம் என்ன ?" என்று கேட்க, அந்தச் சிப்பாய், "நான் என்ன செய்வேன் ? எதிரியினுடைய தலையை வேறொருவன் முன்னமே வெட்டிக்கொண்டு போய்விட்டான்," என்றான்.

எனக்காகக் கனகசபை படிப்பதும், எனக்காக அவன் அடிபடுவதும் என் தாயாருக்குச் சில நாள் வரைக்கும் தெரியாமலிருந்து, பிற்பாடு தெரிந்ததாகத் தோன்றுகின்றது. ஒரு நாள் அவர்கள் என்னையும் கனகசபையையும் அழைத்து, இருவருக்கும் இலை போட்டு, கனகசபை இலையில் மட்டும் அன்னம், பட்சணம் முதலியவைகளைப் படைத்து, என்னுடைய இலையில் ஒன்றும் படையாமல் வெறுமையாய் விட்டுவிட்டார்கள். என் மாதாவைப் பார்த்து, எனக்கும் அன்னம் படைக்கும்படி வேண்டினேன். அவர்கள், "கனகசபை அமுது செய்கிறதைப் பார்த்துக் கொண்டிரு," என்றார்கள். "அவன் அமுது செய்கிறதைப் பார்த்துக்கொண்டிருந்தால், எனக்குப் பசி அடங்குமா ?" என்றேன். "அவன் படிக்கிறதையும் அடிபடுகிறதையும் நீ பார்த்துக்கொண்டிருந்தால், உனக்கு வித்தை வருமா ?" என்றார்கள். அன்றையத் தினம் எனக்கு அன்னப்பிடி வெல்லப்பிடியாய் விட்டது. எனக்காக ஒரு ஏழைப் பிள்ளையை

அடி படும்படிச் செய்வித்தது பெரிய அக்கிரமம் என்று என் தாயார் நீண்ட பிரசங்கம் செய்ததுமன்றி, என்னைப் பார்த்து, "நீ படவேண்டிய அடியைக் கனகசபை ஏற்றுக் கொண்டால், நீ அனுபவிக்கிற சுகங்களிலும் அவனுக்குப் பங்கு கிடைக்க வேண்டியது நியாயம்," என்று சொல்லி, அன்று முதல் எல்லா விஷயங்களிலும் எனக்கும் கனகசபைக்கும் யாதொரு பேதமுமில்லாமல், இருவரையும் ஒரே தன்மை யாய் நடத்தி வந்தார்கள். இனிமேல் நான் என் வீட்டில் படிப்பது சரியல்லவென்று என் மாதா அபிப்பிராயப்பட்டு, எங்க ளுடைய சம்பந்தி முதலியார் வீட்டில், அவருடைய மகளோடு கூட வேறொரு தகுந்த உபாத்தியாயரிடத்தில், நானும் கனக சபையும் படிக்கும்படித் திட்டம் செய்தார்கள். அன்று முதல் என் படிப்பும் பிழைத்தது; கனகசபை முதுகும் பிழைத்தது. கனகசபையின் தகப்பனார் சாந்தலிங்கம் பிள்ளையை என் தாயார் கை விடாமல், அவரை எங்கள் குடும்பத்தில் பிரதானக் காரியஸ்தராக நியமித்து, அவரையும் அவருடைய குடும்பத்தை யும் சம்ரட்சணை செய்து வந்தார்கள்.

## 3. ஞானம்பாளுடைய குணாதிசயங்கள்

**ச**ம்பந்தி முதலியார், என் தாயாருடன் பிறந்த அம்மான். அவ ருடைய பாட்டனார், என்னுடைய பாட்டனாரைப் போலவே, கர்நாடக ராஜாங்கத்தில் உத்தியோகம் செய்து, அநேக திரவி யங்களைச் சம்பாதித்துக்கொண்டு, சத்தியபுரியில் வந்து வசித்தார். அவருடைய குமாரன் சந்திரசேகர முதலியாருக்குச் சம்பந்தி முதலியாரும் என் தாயாரும் சந்ததிகள். அவர்களுக்கும் எங்க ளுக்கும் நெடுங்கால சம்பந்தம்.

மேற்படி சம்பந்தி முதலியாரும், எங்களைப் போலவே தனத் தில் மிகுந்தவர். அவருக்கு வெகுகாலம் பிள்ளையில்லாமலிருந்து,

பிற்பாடு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அந்தப் பெண்ணுக்கு ஞானம்பாள் என்ற நாமகரணம் செய்தார்கள். உலகத்திலிருக்கிற அழகுகளெல்லாம் கூடி ஒரு பெண் வடிவம் எடுத்து வந்தாற் போல, அவள் அதிரூபலாவண்ணியம் உடையவள். அவளுடைய குணதிசயங்களை யோசிக்குமிடத்தில், ஞானம்பாள் என்கிற பேர் அவளுக்கே தகும்!

சம்பந்தி முதலியார் பிரபலமான திரவியவந்தராயிருந்தும், செலவழிக்கிற விஷயத்தில் அவருக்குச் சமானமான தரித்திரர்கள் ஒருவரும் இல்லை. அவர் பிராணத் தியாகம் செய்தாலும் செய்வாரே அல்லது பணத் தியாகம் செய்ய மாட்டார். 'கொடு' என்கிற வார்த்தையைக் கேட்டால், அவர் காதில் நாராசம் காய்ச்சி விட்டது போல இருக்கும். சங்கீதம் வாசிக்கிறவர்கள், 'தா, தா' என்று தாளம் போட்டாலும், அவர் சண்டைக்கு வருவார். யாராயினும் ஒருவர், தாதனைப் பார்த்துத் 'தாதா' என்று கூப்பிட்டாலும், அவர் சகிக்க மாட்டார்.

இப்படிப்பட்ட கிருபண சிரோமணியை, ஞானம்பாள் ஐந்து வயதுக் குழந்தையாயிருக்கும்போது, ஒரு வார்த்தையினலே திருப்பிவிட்டாள் : அவருடைய கிராமக் குடிகள் தாம் செலுத்த வேண்டிய குத்தகைப் பணத்தை எடுத்துக்கொண்டு, ஒருநாள் அவருடைய வீட்டுக்கு வந்தார்கள்; அவர்களை அவர் தம்முடைய பொக்கிஷ அறைக்குள் அழைத்துக்கொண்டு போய், அவர்கள் கொண்டுவந்த பணத்தைத் திருப்பித் திருப்பிப் பத்து தரம் எண்ணி, வாங்கி வைத்துக்கொண்டு அவர்களுக்குச் செலவு கொடுத்து அனுப்பினர். அவர்கள் வெளியிலே போகும்போது, "அந்த லோபியின் பணப் பெட்டிகளை நாம் பார்த்துவிட்டோம்; ஆதலால், நாமும் இனிமேல் பணக்காரர்கள்தான்; அவரும் பணத்தைப் பார்க்கிறதே தவிரச் செலவழிக்கிறதில்லை. நாமும் அப்படித்தான்," என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு போனர்கள். அப்போது தெருவில் விளையாடிக்கொண்டிருந்த ஞானம்பாள் அதைக் கேட்டு, உடனே அழுதுகொண்டு, தகப்பனரிடம் போய், "ஐயா! லோபி என்றால் என்ன அர்த்தம்?" என்று கேட்டாள். அவர், "லோபி என்றால் ஈயாதவன்," என்று சொன்னர். அவள், "அப்படியானல், உங்களைப் பல

பேர்கள், 'லோபி; லோபி,' என்று சொல்லுகிறார்கள். உங்களுக்கு மகளாயிருக்க எனக்கு வெட்கமாயிருக்கிறது,'' என்று மழலைச் சொற்களால் சொன்னதைக் கேட்டவுடனே, சம்பந்தி முதலியாருக்கு வெட்கம் உண்டாகி, அன்று முதல் அவர் லோப குணத்தை விட்டுவிட்டு, 'தாதா' என்று பல பேரும் சொல்லும் படிப் புது மனுஷனாக மாறிவிட்டார் !

ஞானம்பாளுடைய புத்தி தீக்ஷணியம் தெரியும்படியாக, இன்னொரு விசேஷம் தெரிவிக்கிறேன் : ஒரு நாள் தமக்குச் சமானமானவர்கள் ஒருவருமில்லை என்கிற கர்வத்தோடும் கூடிய ஒரு பெரியவர், சம்பந்தி முதலியார் விட்டுக்கு வந்திருந்தார்; அப்போது அவ்விடத்திலிருந்தவர்கள் ஞானம்பாளைக் காட்டி, "இந்தக் குழந்தை இவ்வளவு சிறு பிராயத்தில் அதிக தீக்ஷணியம் உள்ளதாய் இருக்கிறது,'' என்றார்கள். அதைக் கேட்ட அந்தப் பெரியவர், "சிறு வயதிலேயே புத்திசாலியாயிருக்கிற பிள்ளை, பிற்பாடு மட்டியாய்ப் போகிறது சகஜம்,'' என்றார். உடனே ஞானம்பாள் அவரைப் பார்த்து, "அப்படியானால், தாங்கள் சிறு பிராயத்தில் அதிக புத்திசாலியாயிருந்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்,'' என்றாள்.

என் தாயார் உத்தரவுப்படி, நானும் கனகசபையும் சம்பந்தி முதலியார் வீட்டுக்குப் போய் ஞானம்பாளுடைய உபாத்தியாயராகிய கருணாநந்தப் பிள்ளையிடத்தில் கல்வி கற்க ஆரம்பித்தோம். எங்களுடைய படிப்பைப் பரிசோதிக்கிறதற்காக அந்த உபாத்தியாயர் எங்களைப் பார்த்து, "உயிரெழுத்து எத்தனை ? மெய்யெழுத்து எத்தனை ?'' என்று கேட்டார். அதற்கு உத்தரவு சொல்லத் தெரியாமல், நான் கனகசபை முகத்தைப் பார்த்தேன். அவன் ஆகாசத்தைப் பார்த்தான். பிற்பாடு, ஏதாவது சொல்லித் தொலைக்க வேண்டுமே என்று நான் நினைத்து, "உயிரெழுத்து 50, மெய்யெழுத்து 100,'' என்றேன்.

உடனே உபாத்தியாயர் அதிகாரம் செய்து, "நீ சொல்வது சரியல்ல. ஞானம்பாளை அழைத்து வா,'' என்று உத்தரவு கொடுத்தார். நான் ஞானம்பாளிடத்திலே போய், "உயிரெழுத்து எத்தனை ? மெய்யெழுத்து எத்தனை ?'' என்று கேட்க, அவள், "உயிரெழுத்து பன்னிரண்டு; மெய்யெழுத்து பதி

னெட்டு,'' என்று சொன்னுள். "நான் 'உயிரெழுத்து ஐம்பது, மெய்யெழுத்து நூறு' என்று அவ்வளவு அதிகமாய்ச் சொல்லியும் உபாத்தியாயர் ஒப்புக்கொள்ளவில்லையே! நீ குறைத்துச் சொல்லுகிறதை அவர் ஒப்புவாரா?'' என்று சொல்லி, அவளை அழைத்துக்கொண்டு போய் உபாத்தியாயர் முன்பாக விட்டேன். அவள், அவரிடத்தில் முன் சொன்னபடியே சொன்னுள். உபாத்தியாயர், அவள் சொன்னதுதான் சரியென்று, எங்களுக்குத் தெரிவித்தார்.

ஒரு நாள் நானும் ஞானம்பாளும் படித்துக்கொண்டிருக்கும் போது என் பாட்டியார் என்னைப் பார்க்க வந்தார்கள். அவர்களைக் கண்டவுடனே, ஞானம்பாள் அவ்விடத்திலே கிடந்த பிரம்பை எடுத்து ஒளிப்பது போல ஜாலம் செய்தாள். "என்னைக் கண்டவுடனே ஏனம்மா பிரம்பை எடுத்து ஒளிக்கிருய்?'' என்று என் பாட்டியார் கேட்க, ஞானம்பாள், "உங்களுடைய பேரனுக்குப் பாடம் தெரியாவிட்டால் என்னை அடிப்பீர்கள் என்று பயந்து பிரம்பை ஒளித்தேன். அடிபடுவதற்குக் கனகசபை அண்ணனும் இங்கு இல்லையே!'' என்ருள்.

எங்கள் உபாத்தியாயரிடத்தில் நான் பல புத்திமதிகளைக் கற்றுக்கொண்டது போலவே, என் தாயாரிடத்திலும் ஞானம்பாளிடத்திலும் அநேக நற்குணங்களைக் கற்றுக்கொண்டேன். எந்தக் காலத்திலாவது அவர்களிடத்தில் கோபம், குரோதம், மூர்க்கம் முதலான துர்க்குணங்களை நான் கண்டதேயில்லை. எப்போதும் கடுர வார்த்தைகளை அவர்களிடத்தில் நான் கேட்டதேயில்லை. அவர்கள் வாயிலிருந்து வருவதெல்லாம் உண்மையே தவிர, பொய் என்பது மருந்துக்குக்கூடக் கிடையாது. ஒரு நாள் என் முகத்தைக் கடுகடுத்துக்கொண்டு, பல்லைக் கடித்துக்கொண்டு என் வேலைக்காரனைக் கோபித்தேன். அப்போது கூட இருந்த ஞானம்பாள் ஒன்றும் பேசாமல் எழுந்து போய் விட்டாள். பிறகு அவளை நான் கண்டு, "ஏன் போய்விட்டாய்?'' என்று கேட்க, "உங்களுக்குக் கோபம் வரும்போது, உங்களைப் பார்த்தால் எனக்குப் பயமாயிருக்கிறது. நீங்கள் கோப முகத்தோடு கண்ணுடியைப் பார்த்தால், உங்களுக்குத் தெரியும்,'' என்று சொன்னுள். நான் தனிமையாகப் போய், கோப முகத்

துடனே கண்ணுடியைப் பார்த்தேன்; அப்போதிருந்த கோரம் எனக்கே சகியாமல், அன்று முதல் கோபத்துக்கு விடை கொடுத்துவிட்டேன்.

## 4. கனகசபை சரித்திரம்

எங்கள் வீடுகளுக்குப் பின்புறத்தில் எண்ணிக்கையில்லாத பல மரங்கள் நிறைந்த சிங்காரத் தோட்டமும், பூஞ்சோலை களும், தாமரைத் தடாகங்களும் இருந்தன. நாங்கள் படிக்கிற நேரம் போக மற்ற நேரங்களில் அந்தச் சிங்காரத் தோட்டத்தில் விளையாடுகிறது வழக்கம். விளையாடுகிற நேரத்தையும் ஞானும் பாள் தர்ம விஷயங்களில் உபயோகப்படுத்தி வருவாள்: சிங் காரத் தோட்டத்தில் பழுத்திருக்கிற மாங்கனிகள், தேங்கனி கள், வாழைக்கனிகள், பலாக்கனிகள், விளாங்கனிகள் முத லியவைகளைப் பறித்து ஏழைகளுக்குக் கொடுத்து வருவாள். அந்தத் தோட்டத்தில் இருக்கிற பறவைகளை ஒருவரும் பிடிக்கா மலும், உபத்திரவம் செய்யாமலும் ஞானும்பாள் பாதுகாத்து வந்தபடியால், அவைகள் மேன்மேலும் பெருகி, அவளைக் கண்ட வுடனே ஆடிப்பாடிக் குதித்து விளையாடி, மகோற்சவம் கொண் டாடும். சாதுக்களைக் கண்டால் சந்தோஷப்படாதவர்கள் யார்?

ஒரு நாள் நாங்கள் தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் போது ஒரு மரத்தில் அபூர்வமாய்ப் பழுத்திருந்த இரண்டு பழங் களை ஞானும்பாள் பறித்துக்கொண்டு வந்து, என் முன்பாகவும் கனகசபை முன்பாகவும் வைத்துப் புசிக்கும்படிச் சொன்னுள். நான், கணக்கில் என் வல்லமையைக் காட்டுவதற்காக, அவளைப் பார்த்து, "இவை எத்தனை பழங்கள்?" என்றேன். அவள், "இரண்டு," என்ருள். நான், "மூன்று," என்றேன். அவள், "எப்படி?" என்று கேட்க, அந்தப் பழங்களை வரிசையாய் வைத்து எண்ணும்படிச் சொன்னேன். அவள், "ஒன்று, இரண்டு," என்று எண்ணினுள். நான் உடனே, "ஒன்றும் இரண்டும்

மூன்று அல்லவா ?" என்றேன். அவள், "ஆம் ; ஆம்" என்று கூறிவிட்டுக் கனகசபையைப் பார்த்து, "அண்ணு! நீங்கள் ஒரு பழம் தின்னுங்கள் ; நான் ஒரு பழம் எடுத்துக் கொள்ளுகிறேன் ; அத்தான் ஒரு பழம் அருந்தட்டும்," என்று சொல்லி, ஒரு பழத்தைத் தின்றுவிட்டாள். கனகசபை ஒரு பழத்தை விழுங்கிவிட்டான். நான் ஒன்றுமில்லாமல் வெறும் வாயைச் சப்பினேன். இவ்வகையாக என் கணக்கின் சாமர்த் தியத்தைக் காட்டப் போய்க் கனியை இழந்து ஏமாறினேன்.

கனகசபை நற்குணமும் நற்செய்கையும் உடையவனும், விவேக விற்பன்னனும், சர்வ ஜன ரஞ்சகனும் இருந்தான். எப்போதும் விநோதச் சல்லாபப் பிரியனுன அவன் சில நாளாக நன்ருய் விளையாடாமலும், பேசாமலும், துக்கம் மிகுந்த வனுய் மௌனம் சாதித்தான். "அதற்குக் காரணம் என்ன ?" என்று அவனை நான் பல முறை கேட்டும், அவன் தக்க மறு மொழி சொல்லாமல் மழுப்பிவிட்டான்.

ஒரு நாள் சிங்காரத் தோட்டத்தின் கடைசியில் இருக்கிற ஒரு பெரிய தாமரைத் தடாகத்தின் ஓரத்தில் நானும், ஞானம் பாளும், கனகசபையும் விளையாடிக்கொண்டிருந்தபோது, கனக சபை கால் தவறி அந்தத் தடாகத்தில் விழுந்துவிட்டான். அவன் நீந்தத் தெரியாதவனுனதால், தண்ணீரில் முழுகுகிறதும், கிளம்புகிறதுமாகத் தத்தளித்துக்கொண்டிருந்தான். நானும் நீந்தத் தெரியாதவனுதலால், இன்னது செய்கிறதென்று தோன் ருமல் மலைத்துப் போய் நின்றுவிட்டேன். ஞானம்பாள் அலறிக் கொண்டு அங்கும் இங்கும் ஓடிப் பார்த்தும், உதவி செய்யத் தக்கவர்கள் ஒருவரும் அகப்படவில்லை. எங்கள் வீடு வெகு தூரமானதால், அங்கே போய் யாரையாவது அழைத்துச் கொண்டு வருவதும் அசாத்தியமாயிருந்தது. இதையெல்லாம் ஞானம்பாள் ஒரு க்ஷணப் பொழுதில் ஆலோசித்து, சிங்காரத் தோட்டத்தின் கடைசியிலிருக்கிற திட்டிவாசலைத் திறந்து கொண்டு வெளியே ஓடினுள் ; அவ்விடத்திலும் ஒருவரும் சமீபத் தில் இல்லாமையால், தூரத்தில் ரஸ்தாவில் நடந்துகொண் டிருந்த ஒரு சந்நியாசியாரை, "ஐயா ! ஐயா !" என்று கூப்பிட் டுக்கொண்டு மான் போல அதிவேகமாக ஓடினுள். அவள்

தனிமையாக ஓடுகிறதைப் பார்த்து நானும் கூட ஓடினேன். ஞானும்பாள் சந்நியாசியாரை நோக்கி, "ஐயா! ஒரு சிறுவன் குளத்தில் விழுந்துவிட்டான்; தாங்கள் தயவு செய்து வந்து, அவனைக் கரையேற்ற வேண்டும்," என்று மிகவும் வணக்கத்துடனே பிரார்த்தித்தாள். அந்தச் சந்நியாசியாரும் உடனே திரும்பி, எங்களுடன் ஓடி வந்தார். அவர் ஓடி வரும்போதே ஞானும்பாளைப் பார்த்து, "அந்தப் பிள்ளையை நான் கரையேற்றினுல், நீ காதில் போட்டிருக்கிற வயிர ஓலைகள் முதலிய நகைகளைக் கொடுப்பாயா?" என, அவள், "அப்படியே தருகிறேன்," என்றுள். நாங்கள் வரப் பின்னும் சற்று நேரம் தாமதப்பட்டிருக்குமானுல், கனகசபை ஜலத்தில் மூழ்கி இறந்து போயிருப்பான் என்பது நிச்சயம். சந்நியாசியார், ஒரு நிமிஷத்தில் தடாகத்தில் குதித்து, கனகசபையைக் கரையேற்றிவிட்டார். அவன் ஜலத்தைக் குடித்து மூர்ச்சையாயிருந்ததால், அவன் குடித்த ஜலம் வெளிப்படும்படி, சந்நியாசியார் தகுந்த பக்குவங்கள் செய்து, அவன் பிராணனைக் காப்பாற்றினுர்.

ஞானும்பாள் தன் காதில் இருந்த பூஷணங்களைக் கழற்ற ஆரம்பித்தாள். சந்நியாசியார், "வேண்டாம்! வேண்டாம்!!" என்று கையமர்த்தி, அவளைப் பார்த்து, "உன்னுடைய மனேதர்மத்தை அறிவதற்காக அந்த நகைகளைக் கேட்டேன். அவைகளை நீ கொடுத்தாலும், நான் அங்கீகரிப்பேனே? ஒரு பிராணனைக் காப்பாற்றிய புண்ணியம் எனக்குப் போதாதா? எனக்கு இயற்கையாக இல்லாவிட்டாலும், உன்னைப் பார்த்த பிறகாகிலும் எனக்குத் தர்ம சிந்தனை இல்லாமல் போகுமா? இவ்வளவு சிறு பிராயத்தில் ஒரு பிராணனைக் காப்பாற்ற நீ எவ்வளவோ முயற்சி செய்தாயே! இம்மையிலும் மறுமையிலும் சகல பாக்கியங்களையும் கடவுள் உனக்குத் தந்தருள்வாராக," என்று ஆசீர்வாதம் செய்து, ஒரு நிமிஷத்தில் போய்விட்டார். நாங்கள் ஒன்றும் பேச நாவெழாமல் பிரமித்துப் போய் நின்றேம். பதினுயிரம் பொன் பெற்ற ஆபரணங்களைக் கொடுக்க சம்மதித்த ஞானும்பாளுடைய குணம் பெரிதா, அவைகளை வேண்டாமென்று நிராகரித்த சந்நியாசியாருடைய குணம் பெரிதாவென்று நான் சற்று நேரம் ஆலோசித்து, ஞானும்பாளுடைய குணமே விசேஷம் என்று தெளிந்துகொண்டேன்.

இதுவரையும் பேசச் சக்தி இல்லாமல் களைத்துப் போயிருந்த கனகசபைக்குக் கொஞ்சம் திடம் உண்டாகி, அவன் எங்களைப் பார்த்து, "தாய் தகப்பன் இல்லாமல் நிராதரவாயிருக்கிற எனக்கு, இவ்வளவு பெரிய உபகாரம் செய்தீர்களே! அதற்கு நான் என்ன பிரதி உபகாரம் செய்யப் போகிறேன்!" என்று உபசார வார்த்தைகள் சொல்லத் தொடங்கினான். எனக்கு ஆச்சரியம் உண்டாகி, "உனக்குத் தாய்தந்தையர் இருக்கும் போது, தாய் தகப்பனற்ற பிள்ளையென்று நீ சொன்னதற்குக் காரணம் என்ன?" என்று நான் வினவ, கனகசபை கண்ணீர் விட்டு, அழுதுகொண்டு சொல்லுகிறான்:

"என் பிரியமான அண்ணனே! தங்கையே! என் பிராணனைக் காப்பாற்றின உங்களுக்கு இனிமேல் நான் உண்மை சொல்லாமல் இருக்கலாமா? உங்களுடைய முந்தின ஆசானாகிய சாந்தலிங்கம் பிள்ளையையும், அவருடைய பத்தினியையுமே நான் தந்தை தாய் என்று நினைத்திருந்தேன். அவர், சில நாளைக்கு முன் கடின வியாதியாயிருந்த போது, இனிமேல் ஜீவதசைக்கு ஏதுவில்லையென்று நினைத்துக்கொண்டு, என்னை ரகசியத்தில் கூப்பிட்டு, 'குழந்தாய்! உனக்குத் தெரியாமல் இந்நாள்மட்டும் நான் மறைத்து வைத்திருந்த ஒரு ரகசியத்தை உனக்கு வெளிப்படுத்துகிறேன்: நானும் என் பெண்சாதியும் உன் பெற்றோர்கள் அல்ல. இதற்குப் பன்னிரண்டு வருஷத்துக்கு முன், நீ ஆறு மாதக் குழந்தையாயிருக்கும்போது, ஒருவன் உன்னைக் கொண்டுவந்து, பிள்ளைக்குப் பால் வேண்டுமென்று கேட்டான். அதற்குக் கொஞ்ச நாளைக்கு முன், என் பெண்சாதிக்கு ஒரு குழந்தை பிறந்து இறந்து போய்ப் பால் வற்றாமல் இருந்ததால், அவள் உன்னை வாங்கி மார்பிலே வைத்து அணைத்தாள். உடனே, அவளுக்குப் பால் சுரந்து, நீ சம்பூரணமாகப் பால் குடித்தாய். உன்னைக் கொண்டுவந்தவன் மறுபடியும் உன்னை எடுத்துக்கொண்டு போவதற்கு அவனால் கூடியமட்டும் பிரயாசைப்பட்டும், நீ என் பெண்சாதியை விடாமல் கட்டிப்பிடித்துக்கொண்டு அழுதாய். அவன், "இந்தப் பிள்ளை உங்களுக்கு வேண்டுமானால், நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்," என்று சொல்லிப் போய்விட்டான். இப்படிப்

பட்ட அதிசௌந்தரியமான பிள்ளை நமக்குக் கிடைத்ததே என்கிற ஆநந்தத்தினுல், நீ யாருடைய பிள்ளையென்று அவனை விசாரியாமல், உன் மேலே நோக்கமாய் இருந்துவிட்டோம். ஆனுல், அவன் கேவலம் சாமானியன் ஆனதால், அவனுக்கு நீ பிள்ளை அல்லவென்பது நிச்சயம். அதுமுதல் உன்னைக் கண்ணுக்குக் கண்ணுகவும், பிராணனுக்குப் பிராணனுகவும் வளர்த்தோம். நீயும் சொந்தப் பிள்ளையைப் பார்க்கிலும், நூறு பங்கு அதிகமாகச் சகல விதத்திலும் திருப்தியாக நடந்து வந்தாய். இனி, நான் பிழைப்பேன் என்கிற நம்பிக்கை இல்லாமையினுலும், ஒரு வேளை உன் பெற்ருேர் உன்னைத் தேடி வந்தால், உனக்கு உண்மை தெரிந்திருக்க வேண்டியதானதனுலும் இந்தக் காரியத்தை உனக்குத் தெரிவித்தேன். இப்போது நம்மை ஆதரிக்கிற சுந்தரத்தண்ணியாரும் அவருடைய பர்த்தாவும் உன்னையும் உன்னுடைய செவிலித் தாயையும் கைவிடார்கள். நீ மனம் வருந்தாதே,' என்ருர்.

"பிற்பாடு, ஏதோ கடவுளுடைய அனுக்கிரகத்தால், என்னை வளர்த்த பிதாவாகிய சாந்தலிங்கம் பிள்ளை ஆரோக்கியம் அடைந்து, பிழைத்துக்கொண்டது உங்களுக்குத் தெரியுமே. அவர் சொன்ன விருத்தாந்தத்தைக் கேட்டது முதல் எனக்கு உண்டாயிருக்கிற கிலேசமும், துக்கமும் கடவுளுக்குத்தான் தெரியும்! அந்தக் காரணத்தைப் பற்றித்தான் சில நாட்களாக நான் சரியாய் விளையாடாமலும், பேசாமலும் இருந்தேன். என்னைப் போல நிர்ப்பாக்கியர்கள் உலகத்தில் இருப்பார்களா? தாய் தகப்பன் இன்னுரென்று தெரியாத பிள்ளைகளும் இருக்குமா? பால் குடிக்கிற குழந்தையைக் கைவிடுகிற தாய்தந்தையரும் பூமியில் இருப்பார்களா? அவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருக்க வேண்டும்? உலக அபவாதத்தை யார் தடுக்கக்கூடும்? தடாகத்தில் விழுந்த என்னைக் கரையேற்றி, ஏன் என்னைப் பழிக்கும் நிந்தைக்கும் ஆளாக்கினீர்கள்? நான் அப்போதே இறந்து போயிருந்தால், என்னுடைய துக்கமும், அவமானமும் என்னுடன் இறந்து போயிருக்குமே!"

கனகசபை இவ்வாறு சொல்லித் தாரை தாரையாய்க் கண்ணீர்விட்டு அழுதான். அவனுடைய துக்கத்தைப் பார்த்து

நானும் ஞானும்பாளும் கூட அழுதோம். பிற்பாடு எங்கள் மனதைத் தேற்றிக்கொண்டு, எங்களாலே கூடிய வரையில் அவ னுக்கு ஆறுதலான வார்த்தைகளைச் சொல்லியும், அவன் மனம் தேறவில்லை. அவனுடைய மனோ வியாகூலத்தால், அவன் நாளுக்குநாள் இளைத்துத் துரும்புபோல ஆனான். அவனுடைய சங்கதியை வெளிப்படுத்தினால், அவனுக்கு அவமானம் உண்டா கும் என்று நினைத்து, அதை நாங்கள் ஒருவருக்கும் தெரிவிக்க வில்லை. ஆனால், என் தாயார் மட்டும் அந்த ரகசியத்தை எப்படியோ தெரிந்துகொண்டு, கனகசபையிடத்தில் அத்தியந்த கிருபையும் அன்பும் பாராட்டி வந்தார்கள்.

## 5. கனகசபையின் பெற்றோர் வருகை

சில நாள் கழிந்த பின்பு, ஒரு நாள் நானும், ஞானும்பாளும், கனகசபையும் தெருத்திண்ணையில் வாசித்துக்கொண் டிருந்தோம். அப்போது அனேக யானைகளும், குதிரைகளும், வண்டிகளும், கொடிகளும், குடைகளும், காலாட்களும் நானாவித வாத்திய முழக்கத்துடன் தெருவில் வந்து, எங்கள் வீட்டுக்கு எதிரே நின்றன. அவைகளின் மத்தியில் வந்த நாலு குதிரை கள் கட்டின ரதத்திலிருந்து ராஜ வடிவான ஒரு புருஷனும் ஸ்திரீயும் இறங்கினார்கள். தடாகத்தில் விழுந்தபோது கனக சபையைக் கரையேற்றிவிட்ட சந்நியாசியாரும் அவர்களுக்கு முன்னே வந்து, கனகசபையைக் கையாலே தொட்டுக் காட்டினார். உடனே ரதத்திலிருந்து இறங்கின அந்த மகா புருஷன் கனகசபையைத் தழுவி, மார்போடு அணைத்துக் கொண்டு, "என் மகனே! என் கண்மணியே! என் குல திலகமே! இந்நாள் வரைக்கும் உன்னைப் பார்க்கக் கொடுத்து வைக்காமல் போனேனே! என்ன பாவமோ உன்னைப் பிரிந் திருந்தேன்! இப்போதாவது உன்னைக் கண்ணாலே கண் டேனே! இனிமேல் என்னைப் போலப் பாக்கியசாலிகள்

உண்டா ?" என்று சொல்லி, தேக பரவசமாய் ஆநந்தக் கண்ணீர் சொரிந்தார். அவருடன் வந்த ஸ்திரீயும் கனகசபையைக் கட்டித் தழுவிக்கொண்டு, "மகனே! மகனே!" என்று பிரலாபித்தாள்.

இந்த அதிசயத்தைக் கேள்விப்பட்டு, எங்கள் தாய்தந்தையர், சுற்றத்தார் யாவரும் வந்து சூழ்ந்துகொண்டு, அவருக்கும், அவருடைய பத்தினிக்கும் தகுந்த ஆசனங்கள் கொடுத்து வீற்றிருக்கச் செய்தார்கள். அவர் எங்களை நோக்கிச் சொல்லத் தொடங்கினர்: "அதிக செல்வமும் சிறப்பும் பொருந்திய ஆதியூர்ப் பாளையப்பட்டுக்கு நான் அதிபதி. நாங்கள் பூர்வீக அரசர்களுக்கு முடியெடுத்து வைக்கிற வேளாளர்கள் ஆனதால், எங்களுக்கு அநேக கிராமங்களும் பூமிகளும் தானமாய்க் கிடைத்து, சர்வ சுதந்தரமாக அநுபவித்து வருகிறோம். என்னுடைய தகப்பனர் ஆதிமூலம் பிள்ளைக்கு நானும் என் தம்பியாகிய தெய்வநாயகம் பிள்ளையும் புத்திரர்கள். என் பேர் தேவராஜப் பிள்ளை. எங்கள் குடும்பத்தில் மூத்த புத்திரர்களுக்கும், அவர்களுடைய சந்ததிகளுக்கும் பட்டம் ஆகிறதே தவிர, இளையவர்களுக்குப் பட்டம் ஆகிறதில்லை. ஆனல், மூத்தவர்களுக்குச் சந்ததி இல்லாவிட்டால், இளையவர்களுக்குப் பாத்தியம் உண்டாகும். நான் மூத்தவன் ஆனதால், எனக்குப் பட்டாபிஷேகம் ஆகி, என் தம்பி என்னுடைய பாதுகாப்பில் இருந்து வந்தான். இதற்குப் பன்னிரண்டு வருஷத்துக்கு முன், இந்தக் குழந்தையை என் பத்தினி பிரசவித்தாள். இவன் ஆறு மாசத்துக் குழந்தையாயிருக்கும் போது, எனக்குக் கடூரமான ஒரு வியாதி கண்டு, எங்கள் குடும்ப வைத்தியர்கள் பல மருந்துகள் கொடுத்தும், சௌக்கியப்படவில்லை. இங்கிலீஷ் டாக்டர்கள் மருந்து கொடுத்துக் கொஞ்சம் சௌக்கியமான உடனே, நான் தேச யாத்திரை செய்தால், எனக்கு முழுதும் சௌக்கியமாகும் என்று வற்புறுத்திச் சொன்னர்கள். இந்தக் குழந்தை அதிபாலியமாய் இருந்ததால், அதை நாங்கள் கூடக்கொண்டு போகாமல் என் தம்பி வசத்தில் ஒப்புவித்து, பாளையத்தைச் சேர்ந்த காரியங்களையும் அவனே பார்க்கும்படித் திட்டம்செய்து, நானும் என் பெண்சாதியும் பரிவாரங்களும் தேச யாத்திரை செய்யப் புறப்பட்டோம். வங்காளம், பம்பாய் முதலான இடங்களெல்

லாம் சுற்றிக்கொண்டு, நாங்கள் திரும்பிவர ஆறு மாசம் சென்றது. நாங்கள் வங்காளத்தில் இருக்கும்போது, என் தம்பியிடத்திலிருந்து வந்த கடிதத்தில் எங்கள் பிள்ளை சுழி மாந்தம் கண்டு இறந்து போனதாக எழுதியிருந்தபடியால், நானும் என் பத்தினியும் பட்ட துயரம் இவ்வளவென்று சொல்லி முடியாது. என் மனைவி மட்டும் பிள்ளை விஷயத்தில் ஏதாவது மோசம் நடந்திருக்குமென்று சந்தேகித்தாள். எனக்கு என் தம்பியிடத்தில் இருந்த விசுவாசத்தினால், அவள் சந்தேகப்பட்டது சரியல்லவென்று கண்டித்தேன். நாங்கள் ஊருக்கு வந்த பிறகு, பிள்ளை இறந்தது வாஸ்தவமென்று சகலரும் பிரஸ்தாபித்து வந்தபடியால், என் மனையாளுடைய சந்தேகமும் நிவர்த்தியாய் விட்டது.

"என் தம்பி சில நாள் வியாதியாயிருந்து, ஒரு மாசத்துக்கு முன் தேகவியோகமானான். அவன் இறந்த விசனத்தினால், அவன் சடலத்தின்மேல் விழுந்து புலம்பி அழுதேன். அப்போது அவன் இடுப்பிலிருந்து ஒரு கடிதம் வெளிப்பட்டது. அது என் பேரால் மேல் விலாசம் எழுதப்பட்டு, முத்திரிக்கப்பட்டிருந்தபடியால், நான் தனிமையாக ஒரு அறைக்குள்ளே போய், அதை வாசிக்கத் தொடங்கினேன். அது வருமாறு:—

'ஐயோ! அண்ணா! நான் உங்களுக்குப் பரம சத்துருவே தவிர, தம்பியல்ல. தங்கள் பிள்ளை வியாதியினால் இறந்து போனதாக நான் தங்களுக்கு எழுதினது, சுத்த அபத்தம். தங்களுக்குப் பிறகு எனக்குப் பட்டம் நிலைக்க வேண்டியதற்காகத் தாங்கள் ஊரில் இல்லாத காலத்தில் தங்களுடைய பிள்ளையை எப்படியாவது தொலைத்துவிட வேணுமென்று என் பிரிய நேசனாகிய முத்துவீரனுக்குச் சொன்னேன். அவன் அப்படிச் செய்யக் கூடாதென்று எனக்குப் பல வகையில் புத்தி போதித்தான். நான் மறுபடியும் பிடிவாதம் செய்ததனால், அவன் பிள்ளையை வாங்கிக்கொண்டு, என் மனதுபடி செய்கிறதாகச் சொல்லிப் போய்விட்டான். அந்தச் சமயத்தில் அந்தப் பிள்ளைக்குப் பால் கொடுத்தவளுடைய பிள்ளை சுழி மாந்தத்தினால் இறந்து போனதனால், அவளைப் பொருள் மூலமாக வசப்படுத்திக் கொண்டு, அவள் பிள்ளையைத் தங்கள் பிள்ளையென்று பேர்

பண்ணி, சகலரும் அறிய, இராக்காலத்தில் அந்தப் பிள்ளையை ஆடம்பரமாக அடக்கம் செய்தோம். இந்த ரகசியம் எனக்கும், அந்தப் பாற்காரிக்கும், அவளுடைய புருஷனுக்கும் மட்டும் தெரியும். தங்களுடைய புத்திரனைக் கொண்டுபோன முத்து வீரனை வெகு காலமாக நான் பார்க்கவில்லை; அவன் உலகத்தைத் துறந்து சந்நியாசியாய்ப் போனதாகக் கேள்விப்பட்டேன்; அவன் தங்கள் பிள்ளையைக் கொலை செய்திருப்பான் என்றே எண்ணியிருந்தேன். முந்தாநாள் வந்த அந்தச் சந்நியாசி, தங்கள் பிள்ளையைக் கொலை செய்யவில்லையென்றும், சத்தியபுரியில் சாந்தலிங்கம் பிள்ளை வீட்டில் அந்தப் பாலன் வளருவதாகவும் சொன்னான். அந்தச் சந்நியாசியை இங்கே இருக்கும்படிச் சொல்லியிருக்கிறேன். அவனை விசாரித்தால், ஆதியோடந்தமாகச் சகல சங்கதிகளும் தெளிவாகும். தங்களுக்கு நான் செய்த துரோகத்துக்காக, என் மனச் சாட்சி எனக்குச் செய்த தண்டனை சாமானியம் அல்ல. என் வியாதிக்கும் மரணத்துக்கும் காரணம், என் மனச்சாட்சியேயன்றி வேறல்ல. இனி எழுத எனக்குச் சக்தி இல்லை. சாகப் போகிற என்மேலே கோபம் வைக்க வேண்டாம்.'

அந்தக் கடிதத்தை நான் வாசித்த உடனே, ஒரு பக்கத்தில் பெரிய ஆச்சரியமும், ஒரு பக்கத்தில் என் தம்பியின்மேலே பிரமாதமான கோபமும் ஜனித்து, இன்னது செய்கிறதென்று தெரியாமல், சற்று நேரம் சித்திரம் போல அசைவற்று இருந்தேன். பிறகு, என் பிள்ளை உயிரோடு இருக்கிறானே, அவனைக் காணலாம் என்கிற சந்தோஷம் மேலிட்டு, சந்நியாசியார் வந்திருக்கிறாராவென்று விசாரித்தேன்; அவர் வந்திருக்கிறதாகக் கேள்விப்பட்டு, அவரை ரகசியமாக அழைத்து, அவர் மூலமாகச் சகல சங்கதிகளையும் அறிந்துகொண்டேன்.

"என் தம்பியினுடைய உத்தரக் கிரியைகளெல்லாம் முடித்துக்கொண்டு, நானும் என் பத்தினியும் பரிவாரங்களும் புறப்பட்டு வந்து, என் பிள்ளையையும் உங்களையும் கண்டேன்; ஆநந்தம் கொண்டேன். இப்படிப்பட்ட பிரமானந்தத்தை, நான் பிறந்தது முதல் ஒரு நாளும் அனுபவித்ததில்லை," என்றார்.

பிறகு, கனகசபையைச் சிறுபிள்ளை முதல் வளர்த்தவர் எங்கே என்று விசாரித்துத் தெரிந்துகொண்டு, அவரை நோக்கி, "ஐயா! என் கூடப்பிறந்த தம்பி, என் பிள்ளையைக் கொலை செய்ய நினைத்தானே! ஒரு சம்பந்தமும் இல்லாத நீர், சொந்தப் பிள்ளையைப் பார்க்கிலும் நூறு பங்கு அதிகமாகப் பிள்ளையை வளர்த்தீரே! உமக்கு இந்த உலக முழுமையும் கொடுத்தாலும், நீர் செய்த உபகாரத்திற்குத் தகுந்த பிரதிப் பிரயோஜனம் ஆகுமா?" என்று சொன்னார்; பிறகு என் தாயார், தகப்பனார், பந்துக்கள் முதலிய ஒவ்வொருவரையும் பார்த்துத் தனித்தனியே ஸ்தோத்திரம் செய்யத் தொடங்கினார். அவர் செய்கிறதைப் பார்த்தால், உலகம் முடிகிற வரையில் உபசாரத்தை நிறுத்த மாட்டாரென்று தோன்றிற்று. என் தகப்பனாரும், ஞானம்பாள் தகப்பனாரும் எழுந்து, "போஜனத்துக்கு நேரமாகிறதே; கிருபை செய்ய வேண்டும்," என்று பிரார்த்தித்தார்கள். அவரும், அவருடைய பத்தினியாரும், "எங்களால் எல்லாரும் பசியாயிருக்கிறீர்களே!" என்று சொல்லி, உடனே எழுந்து ஸ்நானம் ஜபம் முதலிய நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு, ஞானம்பாள் வீட்டில் அன்று போஜனம் செய்தார்கள். நாங்களும் அவர்களுடன் கூட இருந்து, ஒரே பந்தியாய்ப் போஜனம் செய்தோம். மறுநாள் முதல் எங்கள் கிருகத்தில் அவர்களை வரவழைத்து வைத்துக்கொண்டு, பத்து நாள் வரையில் அவர்களுக்கு உபசாரங்கள் செய்தோம். துரும்பு போல இளைத்துப் போயிருந்த கனகசபை, தாய் தகப்பனைக் கண்ட சந்தோஷத்தினால் பாரித்துப் பூரித்து, அவர்களுடன் வந்த யானைகளில் ஒன்று போல ஆனான்.

பிற்பாடு அவரும், அவருடைய பத்தினியாரும் கனகசபையையும் அவனை வளர்த்த தந்தை தாய்மார்களையும் அழைத்துக்கொண்டு எங்களிடத்தில் தனித்தனியே விடை பெற்றுக்கொண்டு, பரிவாரங்களுடன் சென்றுவிட்டார்கள்.

## 6. விவாகப் பேச்சில் கலகம் மூண்டது

நானும் ஞானம்பாளும் அவளுடைய வீட்டிலே படித்துக் கொண்டு வரும்போது, எங்களுக்கு வயது அதிகரித்ததால், இனிமேல் நாங்கள் இருவரும் ஒரிடத்திலே படிக்கக் கூடா தென்று என் தாயார் அபிப்பிராயப்பட்டு, என்னை வீட்டுக்கு வரவழைத்துக்கொண்டார்கள்.

ஒரு நாள் என் தாயார் என்னிடத்தில் வந்து, "ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்து உன்னிடத்திலே பேச வந்திருக்கிறேன். ஒருவனுக்கு உத்தம குணமுள்ள மனைவி வாய்ப்பாளானால், அதற்குச் சமானமான செல்வம் வேறென்றும் இல்லை. ஞானம்பாளை உனக்கு விவாகம் செய்யும்படிச் சம்பந்தி முதலியாரைக் கேட்க யோசித்திருக்கிறோம். உன்னுடைய அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்கள். இதைக் கேட்டவுடனே, என் உள்ளத்தில் ஆநந்தம் பொங்கி, கண் வழியாய்ப் புறப்பட்டு முகத்தில் பரவிற்று. என்னுடைய சம் மதத்தை என் தாயார் என் தகப்பனாருக்குத் தெரிவித்தவுடனே, என் தகப்பனார் சம்பந்தி முதலியார் வீட்டுக்குப் போய், ஞானம் பாளை எனக்குக் கன்னிகாதானம் செய்ய வேண்டுமென்று கிரமப்படிக் கேட்டார். அதற்குச் சம்பந்தி முதலியார் யாதொரு ஆட்சேபமும் சொல்லாமல் உடனே சம்மதித்தார்.

பிற்பாடு நிச்சய தாம்பூலம் மாற்றுவதற்காகப் பந்துக்கள் இஷ்ட மித்திரர்களுக்கெல்லாம் தாம்பூலம் அனுப்பி, அவர் கள் எல்லாரும் சம்பந்தி முதலியார் வீட்டில் வந்து கூடி னார்கள். நிச்சய தாம்பூலம் மாற்றுவதற்கு முன், சம்பந்தி முதலியார் என் பிதாவை நோக்கி, "கலியாணத்துக்குப் பின்பு மாப்பிள்ளையும் பெண்ணும் யார் வீட்டில் இருக்கிறது?" என்று கேட்டார். உடனே என் தகப்பனார், "இந்த விஷயத் தில் உமக்கென்ன சந்தேகம் வந்தது? மாடு மேய்க்கிறவன் கூட மாமனார் வீட்டில் இருக்க மாட்டானே! என் பிள்ளை உம் முடைய வீட்டில் இருப்பானா?" என்றார். "அப்படியானால், பெண் கொடுக்கச் சம்மதமில்லை!"யென்று சம்பந்தி முதலியார்

சொன்னார். "என் பிள்ளைக்குப் பெண் பஞ்சமா ? உன் பெண் வேண்டியதில்லை !" என்று என் பிதா மொழிந்தார். சம்பந்தி முதலியார், "என் மகளை ஒரு நாய்க்குக் கொடுத்தாலும் கொடுப் பேனேயல்லாது, உன் மகனுக்குக் கொடுக்கிறதில்லை !" என்று சபதம் கூறினார். என் தகப்பனார், "என் மகனுக்கு ஒரு கழுதையைக் கொண்டாலும் கொள்ளுவேனேயன்றி, உன் மகளைக் கொள்ளுகிறதில்லை!" என்று மார்பு தட்டிக்கொண்டு வந்துவிட்டார். இவ்வகையாக, எங்களுடைய கலியாணம் நாய்ச் சம்பந்தத்திலும் கழுதைச் சம்பந்தத்திலும் முடிந்தது.

அன்று முதல் சம்பந்தி முதலியாருக்கும் எங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாமல் போய்விட்டது. அவர்கள் வீட்டுக்கும் நாங்கள் போகிறதுமில்லை ; எங்கள் வீட்டுக்கும் அவர்கள் வருகிறதுமில்லை. அவர்களுடைய சிநேகிதர்கள் எங்களுக்கு விரோதிகள். அவர்களுடைய பகைவர்கள் எங்களுக் குச் சிநேகிதர்கள். அவர்களுடைய வேலைக்காரர்களுக்கும் எங் கள் வேலைக்காரர்களுக்கும் பகை. அவர்களுடைய ஆடு மாடு களுக்கும் எங்களுடைய ஆடு மாடுகளுக்கும் பகை. இப்படிப் பிரமாதமாகக் கலகம் மூண்டுவிட்டது. ஆனால், இந்தக் கலகத் தில் நானும், ஞானம்பாளும், என் தாயாரும், அவள் தாயாரும் ஆகிய இந்த நாலு பேர் மட்டும் சம்பந்தப்படவில்லை. எங்கள் தாய்மார்கள், தங்கள் கணவர்களைச் சமாதானப்படுத்தக் கூடிய வரையில் முயன்றும் பயன்படவில்லை.

சம்பந்தி முதலியார், தம்முடைய சபதத்தை நிறை வேற்றும்பொருட்டுப் பல ஊர்களுக்கும் கடிதம் அனுப்பி, தம் மகளுக்கு மாப்பிள்ளை விசாரிக்க ஆரம்பித்தார். அதைக் கேட்டு என் தகப்பனாரும் பல ஊர்களுக்குக் கடிதம் போக்கி, எனக்குப் பெண் விசாரிக்கத் தொடங்கினார். ஞானம்பாளைத் தவிர, வேறே தேவ ஸ்திரீயாயிருந்தாலும் விவாகம் செய்கிற தில்லையென்றும், என் தகப்பனாருடைய பிரயத்தனங்களுக்கு இடம் கொடுக்கிறதில்லையென்றும் எனக்குள்ளே நிச்சயித் துக்கொண்டேன். ஆனால், ஞானம்பாள் ஸ்திரீ ஜாதி ஆன தால், அவளுடைய தகப்பனார் அவளுக்கு வேறே புருஷனைத் தேடிப் பலவந்தமாய்க் கலியாணம் செய்துவிட்டால் என்ன செய்

கிறதென்கிற கவலை என்னை வாதித்தபடியால், அவளை ரகசியத்தில் எங்கேயாவது அழைத்துக்கொண்டு போய் விவாகம் செய்து கொண்டு திரும்பி வருகிறதென்று தீர்மானித்துக்கொண்டு, இந்தத் தீர்மானத்தை அவளுக்குக் கடித மூலமாகத் தெரிவித்தேன்; நான் எங்கே கூப்பிட்டாலும் அவள் சந்தோஷமாய் வருவாளென்றும், யாதொரு ஆட்சேபமும் சொல்லமாட்டாளென்றும் நம்பி, இந்தக் கடிதத்தை அனுப்பினேன். ஆனால், அவளுடைய மறுமொழியைப் பார்த்த உடனே, என்னுடைய ஆசை நிராசையாய்ப் போய்விட்டது. அந்த மறுமொழி வருமாறு:—

என் பிரியமான அத்தான்,

தாங்கள் அனுப்பிய கடிதத்தை வாசித்துப் பார்த்து, துக்க சாகரத்தில் முழுகினேன். தாங்கள் எனக்கு எழுதிய கடிதம் போல ஒரு தாசிக்குக்கூட ஒருவரும் எழுதத் துணியார்கள். என்னிடத்தில் என்ன துன்மார்க்கத்தைக் கண்டு, அப்படிப் பட்ட கடிதத்தை எனக்கு எழுதினீர்கள்? நாம் இருவரும் எங்கேயாவது போய், அந்தரங்கத்தில் கலியாணத்தை முடித்துக் கொள்ளலாமென்று எழுதி இருக்கிறீர்கள். விவாகம் இல்லாத ஒரு கன்னிகையும் பிரமசாரியும் சேர்ந்துகொண்டு வெளிப்படுவதனால் உண்டாகிற அவமானமும், அபவாதமும் உலகமுள்ள வரையில் நீங்குமா? என்னை இந்த அவமானத்துக்கு உட்படுத்த நான் உங்களுக்கு என்ன துரோகம் செய்தேன்? இந்த விஷயத்தில் புருஷர்களுக்கு உண்டாகிற அபவாதத்தைப் பார்க்கிலும், ஸ்திரீகளுக்கு உண்டாகிற அபவாதம் நூறு பங்கு பெரிதென்று தாங்கள் ஏன் யோசிக்கவில்லை? ஐரோப்பியர்களுக்குள்ளே நடக்கிற காந்தர்வ விவாகத்தைப் புகழ்ந்து பேசுகிறீர்கள். அவர்களுக்குள்ளே பெண்ணுக்கும் புருஷனுக்கும் வயது முதிர்ந்த பின்பு விவாகம் நடப்பதும், தவிர, விவாகத்துக்கு முன்பு அவர்கள் ஒருவரை ஒருவர் அந்தரங்கத்தில் சந்திப்பதும், சம்பாஷிப்பதும் வழக்கமாயிருக்கின்றது. ஸ்திரீ புருஷர்கள் ஒருவரை ஒருவர் பாராமலே, அதி பாலியத்தில் கலியாணம் நடக்கிற வழக்கமுள்ள இத்தேசத்துக்குக் காந்தர்வ விவாகம் தகுதி ஆகுமா? விவாகத்துக்கு முன்பு ஸ்திரீ புருஷர்களுக்குள் நடக்கிற அந்தரங்க சல்லாபத்தினால் விளைகிற தீமைகளைக்

குறித்து ஐரோப்பியர்களே முறையிடுகிறதும், தவிர, நியாய ஸ்தலங்களில் வரும் வழக்குகளினுலும், அந்தத் தீமைகள் இன்னவையென்றும் நாம் அறிகிறோம் அல்லவா? அந்தத் துர் வழக்கத்தை இத்தேசத்துக்குக் கொண்டுவர யாராவது முயற்சி செய்வார்களேயானுல், அவர்கள் தேசாபிமானிகள் அல்ல. பெரும்பாலும் தாய்தந்தையர் தங்களுடைய பிள்ளைகளின் நலத்தையே கருதுவார்கள். ஆகையால், தாய்தந்தையருடைய அபிப்பிராயப்படி நடப்பது உசிதமாயிருக்கின்றது. ஆனுல், ஆடு மாடுகளுடைய சம்மதத்தைக் கேளாமல், அவைகளை விலை கூறுவது போலத் தகுந்த வயது உள்ள பிள்ளைகளுடைய இஷ்டத்தை எவ்வளவும் மதியாமல், தாய்தந்தையர் தங்கள் இஷ்டப்படி நடத்த முயலுவார்களானுல், அப்படிப்பட்ட விவாகத்துக்குச் சம்மதிக்காமல் நிராகரிக்கப் பிள்ளைகளுக்கும் பூரண சுதந்தரம் உண்டாயிருக்கின்றது. தங்களுக்குக் கன்னிகையாகிய நான் கடிதம் எழுதுவது அநுசிதமாயிருந்தாலும், என்னுடைய அபிப்பிராயம் தெரியும்பொருட்டு, இந்த ஒரு கடிதம் மட்டும் எழுதினேன்; இனிமேல் எழுத மாட்டேன்; தாங்கள் எனக்குச் செய்த உபகாரத்தையும் மறவேன்.

இங்ஙனம்,
தங்கள் விதேயை,
ஞானம்பாள்.

இந்தக் கடிதத்தைப் பார்த்தவுடனே, என்னுடைய புத்தி எந்த ஸ்திதியில் இருந்திருக்குமென்று நீங்களே உணர்ந்து கொள்ளுங்கள். இந்தக் கடிதத்தைத் திருப்பித் திருப்பி ஆயிரம் தரம் படித்தேன். நான் என்னுடைய கடிதத்தை எவ்வளவு நம்பிக்கையோடு கூட எழுதியிருந்தேனே, அவ்வளவுக்கு அவளுடைய மறுமொழி முழுதும் பிரதிகூலமாயிருந்தது. என்னை விவாகம் செய்துகொள்ள அவள் சம்மதம் உள்ளவளா என்பது கூடச் சந்தேகத்தில் வந்துவிட்டது. ஆனுல், தகுந்த பிராயமுள்ள பிள்ளைகளுடைய இஷ்டத்தைத் தாய்தந்தையர் எவ்வளவும் கவனிக்காவிட்டால், அப்படிப்பட்ட விவாகத்தைப் பிள்ளைகள் நிராகரிக்கலாமென்று அவள் எழுதிய ஒரு வாக்கியம் மட்டும் கொஞ்சம் நம்பிக்கைக்கு ஆதாரமாயிருந்தது.

தண்ணீரில் வீழ்ந்து தத்தளிக்கிறவர்கள் ஒரு துரும்பு அகப் பட்டாலும் அதைப் பிடிப்பது போல, நான் அந்த அற்ப நம் பிக்கையைக் கொண்டு, என் மனதைத் திடப்படுத்திக்கொண் டேன்; அவளுடைய கடிதத்தின் முதற்பாகங்கள் கோபமயமா யிருந்தாலும், "நீங்கள் செய்த உபகாரத்தை மறவேன்" என் கிற கடைசி வாக்கியத்தைக்கொண்டு, அவள் கோபம் தணிந்து விட்டதாக நிச்சயித்துக்கொண்டேன்.

## 7. ஆள்மாருட்டத் திருமணம்

ஞானம்பாள் என்னைத் தவிர வேறொருவருக்கு மாலை சூட்டச் சம்மதியாளென்று நான் மனப் பால் குடித்துக்கொண் டிருக்கும்போது, சம்பந்தி முதலியார் ஒரே பிடிவாதமாய்ப் பல இடங்களில் மாப்பிள்ளை விசாரித்து, முடிவில் தன் மகளைத் திருநெல்வேலியிலிருக்கும் வீரப்ப முதலியார் குமாரன் சந்திர சேகர முதலிக்கு விவாகம் செய்யத் தீர்மானித்தார். அதைக் கேள்விப்பட்ட உடனே, என் தகப்பனுருக்கு ஆத்திரம் உண் டாகி, எனக்குக் கோயமுத்தூரிலிருக்கும் சொக்கலிங்க முதலி யார் மகள் பூங்காவனத்தை மணம் செய்கிறதென்று நிச்சயித் தார். சித்திரை மாசம் இருபத்தெட்டாம் தேதி காலை ஆறு மணிக்குச் சுப முகூர்த்தம் செய்கிறதென்று சம்பந்தி முதலி யார் நிர்ணயித்தார். அதைக் கேள்விப்பட்ட என் தகப்பனுரும் அந்தத் தினத்தில், அந்த முகூர்த்தத்தில், என்னுடைய விவா கத்தை நிறைவேற்றுகிறதென்று நிர்ணயித்தார். அந்தக் கலியாணத்தைத் தடுக்க என் தாயார் கூடிய வரையில் பிரயாசைப்பட்டார்கள். சம்பந்தி முதலியாருடைய வைராக்கி யத்தினுலே என் தகப்பனுருடைய வைராக்கியமும் முற்றி, என் தாயார் வார்த்தையை நிராகரித்துவிட்டார்கள். என் தாயா ரைச் சம்பந்தி முதலியார் வீட்டுக்குப் போக வேண்டாமென்று

என் தகப்பனர் கட்டுப்பாடு செய்துவிட்டபடியால், என் தாயார் தம்முடைய தமையனராகிய சம்பந்தி முதலியாரைச் சமாதானப்படுத்தவும் சந்தர்ப்பம் இல்லாமல் போய்விட்டது.

எங்கள் ஊருக்கு நாலு காத வழி தூரத்தில் சம்பந்தி முதலியாருக்கும் எங்களுக்கும் பொதுவாகப் பூங்காவூர் என்கிற பெயருள்ள ஒரு கிராமம் இருக்கின்றது. அந்தக் கிராமத்தில் இருக்கிற பெரிய மெத்தை வீட்டின் தென்பாதி அவருக்கும், வட பாதி எங்களுக்கும் சொந்தம். சம்பந்தி முதலியார் தாம் ஆரம்பித்த கலியாணத்திற்குப் பெண்டுகள் தடங்கல் செய்வதால், உள்ளூரிலே கலியாணம் செய்யக் கூடாதென்றும், மேற்படி பூங்காவூர்க் கிராமத்தில் தம்முடைய பெண்சாதி வீட்டில் கலியாணம் செய்கிறதென்றும் நிச்சயித்து, அந்தக் கிராமத்துக்கே நேராய் வந்து சேரும்படித் திருநெல்வேலி வீரப்ப முதலியாருக்குக் கடிதம் அனுப்பினர். அந்தச் சமாசாரம் என் தகப்பனர் கேள்விப்பட்டு, அவரும் அந்தக் கிராமத்தில் எங்களுடைய வட பாதி வீட்டில் என்னுடைய கலியாணத்தை நிறைவேற்றுகிறதென்று நிச்சயித்துக்கொண்டு, அந்தக் கிராமத்துக்கே பெண் வீட்டுக்காரர்கள் நேராய் வரும்படிக் கோயமுத்தூருக்குக் கடிதம் அனுப்பினர். சம்பந்தி முதலியார் கலியாணத்துக்கு வேண்டிய சில சாமான்கள் சேகரம் செய்து, அந்தக் கிராமத்துக்கு அனுப்பினர். என் தகப்பனரும் முக்கியமான சாமான்களையும், அரிசி, பருப்பு, நெய் முதலிய புசிகரணங்களையும் அனுப்பினர். இருவரும் அந்தக் கிராமத்து வீட்டில், அவரவர்கள் பாதியில் பந்தல் போடும்படித் திட்டம் செய்து, அதுவும் முடிந்தது. இந்தக் கலியாண ஆடம்பரங்களையெல்லாம் பார்த்த உடனே, ஞானம்பாளை இழந்து விட்டோம் என்கிற துக்கம் அதிகரித்து, ஒரு தரித்திரன் நெடுங்காலம் தவம் செய்து பெற்றுக்கொண்ட திரவியத்தை மறுபடியும் இழந்துவிட்டாற்போல, அளவற்ற துயரம் உடையவன் ஆனேன்.

இவ்வகையாக நான் மனம் கலங்கிக்கொண்டிருக்கும் போது, தெய்வாதீனமாக அந்தக் கலியாணத்துக்கு ஒரு இடையூறு சம்பவித்தது. கலியாணத்துக்கு எட்டுத் தினங்களுக்கு

முந்தி சம்பந்தி முதலியார் வீட்டில், அவர் தாயாதிகளில் ஒருவர் இறந்துபோய்த் துக்கம் நேரிட்டது. அதனுல் அந்தக் கலியாணத்தைத் தாமதப்படுத்தும்படிச் சம்பவித்ததால், மாப்பிள்ளை வீட்டார் இப்போது வர வேண்டாமென்றும், மறு மாசத்தில் வேறு முகூர்த்தம் நிச்சயித்துத் தெரிவிப்பதாகவும் சம்பந்தி முதலியார் திருநெல்வேலிக்கு உடனே கடிதம் அனுப்பி, கலியாணத்தை நிறுத்திவிட்டார். எங்களுக்கும் அந்தத் துக்கம் உண்டானதால், அந்த விவரத்தைக் கண்டு என் தகப்பனுரும் கோயமுத்தூருக்குக் கடிதம் அனுப்பி, தற்காலம் கலியாணத்தை நிறுத்திவிட்டு நிச்சிந்தையாயிருந்தார். கலியாணத்துக்கு முஸ்திப்பு செய்யப் பூங்காவூருக்குப் போயிருந்த எங்கள் காரியஸ்தர்களும் துக்கம் விசாரிப்பதற்காகச் சத்தியபுரிக்குத் திரும்பி வந்துவிட்டார்கள்.

கலியாணம் நிறுத்தலாய்ப் போன விஷயத்தைப் பற்றிக் கோயமுத்தூருக்கு எழுதிய கடிதம் போய்ச் சேர்ந்திருக்குமென்றும், பெண் வீட்டுக்காரர்கள் பயணத்தை நிறுத்தியிருப்பார்களென்றும் நாங்கள் நினைத்துக்கொண்டிருந்தோம். அப்படியிருக்க, பெண் வீட்டுக்காரர்களும், மாப்பிள்ளை வீட்டுக்காரர்களும் பூங்காவூருக்கு வந்து, அந்த முகூர்த்தத்தில் ஏதோ ஒரு கலியாணம் நடப்பிப்பதாக எங்கே பார்த்தாலும் பேசிக்கொண்டார்கள். நானுவது ஞானம்பாளாவது அந்த ஊருக்குப் போகாமலிருக்கக் கலியாணம் எப்படி நடக்கக் கூடுமென்று நாங்கள் ஐயுறவுப்பட்டுக்கொண்டிருக்கும் போது, முந்தி குறிக்கப்பட்ட முகூர்த்தத் தினத்திற்கு மூன்று நாளைக்குப் பின்பு, எங்கள் வீட்டுக்குத் துக்க முகத்தோடு ஒருவர் வந்தார். அவர் ஒருவருக்கும் அறிமுகம் இல்லாதவரானபடியால், அவரை "யார்?" என்று என் தகப்பனுர் வினவ, அவர், "நான்தான். கோயமுத்தூர் சொக்கலிங்க முதலி; பெரிய வீடென்று பிச்சைக்குப் போனுல் கரியை அரைத்து மூஞ்சியில் தடவுவது போல, என்னை மோசம் செய்யலாமா?" என்று மிகவும் பரிதாபமாகச் சொன்னுர். அதற்கு என் தகப்பனுர், "ஒரு துக்க நிமித்தம் கலியாணம் நின்று போன விஷயத்தைப் பற்றி உமக்குக் கடிதம் எழுதியிருந்தேனே? அது வந்து சேரவில்லையா?" என்றுர். அதற்கு அவர் சொன்னுர்:

"அந்தக் கடிதம் வந்து சேரவில்லே. உங்களுடைய முந்தினக் கடிதப் பிரகாரம் நானும் பெண் முதலானவர்களும் புறப்பட்டு, முகூர்த்த நேரத்திற்குச் சற்று நேரத்திற்கு முன், பூங்காவூருக்கு வந்து சேர்ந்தோம். அப்போதுதான் திருநெல்வேலி வீரப்ப முதலியாரும், மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களே எங்களுக்குத் தெரியாது ; எங்களே அவர்களும் அறியமாட்டார் கள். அந்தக் கிராமத்திலிருக்கிற வீடு உங்களுக்கும் சம்பந்தி முதலியாருக்கும் பொதுவென்பதும், நீங்கள் இருவரும் போட்டி போட்டுக்கொண்டு அந்த வீட்டில் ஒரே முகூர்த்தத்தில் இரண்டு கலியாணம் செய்ய யோசித்திருப்பதும் எங்களுக்குத் தெரியாது. மாப்பிள்ளேயும் பெண்ணும் வந்து சேர்ந்தவுடனே, அந்த மாப்பிள்ளேதான் உங்கள் மகனென்று நான் எண் ணிக்கொண்டேன். என் பெண்ணேச் சம்பந்தி முதலியா ருடைய பெண்ணென்று மேற்படி வீரப்ப முதலியாரும் எண்ணிக்கொண்டார். எங்களுக்கு உண்மையைத் தெரி யப்படுத்த அவ்விடத்தில் வேறே மனுஷர்களும் இல்லே. அந்த வீட்டில் கலியாணப் பந்தல் முதலிய சிறப்புகள் செய் யப்பட்டிருந்ததுமன்றி, போஜன பதார்த்தங்களும் சித்தமா யிருந்தபடியால், அந்தத் தினத்தில் முகூர்த்தம் நிச்ச யந்தானென்று நினேக்கும்படியாயிருந்தது. உங்களுடைய அந்தஸ்துக்குத் தக்க அலங்காரம் இல்லாதிருந்த போதிலும், பெண்டுகளுக்குள்ளே கலகமென்று நீங்கள் எழுதியிருந்தமை யால், அந்தக் கலகமே அலங்காரக் குறைவுக்குக் காரணமென்று நினேத்துக்கொண்டோம். முகூர்த்த நேரம் வந்துவிட்டதால் இனித் தாமதிக்கக் கூடாதென்று எங்களுடன் கூட வந்த புரோகித பிராமணர்கள் ஒரு பக்கத்தில் அலப்பினர்கள். உங்களுடைய சம்பந்தம் கிடைப்பது அரிதாகையால், அந்த மாப்பிள்ளேக்கும் பெண்ணுக்கும் அந்த முகூர்த்தத்திலே விவா கம் நிறைவேற்றி, மாங்கலிய தாரணமும் ஆய்விட்டது. பிற்பாடு, நானும் அந்த மாப்பிள்ளே வீட்டுக்காரர்களும் கலந்து யோக க்ஷேமங்களேப் பற்றி சம்பாஷிக்கத் தொடங்கின போது, அந்த மாப்பிள்ளே சம்பந்தி முதலியார் பெண்ணுக்கு உத் தேசிக்கப்பட்ட மாப்பிள்ளேயென்று எனக்கும், என் பெண் உங்களுடைய மகனுக்காகக் குறிக்கப்பட்ட பெண்ணென்று

திருநெல்வேலி வீரப்ப முதலியாருக்கும் தெரிந்து, நாங்கள் பட்ட கிலேசம் கடவுளுக்குத்தான் தெரியும். ஏனென்றால், நானும் அந்த வீரப்ப முதலியாரும் பரம ஏழைகள். உங்களுடைய சம்பந்தத்தைப் பெரிதாக எண்ணி நான் வந்தது போலவே, சம்பந்தி முதலியாருடைய சம்பந்தத்தை விரும்பியே வீரப்ப முதலியாரும் ஆவலுடன் வந்தார். நாங்கள் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்துவிட்டது. இனி என்ன செய்வோம் !"

இந்த வர்த்தமானங்களைக் கேட்டவுடனே, மரண தண்டனை அடையும்படித் தீர்மானிக்கப்பட்ட ஒருவனுக்கு, அந்தத் தண்டனை நிவர்த்தியானால் எவ்வளவு சந்தோஷம் உண்டாகுமோ, அவ்வளவு சந்தோஷத்தை நான் அடைந்தேன். என் தந்தையாருக்குப் பெரிய ஆச்சரியமும் விசனமும் உண்டாயின. என் தாயாருக்கு ஒரு பக்கத்தில் இரக்கமும், ஒரு பக்கத்தில் சந்தோஷமும் ஜனித்தன. உடனே, என் தாயார் சொக்கலிங்க முதலியாரைப் பார்த்து, "காரியம் முடிந்த பிற்பாடு இனி என்ன செய்யலாம் ? நீங்கள் விசனப்பட வேண்டாம். நீங்கள் எங்களை நம்பிக் கோயமுத்தூரிலிருந்து இவ்வளவு தூரம் வந்துவிட்டபடியால், உங்களுக்கு நேரிட்ட வழிச் செலவு முதலியவைகளை ஒத்துக்கொள்ளுகிறோம்," என்று சொல்லி, என் தகப்பனாருடன் ஆலோசித்து, ஆயிரம் வராகன் சொக்கலிங்க முதலியாருக்குக் கொடுத்தார்கள். உடனே அவர் திருப்தியாகிவிட்டார். அப்படியே வீரப்ப முதலியாரும் சம்பந்தி முதலியார் வீட்டுக்குப் போய்க் காரியங்களைச் சொல்லி முறையிட்டுக் கொண்டதனால், அவருக்கும் ஆயிரம் வராகன் கிடைத்ததாக நாங்கள் கேள்விப்பட்டோம்.

இவ்வகையாக எனக்குக் குறித்த பெண்ணாகிய பூங்காவனத்துக்கும், ஞானம்பாளுக்குக் குறித்த மாப்பிள்ளையாகிய சந்திரசேகர முதலியாருக்கும் முகூர்த்தம் நிறைவேறி, நானும் ஞானம்பாளும் எங்கள் பூர்வ ஸ்திதிக்குக் குறைவில்லாமல் இருந்தோம். என்னுடைய பிரமசாரித்துவமும் நீங்கவில்லை; ஞானம்பாளுடைய கன்னிமையும் கழியவில்லை. எங்களுக்கு நெடுங்கால அநுபந்தம் உள்ள சம்பந்தி முதலியாருடைய சம்

பந்தத்தை நீக்கி, அந்நிய சம்பந்தம் செய்ய ஆரம்பித்தது, தெய்வத்துக்குச் சம்மதம் இல்லாதபடியால், அது தவறிப் போய்விட்டதாக என் தாயார் என் தகப்பனுருக்கு அடிக்கடிச் சொல்லிவந்தபடியால், என் தகப்பனுர் மறுபடியும் பக்கத்திலே பெண் விசாரிக்காமல் இருந்துவிட்டார். ஞானம்பாளேக் கன்னிகாதானம் செய்யும்படிச் சம்பந்தி முதலியாருக்குப் பல ஊர்களிலிருந்து கடிதங்கள் வந்தும், அவர் வீட்டுப் பெண்டுகளுடைய இடைவிடாத முயற்சியினுல், அவர் அந்தக் கடிதங்களுக்கு யாதொரு மறுமொழியும் அனுப்பாமல் அசிரத்தையாய் இருந்துவிட்டதாகக் கேள்விப்பட்டோம்.

## 8. ஞானம்பாள் சிறைப்பட்டு மீளுதல்

கோடை நாட்களிலே குடும்ப சகிதமாய்க் கிராமாந்தரம் போய்ச் சில நாள் வசிப்பது எங்கள் வழக்கமாயிருந்தது. அந்த வழக்கப்படி, அந்த வருஷம் நாங்கள் எங்கும் போகவில்லே. சம்பந்தி முதலியார் எங்கள் ஊருக்கு வடபுறத்தில் இரு காத வழி தூரத்திலிருக்கிற அவருக்குச் சொந்தமான பனம்பள்ளிக் கிராமத்துக்குக் குடும்ப சகிதமாய்ப் புறப்பட்டு, அநேக வண்டிகள், குதிரைகள், பல்லக்குகளுடன் போனுர். அங்கே சில நாட்கள் தங்கியிருந்து, ஒருநாள் விடியற்காலத்தில் அந்தக் கிராமத்தை விட்டுப் புறப்பட்டு, அவர்கள் எல்லாரும் சத்தியபுரியில் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் வந்து சேர்ந்து சற்று நேரத்திற்குப் பின்பு, அவர்கள் வீட்டிலிருந்து ஜனங்கள் அங்குமிங்கும் ஓடுவதும், கூக்குரலுமாக இருந்தது. நான் என் வீட்டை விட்டு வெளியே புறப்பட்டு என்ன சப்தமென்று விசாரித்தேன். பனம்பள்ளிக் கிராமத்துக்குப் போன எல்லோரும் திரும்பி வந்துவிட்டதாகவும், ஞானம்பாளும் பல்லக்கில் வருவதாக எல்லோரும் எண்ணிக்கொண்டிருந்ததாகவும், ஊருக்கு வந்த பிற்பாடு ஒரு பல்லக்கிலாவது ஞானம்பாள் இல்லேயென்றும், அவள் காணுமற்போயிருக்கிற காரணம் தெரியாமையினுல், அவளேத்

தேடுவதற்காகப் பல இடங்களுக்கும் ஆட்கள் ஓடுவதாகவும் நான் கேள்வியுற்று, அப்படியே திகைத்துத் திடுக்கிட்டுச் சற்று நேரம் மதி மயங்கி இருந்தேன். பிற்பாடு, என் தேகம் நிலை கொள்ளாமல் எழுந்து, நானும், என்னுடைய நண்பர் ஒருவரும் இரண்டு பெரிய குதிரைகளின்மேலே ஏறிக்கொண்டு, ஆயுத பாணிகளாய் வடக்கு நோக்கிப் புறப்பட்டோம்.

ஞானும்பாளைத் தொடர்ந்துகொண்டு என் மனம் முன்னே ஓட, அந்த மனதைத் தொடர்ந்துகொண்டு ஓடுவது போல நாங்கள் அதிவேகமாகச் சென்று, பல இடங்களிலும் தேடி ஆராய்ந்துகொண்டு, பனம்பள்ளிக் கிராமத்துக்குப் போய் விசாரித்தோம்; அங்கும் ஞானும்பாள் இல்லையென்று தெரிந்து, உடனே புறப்பட்டு வடக்கு ரஸ்தா வழியே போனோம். அந்தக் கிராமத்துக்குக் காதவழி தூரத்தில் அஸ்தமிக்கிற சமயத்தில் ரஸ்தாவில் கொஞ்ச தூரத்தில் எங்களுக்கு நேரே வந்த ஒரு வண்டியை நாலு பேர் வளைத்துக்கொண்டு, அதைப் பலவந்தமாய் வடக்கே திருப்பிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் இரண்டு பேர் குதிரையின்மேலும், இரண்டு பேர் பாதசாரிகளாயும் இருந்தார்கள். அவர்கள் வண்டியைத் திருப்பும் போது, அந்த வண்டியிலிருந்து பெண்களுடைய கூக்குரல் ஒலி கிளம்பிற்று. நாங்கள் வருவதைப் பார்த்தவுடனே, குதிரையின் மேலிருந்த இருவர்களும் கத்திகளை உருவிக்கொண்டு எங்களை வெட்டுவதற்காக ஓடி வந்தார்கள். அவர்கள் எங்கள் சமீபத்தில் வருவதற்கு முன், குண்டுகள் போட்டுக் கெட்டிக்கப்பட்டிருந்த துப்பாக்கிகளை நாங்கள் அவர்கள் மேலே பிரயோகித்தோம். குதிரையின்மேலிருந்த இருவர் தேகங்களிலும் குண்டுகள் பட்டுக் கீழே விழுந்துவிட்டார்கள். பாதசாரிகளான இருவரும் உடனே ஓட்டம் பிடித்தார்கள். அவர்களைப் போய் வளைக்கும்படி என்னுடைய நேசருக்குச் சொல்லிய பின்பு, வண்டியிலிருக்கிற ஸ்திரீகள் இன்னாரென்று அறியும்பொருட்டு, நான் குதிரையை விட்டுக் கீழே குதித்து, வண்டிக்குப் பின் புறத்திலே போனேன்.

அந்த வண்டியில் ஆண்டிச்சிகள் போலக் காவி வஸ்திரம் தரித்த இரண்டு ஸ்திரீகள் இருந்தார்கள். அவர்களில்

ஒருத்தி என்னைக் கண்டவுடனே பெருஞ்சப்தமாய்க் கூவிக் கொண்டு, வண்டியை விட்டு என் முன்பாகக் கீழே விழுந் தாள். அந்தச் சப்தம் ஞானம்பாளுடைய குரலாயிருந்ததால், அவளைத் தூக்கி நிறுத்தி, முகத்தை உற்றுப் பார்த்தேன். அவள் தேகத்தில் ஒரு ஆபரணமுமில்லாமல், முகத்தில் எதையோ பூசிக்கொண்டு, அழுக்குப் படிந்த தங்கப் பிரதிமை போல உரு மாறியிருந்தாள். நான் அவளைப் பார்த்து, “ஞானம் பாள், ஏன் இப்படி இருக்கிறாய் ?” என்று கேட்டேன். அவள் தேம்பித் தேம்பி அழுதுகொண்டு, “என்னைச் சீக்கிரத்தில் பனம் பள்ளிக் கிராமத்துக்குக் கொண்டு போய்ச் சேருங்கள். சகல காரியங்களையும் பிற்பாடு தெரிவிக்கிறேன்,” என்று நடுநடுங்கிக் கொண்டு சொன்னாள். அவளை உடனே தூக்கி வண்டியில் உட் கார வைத்து, வண்டியைச் சீக்கிரமாக விடும்படி வண்டிக்கார னுக்கு உத்தரவு கொடுத்து, நான் குதிரைமேலேறிக்கொண்டு, நானும் என்னுடைய சிநேகிதரும் வண்டிக்கு முன்னும் பின்னு மாகப் போனோம் ; குண்டு பட்டு மாண்டு போனவர்களுடன் பாதசாரியாய் வந்த இருவர்களையும் பின்கட்டு முறையாகக் கட்டி, அவர்களையும் கூடக் கொண்டு போனோம்.

நாங்கள் அன்று இராத்திரி எட்டு மணிக்குச் சம்பந்தி முதலியாருடைய பனம்பள்ளிக் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந் தோம். அவ்விடத்திலே சம்பந்தி முதலியாரும் பின்னும் அநேக ரும் ஏகமாய்க் கூட்டம் கூடி, மூலைக்கு மூலை ஆள் அனுப்பியும் ஒரு செய்தியும் தெரியாமையால் அழுது பிரலாபித்துக்கொண் டிருந்தார்கள். ஞானம்பாளைக் கண்ட மாத்திரத்தில் அவளைக் கட்டிக்கொண்டு, சம்பந்தி முதலியாரும், அவர் பத்தினி முதலான வர்களும் பட்ட துயரமும், அழுத அழுகையும் இவ்வளவென்று சொல்லி முடியாது. அவள் உரு மாற்றமாய், அப்போதிருந்த கோலத்தைப் பார்த்தவர்கள் யார்தான் மனம் இளகாமல் இருப் பார்கள் ? அவள் அன்றையத் தினம் முழுதும் அன்னபானாதி கள் இல்லாமல் பசிக் களையாயிருப்பதாகத் தெரிந்து, உடனே அவளையும், அவளுடன் கூட வந்த ஆண்டிச்சி அம்மாளையும் ஸ்நானம் செய்யும்படிச் சொல்லி, அவர்கள் போஜனம் செய்த பிற்பாடு, அன்றையத் தினம் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்

லும்படி நாங்கள் கேட்க, ஞானும்பாள் சொல்லத் தொடங்கினுள் :

“ இன்றையத் தினம் விடியற்காலம் நாலு மணிக்கு இந்தக் கிராமத்திலிருந்து எல்லாரும் நம்முடைய ஊருக்குப் பிரயாணமாகும்போது, நானும் எழுந்து வெளியே வந்து, எந்தப் பல்லக்கிலே ஏறிக்கொள்ளலாமென்று பார்த்து வருகையில், சில சிவிகையார் ஒரு பல்லக்கை எனக்குக் காட்டி, “ இதில் ஏறிக் கொள்ளுங்கள், அம்மா,” என்ருர்கள். நான் உடனே அந்தப் பல்லக்கில் ஏறிக்கொண்டு, அப்போது அதிக இருட்டாய் இருந்ததனுல், கதவை மூடிக்கொண்டு, பல்லக்கிலே படுத்துக்கொண்டேன். பல்லக்குத் தூக்குகிறவர்கள் வழக்கப்படிச் சப்தமிட்டுக் கொண்டு என் பல்லக்கையும், மற்றப் பல்லக்குகளையும் தூக்கிக் கொண்டு ஓடினுர்கள். நான் உடனே கண்ணை மூடிக் கொண்டு நித்திரை போய்விட்டேன். பிற்பாடு, சூரியோதய நேரத்தில் நான் விழித்து, பல்லக்கின் கதவைத் திறந்து பார்த்த போது, தெற்கு முகமாய்ப் போக வேண்டிய பல்லக்கு, வடக்கு முகமாய்ப் போய்க்கொண்டிருப்பதாகத் தெரிந்தது. மற்றப் பல்லக்குகளும், வண்டி, குதிரை முதலிய வாகனங்களும் கூட வருகின்றனவாவென்று அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் எட்டி எட்டிப் பார்த்தேன். என் பல்லக்கைத் தவிர, வேறே ஒரு வாகனத்தையாவது, சொந்த மனுஷர்களையாவது நான் பாராதபடியால், எனக்குச் சந்தேகம் உண்டாகி, சிவிகை யாரைக் கூப்பிட்டுப் பல்லக்கு வடக்கே போவதற்குக் காரணம் என்னவென்றும், மற்ற வாகனங்களெல்லாம் எங்கேயென்றும் கேட்டேன். அவர்கள் பதில் சொல்லாமல் பல்லக்கைத் தூக்கிக்கொண்டு ஓடினுர்கள். வழியில் யாராவது வந்தால் அவர்களை விசாரிக்கலாமென்று நான் இரு பக்கமும் பார்த்துக்கொண்டு போனேன். வெகு தூரம் வரையிலும் ஒருவரும் வரவில்லை. இன்னது செய்கிறதென்று தெரியாமல் நான் திகைத்துப் போயிருக்கும் போது, சிவிகையார் ரஸ்தாவுக்கு மேற்கே கொஞ்ச தூரத்தில் ஒரு கள்ளுக் கடையைக் கண்டு, கள்ளு குடிப்பதற்காகப் பல்லக்கை ரஸ்தாவில் நிறுத்திவிட்டு, கள்ளுக் கடைக்குப் போய் விட்டார்கள். தப்புகிறதற்குச் சமயம் இதுதானென்றும், இது தப்பினுல் வேறு சமயம் வாய்க்காதென்றும் எண்ணி, உடனே

நான் கீழ்ப்புறத்துக் கதவைத் திறந்துகொண்டு, கீழே குதித்து, அந்தக் கதவை மூடிவிட்டுப் பல்லக்கின் மறைவிலே போய் ரஸ்தாவுக்குக் கீழ்ப்புறம் இருக்கிற காட்டுக்குள் நுழைந்துவிட்டேன். அது அடர்ந்த காடானதால், அதற்குள்ளே இருக்கிறவர்களை ஒருவரும் கண்டு பிடிக்க முடியாது. என்னுடைய காலில் இருந்த பாதசரம், தண்டை முதலியவைகள் சப்திக்காதபடி நான் அவைகளைக் கழற்றி மடியில் வைத்துக்கொண்டு, முள்ளிலும் கல்லிலும் விழுந்து ஓட ஆரம்பித்தேன். அந்தக் காட்டில் மனுஷருடைய கால் அடியே இல்லாதபடியால், நான் குறுக்கே விழுந்து எனக்குச் சக்தி உள்ள மட்டும் ஓடினேன். மரக் கொம்புகள் என் மயிரைப் பிடித்திழுக்க, செடிகளெல்லாம் சேலையைக் கிழிக்க, முன்னேயிருக்கிற மரம் முட்டித் தள்ள, பின்னேயிருக்கிற மரம் பிடித்துத் தள்ள, பக்கத்து மரங்கள் பாய்ந்து தாக்க, இவ்வகையாக நான் வெகு தூரம் ஓடின பிற்பாடு, கொஞ்ச தூரத்தில் ஒரு சிறிய மண்டபத்தைக் கண்டு, அதற்கு நேரே ஓடினேன். அந்த மண்டபத்தில் இந்த ஆண்டிச்சி அம்மாளைத் தவிர வேறொருவரும் இல்லை. இந்த அம்மாள் என்னைக் கண்ட உடனே, "நீ யார் அம்மா? உன்னைப் பார்த்தால் நான் பூசை செய்து வந்த தெய்வம் பெண் வடிவங்கொண்டு பிரத்தியட்சமாய் வந்தது போல இருக்கிறதே!" என்று என்னை ஸ்தோத்திரம் செய்தார்கள். நான் அந்த அம்மாளுக்கு நமஸ்காரம் செய்து, "நான் தெய்வம் அல்ல, மனுஷிதான்," என்று நடந்த காரியங்களையெல்லாம் தெரிவித்து, என்னை ரட்சிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தேன். அவர்கள் மனமிரங்கி, "என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்கள். "எப்படியாவது என்னைப் பனம்பள்ளிக் கிராமத்துக்குக் கொண்டுபோய் விட வேண்டும்," என்று விண்ணப்பம் செய்தேன். அந்தத் துஷ்டர்கள் துரத்திக்கொண்டு வந்தால், என்னைக் கண்டு பிடிக்காதபடி அவர்கள் எனது ஆபரணங்களையெல்லாம் கழற்றி ஒரு துணியில் முடிந்துகொண்டு, எனக்கும் ஒரு காவி வஸ்திரத்தைத் தரிப்பித்து என்னை உரு மாற்றி அழைத்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

"நாங்கள் தெற்கு முகமாய்ப் போகிற ஒரடிப் பாதை வழியாய் வெகு தூரம் நடந்த பிற்பாடு, ரஸ்தாவில் வந்து சேர்ந்

தோம். அந்த ரஸ்தாவில் நடக்க எனக்கு மனமே இல்லை. ஆயினும், வேறே மார்க்கம் இல்லாதபடியாலும், எனக்குக் கால் நடக்கக் கூடாமல் வீக்கமாயிருந்தபடியாலும் வழியில் ஒரு பாய் வண்டியை வாடகைக்கு அமர்த்தி, அதில் நாங்கள் இருவரும் ஏறிக்கொண்டு அதிக நடுக்கத்துடன் செல்லும் பொழுது, அஸ்தமிக்கிற சமயத்தில் வடக்கே இருந்து இரண்டு குதிரைக்காரர்களும், இரண்டு காலாட்களும் ஓடி வந்தார்கள். அவர்களைப் பார்த்த உடனே, புலியைக் கண்ட பசுப் போல நாங் கள் பயந்து பாதிப் பிராணனாய்ப் போய்விட்டோம். அவர்கள் வண்டிக்குப் பின்னே வந்து என்னை உற்றுப் பார்த்து எப் படியோ நான்தானென்று கண்டு பிடித்துக்கொண்டு, வண்டியை வடக்கே திருப்பச் சொல்லி வண்டிக்காரனை அடித்தார்கள். அந்தச் சமயத்தில் அத்தானும், அவருடைய சிநேகிதரும் குதிரை மேல் ஏறிக்கொண்டு தெற்கே இருந்து ஓடி வந்தார்கள். அவர் களை வெட்டுவதற்காக வடக்கே இருந்து வந்த இரண்டு குதிரைக் காரர்களும் கத்தியை உருவிக்கொண்டு நெருங்கினார்கள். உடனே அவர்கள்மேலே அத்தான் பிரயோகித்த குண்டுகள் பட்டு, அவர்கள் கீழே விழுந்துவிட்டார்கள். பிற்பாடு நடந்த சங்கதிகள் எல்லாம் அத்தானைக் கேட்டால் தெரியும். அந்தச் சம யத்தில் அத்தான் வந்து உதவாவிட்டால், என்னை மறுபடியும் நீங்கள் காணமாட்டீர்கள்," என்று ஞானம்பாள் சொல்லி முடித்தாள்.

## 9. சிறையெடுத்தவனின் முடிவு

ஞானம்பாள் என்னைப் பற்றிப் பிரஸ்தாபிக்கிற வரையில் என்னை ஒருவரும் கவனிப்பார் இல்லை. அவள் பிரஸ்தாபித்த மாத்திரத்தில் எல்லாருடைய கண்களாகிய வண்டுகள் என் னுடைய முகத் தாமரை மேலே மொய்க்க ஆரம்பித்தன.

சம்பந்தி முதலியார் என்னைக் கட்டித் தழுவிக்கொண்டு செய்த ஸ்தோத்திரங்களுக்கு அளவு சங்கியை இல்லை. அவர் சந்தோஷத்தினால் என்னை எவ்வளவு இறுகக் கட்டிப் பிடித்தாரென்றால், நான் மூச்சுவிட இடம் இல்லாமல் திக்கு முக்காட ஆரம்பித்தேன். நான் அவர் பிடித்த பிடியைத் திமிறிக்கொண்டு, அவரைப் பார்த்து, "ஞானம்பாளைக் கொண்டு போனவர்கள் இன்னாரென்று தெரியவில்லை. வடக்கே இருந்து வந்த ரஸ்தாவில் ஞானம்பாளை வளைத்துக்கொண்ட நாலு பேர்களில் குண்டு பட்டு விழுந்து விட்டவர்கள் போக, மற்ற இரண்டு பேர்களையும் நாங்கள் பிடித்துக் கட்டிக்கொண்டு வந்திருக்கிறோம். அவர்களை விசாரித்தால் உண்மை தெரியலாம்," என்று சொன்னேன். எல்லாரும் அதை ஒப்புக்கொண்டு, அந்த இருவரையும் விசாரிக்கத் தொடங்கினார்கள். அவர்களில் ஒருவன் எங்களைப் பார்த்துச் சொல்லுகிறான் :

"நாங்கள் இருவரும் பூங்காவூர்த் தாலூகா தாசில்தாருடைய சேவகர்கள். அவர் இந்த அம்மணியினுடைய அழகையும் குணாதிசயங்களையும் கேள்விப்பட்டு, தாம் மணம் செய்து கொள்ள வேண்டுமென்று விருப்பமானார். அதைக் குறித்துத் தங்களுக்குப் பல கடிதங்கள் அனுப்பியும், தாங்கள் அனுகூலமான மறுமொழி அனுப்பாமையால், எப்படியாவது இந்தப் பெண்ணரசியைக் கொண்டு போய் விவாகம் செய்கிறதென்று நிச்சயித்து, அதற்குத் தகுந்த சமயம் பார்த்துக்கொண்டிருந்தார். நீங்கள் இந்தக் கிராமத்துக்கு வந்திருந்து மறுபடியும் உங்கள் ஊருக்கு நடுச் சாமத்திலே போகிறீர்கள் என்று அவர் கேள்வியுற்று, எங்களையும் ஒரு பல்லக்கையும் அதிரகசியமாய் அனுப்பி, எவ்விதத்திலும் இந்தப் பெண்மணியைக் கொண்டு வரும்படி உத்தரவு கொடுத்தார். அந்தப்படி, நாங்கள் நேற்றைத் தினம் பாதிச் சாமத்தில் வந்து சேர்ந்து, இந்த வீட்டிற்கு முன்பாக நிறுத்தப்பட்டிருந்த அநேக பல்லக்குகளின் மத்தியில் நாங்கள் கொண்டு வந்த பல்லக்கையும் வைத்துவிட்டு, மற்றவர்களைப் போல நாங்களும் படுத்துத் தூங்கினோம். விடிந்து போனால் எங்களுடைய மோசம் வெளியாகுமென்று நினைத்து, இருட்டிலே பயணம் புறப்படும்படி நாங்களே மற்றவர்களை எழுப்பிவிட்டோம். உங்கள் வீட்டு அம்மாமார்கள் எல்லாரும்

தனித்தனியே ஒவ்வொரு பல்லக்கில் ஏறிக்கொண்டார்கள். இந்த அம்மணி வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தவுடனே, எங்களுடைய பல்லக்கின் கதவைத் திறந்து, அதில் ஏறிக்கொள்ளும்படி நாங்கள் சொன்னேம். இந்த அம்மணி கபடம் இல்லாமல் ஏறிக் கதவைச் சாத்திக்கொண்டு, தூங்கிவிட்டார்கள். அந்தப் பல்லக்கைச் சிவிகையார் தூக்கிக்கொண்டு ஒடும்போது, நாங்கள் இருவரும் பின் தொடர்ந்து போனேம். நாங்கள் மற்றப் பல்லக்குகளுடன் எங்களுடைய பல்லக்கையும் கொண்டு போவது போலப் பாசாங்கு பண்ணி, பிறகு கொஞ்சம் கொஞ்சமாய்ப் பின் வாங்கினேம்; மற்ற வாகனங்களும் ஆட்களும் கண் மறைகிற வரையில் மெல்ல மெல்லக் கொண்டு போய், இருட்டில் ஒருவருக்கும் தெரியாமல் எங்களுடைய பல்லக்கைத் திருப்பி அதிவேகமாய்க் கொண்டு போனேம்.

" நாங்கள் இருவரும் வெகு தூரம் பல்லக்குடன் சென்று, பிற்பாடு தாசில்தாருக்குச் சந்தோஷ சமாசாரம் சொல்லுவதற்காக முந்திப் போய், பல்லக்கில் அம்மா வருகிற சமாசாரத்தை அவருக்குத் தெரிவித்தோம். அவர் ஒரு வீட்டிலே தனிமையாய் இருந்துகொண்டு, சந்திரோதயத்துக்காகக் காத்திருக்கும் சாதகப் பட்சி போல அகமகிழ்ச்சியுடன் வழியைப் பார்த்துக்கொண்டிருந்தார். மத்தியானம் பதினேந்து நாழிகைக்குப் பல்லக்கு வந்து சேர்ந்தது. உடனே சிவிகையார் தாசில்தாரிடத்தில் வந்து, "எசமான்கள் விரும்பின மாதரசியைப் பல்லக்குடன் கொண்டுவந்துவிட்டோம்; நாங்கள் பட்ட பிரயாசைக்குத் தகுந்த சன்மானம் செய்ய வேண்டும்," என்று சொன்னுர்கள். உடனே தாசில்தார் எழுந்து ஒடி, அதிக ஆவலுடன் பல்லக்கைத் திறந்து பார்க்க, உள்ளே ஒருவருமில்லாமல் சுத்த சூனியமாய் இருந்தது. அவரும் நாங்களும் பல்லக்கின் மூலை முடுக்குகளெல்லாம் தேடிப் பார்த்தோம். இந்த அம்மணியை எங்கும் காணேம். பஞ்சரத்தில் இருந்த கிளி பறந்து போன பிற்பாடு, பஞ்சரம் வெறுமையாயிருப்பது போலப் பல்லக்கும் வெறுமையாயிருந்தது. தாசில்தார் தம்முடைய அப்பனும் பாட்டனும் தேடி வைத்த பொக்கிஷத்தை நாங்கள் அபகரித்துக்கொண்டது போல, எங்கள் மேலே ரௌத்திராகாரமாய்க் கோபிக்க ஆரம்பித்தார். அவர் அடிப்பார் என்று பயந்து

கொண்டு, நாங்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தூர விலகினேம். எங்களை அடிக்க அவர் கையில் ஒரு ஆயுதமும் இல்லாமல் இருந் ததால், நாங்கள் தெருவிலே கழற்றி வைத்திருந்த எங்களுடைய செருப்பைக் கையிலே தூக்கிக்கொண்டு எங்களைத் துரத்தினர். நாங்கள் அகப்படாமல் சிட்டாய்ப் பறந்தோம். நாங்கள் ஓட, அவர் ஓட, இவ்வகையாக வெகு தூரம் துரத்தி வந்த பிற்பாடு, அவர் கையிலிருந்த செருப்பை எங்கள் மேலே எறிந்தார். அந்தச் செருப்பு, ஒரு மரத்தின்மேலே பட்டு, மறுபடியும் திரும்பித் தாசில்தாருடைய முகத்திலே மோதிற்று. ஔஷதப் பிரயோகத்தினுல் விஷம் இறங்குவது போலச் செருப்படி பட்ட பிற்பாடு, தாசில்தாருக்குக் கோபம் தணிந்து, எங்களை நயமாகக் கூப்பிட்டுக் காரியங்களை விசாரிக்க ஆரம்பித்தார். போகிகள் நடு வழியில் ஒரு இடத்தில் கள்ளு குடிக்கிறதற்காகப் பல்லக்கை நிறுத்தினதை ஒப்புக்கொண்டபடியால், அந்த இடத்தில் இந்த அம்மணி தப்பிப் போயிருக்கலாம் என்று உத் தேசித்து, உடனே தாசில்தாரும் அவருடைய நேசனும் இரண்டு குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு, எங்கள் இருவரை யும் கூட அழைத்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

“ நாங்கள் காடு மேடுகளெல்லாம் சுற்றிப் பார்த்துக்கொண்டு, சூரியாஸ்தமன சமயத்தில் இந்த அம்மணி ஏறிக்கொண்டு வந்த வண்டியைக் கண்டு வழி மறித்தோம். அப்போது நடந்த யுத்தத்தில் தாசில்தாரும் அவருடைய நேசனும் குண்டுகள் பட்டுக் கீழே விழுந்துவிட்டார்கள். இந்த மனேன்மணி அப்போது மாறு வேஷம் தரித்திருந்த போதிலும், மேகத்துக் குள் மறைந்திருக்கிற சந்திர சூரியர்களை அவைகளின் பிரபை காட்டிவிடுவது போல, இந்த உத்தமியை அவருடைய முகக் காந்தி காட்டிவிட்டது. மற்றச் சங்கதிகளெல்லாம் அப்போது கூட இருந்த உங்களுடைய மனுஷருக்குத் தெரியுமானதால், நான் சொல்ல வேண்டுவதில்லை,” என்ருன்.

இதைக் கேட்ட உடனே சம்பந்தி முதலியார் மறுபடியும் என்னைத் தழுவிக்கொண்டு, சொல்லுகிருர்: “ நீ செய்த உப காரத்தை நான் ஒருக்காலும் மறப்பேனு? என் புத்திரி காணு மல் போன உடனே, உன்மேலும் சந்தேகம் நினைத்தேன்.

பிற்பாடு பல காரணங்களால், அந்தச் சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது. என் மகளுக்கும் எங்களுக்கும் நீ பிராண பிச்சை கொடுத்துக் காப்பாற்றினுய். உனக்குத் திரிலோகங்களேயும் கொடுத்தாலும் தகும். ஆகிலும், நீ அங்கீகரிக்கும்படியான ஒரு சன்மானத்தை உனக்குச் செய்ய யோசித்திருக்கிறேன்,'' என்ருர். அவரும், மற்றவர்களும் எனக்குச் செய்த ஸ்தோத்திரங் களேயெல்லாம் ஞானும்பாளுடைய ஒரு மந்தஹாசத்துக்குச் சமானமாக நான் நினேக்கவில்லே.

ஞானும்பாள் தப்பி வந்த சமாசாரம் என்னுடைய தாய்தந் தையர் கேள்விப்பட்டு, அவளேப் பார்க்கும்பொருட்டு, மறுநாள் உதய நேரத்துக்குப் பனம்பள்ளிக் கிராமத்துக்கு வந்தார்கள். அவர்களேக் கண்ட உடனே, சம்பந்தி முதலியார் சந்தோஷம் அடைந்து சொல்லுகிருர்: “உங்களுடைய புத்திர சிரோமணி யால் எங்களுடைய அருமைக் குமாரத்தியை நாங்கள் மறுபடியும் கண்டோம்; அவளே இன்னும் இரண்டு நாள் வரைக்கும் காணு மல் இருப்போமானுல், எங்களுடைய உயிரைக் காண மாட் டோம். நாங்கள் குடும்பத்துடன் மாண்டு போயிருப்போம். உங்கள் குமாரனே எங்களுக்குக் குடும்பப் பிரதிஷ்டை செய்வித் தான். ஞானும்பாள் அவனுல் ரட்சிக்கப்பட்டபடியால், அவளே அவனுக்கே தத்தம் செய்ய யோசித்திருக்கிறேன். இதற்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டார். “உங்களுடைய இஷ்டப்படி நடக்கக் காத்திருக்கிருேம்,'' என்று என்னுடைய தாய்தந்தையர் சொன்னுர்கள்; கலியாணத்தை இனித் தாமதப்படுத்தக் கூடாதென்றும், சீக்கிரத்தில் நிறைவேற்ற வேண்டுமென்றும் பேசிக்கொண்டார்கள்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போது வீட்டுக்கு வெளி யில் யுத்தம் நடப்பது போலப் பெரிய இரைச்சலும் சப்தமும் கேட்டு, நாங்கள் உடனே வெளியே ஒடிப் பார்த்தோம். அனேக சிப்பாய்களும், சேவகர்களும் உருவின கத்தி முதலிய ஆயுதங் களுடனே வந்து எங்கள் வீட்டை வளேத்துக்கொண்டார்கள். அவர்களுடன்கூட ஒரு பெரிய குதிரையின்மேல் ஏறிக்கொண்டு வந்த ஒரு சுதேச உத்தியோகஸ்தர் அதிகக் கோபத்துடன்

"பிரதாப முதலி என்பவன் யார்?" என்று கேட்க, "நான் தான்," என்று சொல்லிக்கொண்டு அவருக்கு எதிரே நான் போனேன். உடனே என்னைப் பிடித்துக் கட்டும்படி அவர் உத்தரவு கொடுத்தார். உடனே என் தகப்பனுரும், சம்பந்தி முதலியாரும் ஓடி வந்து, "அந்தப் பிள்ளையைக் கட்ட வேண்டிய காரணம் என்ன? அவன் என்ன குற்றம் செய்தான்?" என்று கேட்டார்கள். எங்கள் பந்துக்கள், வேலைக்காரர்கள், அந்தக் கிராமத்துக் குடிகள் முதலான இருநூறு ஜனங்கள் கூட்டம் கூடினதை, அந்த உத்தியோகஸ்தர் கண்டு பயந்து, என்னைக் கட்ட வேண்டாமென்று உத்தரவு கொடுத்து, தெருத் திண்ணைமேல் உட்கார்ந்துகொண்டு, என்னைப் பார்த்து, "ஒரு பெரிய உத்தியோகஸ்தனுகிய தாசில்தாரைக் காரணமில்லாமல் நீர் கொலை செய்துவிட்டதால், அதைப் பற்றி விசாரிக்க வந்திருக்கிறோம். நீர் என்ன சொல்லுகிறீர்?" என்று கேட்டார். இதைக் கேட்ட உடனே எனக்குத் தைரியம் உண்டாகி, ஞானம்பாள் விஷயத்தில் அந்தத் தாசில்தார் செய்த அக்கிரமங்களை எல்லாம் ஆதியோடந்தமாகத் தெரிவித்தேன். உடனே அவர், "நீர் சொல்வதற்குச் சாட்சிகள் உண்டா?" என்று வினவினுர். சாக்ஷிகள் இருக்கிறுர்களென்று சொல்லி, நான் பிடித்து வைத்திருந்த இரண்டு சேவகர்களையும் அவர் முன்னே கொண்டு வந்து விட்டேன். அவர்கள் ஒரு காரியத்தையும் மறைக்காமல் சகல சங்கதிகளையும் விபரமாய்ச் சொல்லி, வாக்குமூலம் எழுதி வைத்தார்கள். பிற்பாடு அந்த உத்தியோகஸ்தர் ஞானம்பாளைத் திரைமறைவில் இருக்கச் சொல்லி, அவளையும், அவளுடன் கூட வந்த ஆண்டிச்சி அம்மாளையும் விசாரித்தார். கடைசியாய், அவர் உண்மையைத் தெரிந்துகொண்டு, என்னை நோக்கி, "தாசில்தாரையும், அவருடைய நேசனையும் நீர் கொலை செய்ததாக மட்டும் பிரஸ்தாபமே தவிர, தாசில்தார் செய்த அக்கிரமங்களை ஒருவரும் தெரிவிக்கவில்லை. இப்போது தான் உண்மை வெளியாயிற்று. தகுந்த அந்தஸ்துள்ள ஒரு கன்னிப் பெண்ணை அந்தத் தாசில்தார் பலவந்தமாய்க் கொண்டு போனதும், பிற்பாடு அந்தப் பெண் தப்பி ஓடும் பொழுது, மறுபடியும் அவன் தொடர்ந்து பலாத்காரம் செய்ய யத்தனப்பட்டதும் பெரிய அக்கிரமம். அந்தப் பெண்ணைத்

தேடிக்கொண்டு போன உம்மை, அவனும் அவனுடைய நேச-னும் கத்தி உருவி வெட்ட வந்தபடியால், உமது பிராணனைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டு, அந்தத் துஷ்டர்களைக் கொலை செய்ய வேண்டியது அவசியமாய் இருந்தது. ஆகையால், இந்த விஷயத்தில் உம்மிடத்தில் யாதொரு குற்றமும் இல்லை. ஜனங்களுடைய நன்மைக்காக நியமிக்கப்பட்ட அந்தக் கொடியன், அவனுடைய அதிகாரத்தைத் துர்விஷயத்தில் உப யோகப்படுத்தினபடியால், அவன் ராஜ தண்டனைக்கும், தெய்வ தண்டனைக்கும் பாத்திரனாக இருக்கிறான். தெய்வ தண்டனை முந்திக்கொண்டபடியால், ராஜ தண்டனைக்கு இடமில்லாமல் போயிற்று. ஆகையால், நீர் நிரபராதி என்று மேலதி காரிகளுக்கு விஞ்ஞாபிக்கப்படும்," என்றார். இதைக் கேட்ட வுடனே எங்களுக்கெல்லாம் போன உயிர் மறுபடியும் திரும்பி வந்தது போல ஆநந்தம் உண்டாயிற்று. உடனே அந்தக் கன வான், விசாரணையான விவரங்களைக் கண்டு ஒரு விஞ்ஞாபனப் பத்திரிகை எழுதி, அதைச் சில சேவகர் கையிலே கொடுத்து, கலெக்டரிடத்தில் கொடுக்கும்படி அனுப்பி, எங்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு போனார்.

## 10. பிறவாக் குழந்தை பிரமாதம் விளைவித்தது!

எனக்கும் ஞானம்பாளுக்கும் அதிசீக்கிரத்தில் விவாகம் முடிக்க வேண்டுமென்று சம்பந்தி முதலியார் அவசரப்பட்டார். அவருடைய துரிதத்தைப் பார்த்தால், அன்றையத் தினமே கலியாணம் முடிந்தாலும் அவருக்குச் சந்தோஷமாய் இருக்கு மென்று தோன்றிற்று. என்னுடைய மனோபீஷ்டமும் அப்படியே இருந்தது. ஆனால், என் தாய்தந்தையர் தூரத்திலிருக்கிற பந்து ஜனங்களும், தேவராஜப் பிள்ளை கனகசபை முதலானவர் களும் கலியாணத்துக்கு வரும்படியான சாவகாசத்தை யோசித்து முகூர்த்தம் நியமித்ததனால், கலியாணம் இருபது நாள் பிந்திப் போய்விட்டது. அந்த இருபது நாளும் இருபது

யுகங்களைப் போல இருந்தன. அந்தக் காலத்தைத் தொலைக்க என்னாலே கூடியவரையில் பிரயாசைப்பட்டும் தொலையவில்லை. தன்னுடைய இஷ்டப்படி கண்ட இடமெல்லாம் ஓடித் திரிகிற துஷ்டக் காளை, வண்டியில் கட்டின உடனே படுத்துக்கொள்வது போல, அதற்கு முன் அதிதுரிதமாக ஓடிக்கொண்டிருந்த காலமானது, இப்போது சுத்தமாய் அசையாமல் நின்றுவிட்டது. கடைசியாய், அந்தக் காலமும் முடிந்தது.

ஞானம்பாளுக்கும் எனக்கும் கலியாணமும் முடிந்தது. அந்தக் கலியாண வைபவத்தைப் பிறர் சொல்ல வேண்டுமே அல்லாது, நான் சொல்லிக்கொள்வது தற்புகழ்ச்சியாய் முடியும். அன்றியும், ஞானம்பாளை நான் மாலை சூட்டப்பெற்ற பாக்கியத்தைப் பார்க்கிலும், மற்றக் கலியாணச் சம்பிரமங்கள் விசேஷமல்ல. ஆகையால், அவைகளை விவரிக்காமல் விட்டுவிடுகிறேன்.

விக்கிரமாதித்தன் காட்டில் ஆறு மாதமும் நாட்டில் ஆறு மாதமும் வசித்தது போல, நானும், ஞானம்பாளும் அவள் தகப்பனார் வீட்டில் ஆறு மாதமும், என் வீட்டில் ஆறு மாதமும் மாறி மாறி வசிக்கிறதென்று என் தகப்பனாரும், ஞானம்பாள் தகப்பனாரும் நிபந்தனை செய்துகொண்டார்கள். அந்தப் பிரகாரம் நாங்கள் முந்தின ஆறு மாதம் சம்பந்தி முதலியார் வீட்டிலும், பிந்தின ஆறு மாதம் என் தகப்பனார் வீட்டிலும் இருந்து வந்தோம். என் தாயாரும், ஞானம்பாளும் தாயும் மகளும் போல அதிக நேசமும் பிரியமுமாக ஒத்து வாழ்ந்தார்கள். ஞானம்பாள் வருகிறதற்கு முன், என் தாயார் தங்களுடைய தேக சௌக்கியத்துக்கு அடுத்த காரியங்களைக் கவனிப்பதற்குக்கூட நேரமில்லாமல் குடும்ப யோக க்ஷேம காரியங்களை ஏக தேசத்தில் பார்த்துச் சிரமப்பட்டார்கள். ஞானம்பாள் வந்தது முதல், அவளும் குடும்பக் காரியங்களை வகித்துப் பார்த்து வந்ததும் தவிர, என் தாயாருடைய தேக போஷணைக்கு அடுத்த காரியங்களையும் அவளுடைய கையாலே செய்து வந்தபடியால், என் தாயாருக்குப் பெரிய ஆறுதலும், சிரம பரிகாரமுமாயிருந்தன. அன்றியும், எனக்கு வேலை செய்யப் பல வேலைக்காரர்கள் இருந்தாலும் கலியாணத்துக்குப் பிற்பாடு என்னுடைய வேலை

களையும் ஞானம்பாளே செய்து வருவாள். நான் ஒரு நாள் அவளைப் பார்த்து, "நாமென்ன ஏழைகளா ? நமக்கு வேலை செய்ய ஊழியக்காரர்கள் இல்லையா ? நீ உன் கையாலே வேலை செய்வது எனக்குத் திருப்தியில்லை," என, அவள், "எளிய ஸ்திரீகள் கைப்பாடு பட்டு, ஜீவனத்துக்கு வேண்டிய காரியங் களையும் சம்பாதித்துக்கொண்டு, சமையல் முதலிய வீட்டு வேலை களையும் செய்து வருகிறார்கள். எனக்கு அப்படிப்பட்ட வேலை கள் யாதொன்றும் இல்லை. உங்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளையாவது நான் செய்யக் கூடாதா ?" என்றாள்.

கலியாணத்துக்கு முன்பு பிடரியைப் பிடித்துத் தள்ளினா லும் போகாமலிருந்த காலம், இப்போது வாயு வேகம் மனோ வேகமாக ஓடத் தலைப்பட்டது. கலியாணத்துக்குப் பின்பு ஒன்றரை வருஷம் ஒன்றரை நிமிஷம் போலப் பறந்துவிட்டது. நாங்கள் இரண்டாவது தடவை சம்பந்தி முதலியார் வீட்டில் இருக்க வேண்டிய ஆறு மாசமும் கடந்து போய்விட்டதால், ஞானம்பாளை என் வீட்டுக்கு வரும்படி உத்தரவு செய்து, நான் முந்திப் போய்விட்டேன். அதற்குச் சற்று நேரத்திற்குப் பின்பு, சம்பந்தி முதலியார் என் தகப்பனாரிடத்திற்கு வந்து, "ஞானம்பாள் கர்ப்பவதியாயிருப்பதாக அவளுடைய தாயார் சொல்லுகிறாள். அவளுக்கு முதல் பிரசவத்தில் ஆண் குழந்தை பிறக்குமென்று, அவளுடைய ஜாதகத்தில் எழுதப்பட்டிருக் கிறது. அந்தப் பிள்ளையை எனக்கு நீர் சுவீகாரம் கொடுக்க வேண்டும். அதற்கு என்ன சொல்லுகிறீர் ?" என்றார். என் தகப்பனார் சிரித்துக்கொண்டு, "கர்ப்பமே நிச்சயமென்று தெரியவில்லை ; அது நிச்சயமாய் இருந்தாலும், ஆண் பிள்ளை தான் பிறக்குமென்று எப்படி நிச்சயிக்கக் கூடும்? பின்னும், ஜேஷ்ட புத்திர சுவீகாரமும், புத்திரிகா புத்திர சுவீகாரமும் செல்லாதென்று தர்ம சாஸ்திர வசனமும் இருக்கின்றதே !" என்றார். சம்பந்தி முதலியார் என் தகப்பனாரைப் பார்த்து, "உம்மை நான் தர்ம சாஸ்திரம் கேட்கவில்லை. நீர் அந்தப் பிள்ளையைச் சுவீகாரம் கொடுப்பீரா ? மாட்டீரா ? இரண்டில் ஒன்று சொல்லும்," என்றார். உடனே என் தகப்பனார், "எனக்குப் பேரன் வேண்டாமா! உமக்கு எப்படி சுவீகா ரம் கொடுப்பேன் ?" என்றார். இதைக் கேட்டவுடனே சம்பந்தி

முதலியாருக்கு ஆத்திரம் உண்டாகி, தம் வீட்டுக்குப் போய்விட்டார். அங்கே அவர் ஞானம்பாளைக் கூப்பிட்டு, “ உனக்கு நான் வேண்டுமா ? புருஷன் வேண்டுமா ?” என்று கேட்க, அவள், “ இருவருந்தான் வேண்டும்,” என்ருளாம். “ இருவரிலும் யார் விசேஷம் ?” என்று அவர் மறுபடியும் கேட்க, அவள் புருஷன் தான் விசேஷமென்று நேரே பதில் சொன்னுல் தகப்பனுருக்குக் கோபம் வருமென்று நினைத்து, “ என் தாயாருக்குத் தன் தகப்பனைப் பார்க்கிலும், நீங்கள் விசேஷம் அல்லவா ?” என்று விநயமாகவும், மறை பொருளாகவும் மறுமொழி சொன்னுளாம். அதற்குச் சற்று நேரம் அவருக்குப் பொருள் தெரியாமல் இருந்து, பிற்பாடு தெரிந்துகொண்டு, ஞானம்பாளை வாயில் வந்தபடித் தூஷித்து, “ இனிமேல் நீ உன் புருஷன் வீட்டிற்குப் போகிறதைப் பார்க்கலாம் ! அவனும் இங்கே வருவதைப் பார்க்கலாம் !” என்று சொன்னுராம். தூஷணையான வார்த்தைகளை அவள் ஒரு நாளும் கேளாதவளானபடியால், அவளுக்கு உடனே நடுக்கலும் சுரமும் கண்டு, கர்ப்பத்துக்கு அபாயம் வந்துவிட்டது.

இந்தச் செய்திகளெல்லாம் என் தகப்பனுர் கேள்விப்பட்டு, அவர் என்னை அழைத்து, “ உனக்குத் தகப்பன் வேண்டுமா ? பெண்சாதி வேண்டுமா ?” என, நான் “ இருவருந்தான் வேண்டும்,” என்றேன். அவர், “ அது கூடாது ; நான் வேண்டுமானுல், நீ உன் மனைவியைத் தள்ளிவிட வேண்டும்,” என்ருர். நான் என் தகப்பனுரைப் பார்த்து, “ பிதுர் வாக்கியம் நியாயத்திற்கும் தர்மத்திற்கும் ஒத்திருக்கிற பட்சத்தில், நான் அந்தப்படி நடக்க வேண்டியதுதான். சகல சாஸ்திரங்களுக்கும் வேத வாக்கியங்களுக்கும் விரோதமாகவும், காரணமில்லாமலும் என் மனைவியைத் தள்ளிவிடும்படிச் சொல்லுகிறீர்கள். அந்த உத்தரவை எப்படி நான் அநுஷ்டிக்கக் கூடும் ?” என்றேன். உடனே அவருக்குக் கடும் கோபம் உண்டாகி, “ அடா பயலே ! இதற்குத்தானு உன்னை நான் பெற்றேன் ? வளர்த்தேன் ? நேற்று வந்தவளைப் பொருளாயெண்ணி, என்னை அலட்சியம் செய்தாயே ! இனிமேல் அவளும் இங்கே வரக் கூடாது. நீயும் அங்கே போகக் கூடாது. இனி நீ அவளிடத்தில் பேசினுல், எனக்கு நீ பிள்ளையுமல்ல ! நான் உனக்குத் தகப்பனுமல்ல ! என்னுடைய ஆஸ்தியும் உனக்கு நாஸ்திதான் !” என்ருர்.

இப்படிப்பட்ட வார்த்தைகளை இதற்கு முன் ஒரு நாளும் நான் கேட்டதில்லை. ஆகையினால், அந்த வார்த்தைகள் ஒவ்வொன்றும் பாணம் போல என் இருதயத்தைப் பிளந்தது. சம்பந்தி முதலி யார் வீட்டுக்கு நானும் போகக் கூடாது, என் வீட்டுக்கு ஞானும் பாளும் வரக் கூடாது என்று சம்பந்தி முதலியாரும் என் தகப்ப னாரும் ஆணையிட்டு மறித்த பிற்பாடு, இனிமேல் அவளை எப் போது காணப் போகிறேனென்று நான் துக்கத்தில் மூழ்கியிருக் கும் போது என் தாயார் பரிதாப முகத்துடன் என்னிடம் வந் தார்கள்.

அவர்களைக் கண்டவுடனே, "அம்மா! நடந்த சங்கதிகளை எல்லாம் கேள்விப்பட்டீர்களா?" என்று சொல்லி அழுதேன். அவர்களும் சற்று நேரம் என்னுடன் கூட விசனப்பட்ட பிற்பாடு சொல்லுகிறார்கள்: "அப்பா! நீ கிலேசப் பட வேண்டாம். பெரியோர்களாய் இருக்கிறவர்களுக்கு ஒவ்வொரு சமயத்தில் கோபம் வருகிறதும், பிற்பாடு தணிகிறதும் வழக்கந்தான். இப்போது உன் தந்தையார் ஏதோ சொன்னார்களென்று நீ துக்கிக்க வேண்டாம். நீ பிறந்தது முதல் இந்நாள் மட்டும் உன்னை உயிருக்குயிராய் வளர்த்தவர்கள், இப்போது கோபமாய் ஒரு வார்த்தை சொன்னால், அதற்காக மனஸ்தாபப்படலாமா? அதற்கு முன் அவர்கள் செய்த நன்மையை மறந்து விடலாமா? அவர்கள் கோபத்திலே சொன்ன வார்த்தைகளையெல்லாம் நிச மென்று நினைத்து, நீ மனம் வருந்தாதே. ஞானும்பாளை நீ சீக்கிரத்திலே பார்ப்பாய்," என்று பல விதமாக எனக்குத் திடம் சொன்னார்கள். அவர்கள் என்னுடன் கூட இருந்த வரையில் எனக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருந்தது; அவர் கள் போனவுடனே அந்த ஆறுதலும் போய்விட்டது. என்னு டைய வியாகூலத்தை அதிகப்படுத்துவதற்கு இன்னொரு காரணமும் கூடச் சேர்ந்தது: சம்பந்தி முதலியாருக்கும் என் தகப்பனாருக்கும் உண்டான சண்டை நிமித்தம் ஞானும் பாளுக்கு வியாதி அதிகரித்து, அவளுடைய கர்ப்பமும் அழிந்து போனதாக நான் கேள்விப்பட்டு, வேல் தொளைத்த புண்ணிலே கொள்ளிக் கட்டையைச் சொருகினது போலப் பெருந்துய ரத்தை அடைந்தேன். அந்தச் சண்டைக்குக் காரணமாயிருந்த

கர்ப்பம் அழிந்து போயும், அதனால் விளைந்த கலகம் தீரவில்லை. குதிரை கீழே தூக்கிப் போட்டதும் அல்லாமல் மேலே ஏறியும் மிதித்தது போல என் தகப்பனார் மறுபடியும் சும்மா இராமல் எனக்கு வேறே பெண் விசாரித்துக் கலியாணம் செய்விக்க வேண்டுமென்று எண்ணம் கொண்டதாக நான் கேள்விப்பட்டேன். இப்படிப்பட்டவர்களுடைய முகத்தில் விழிக்காமல், ஞானாம்பாளையும் அழைத்துக்கொண்டு எங்கேயாவது போய்விடலாம் என்கிற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. ஆனால், ஞானாம்பாள் வியாதியாயிருப்பதனாலே, அவளை அழைத்துக்கொண்டு போவது தகுதியல்லவென்றும், நான் முந்திப் போய் ஒரு இடத்தில் நிலைத்திருந்துகொண்டு, பிற்பாடு அவளை அழைத்துக் கொள்ளலாமென்றும் எனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டேன்; ஆனால், அவளுக்குத் தெரிவிக்காமல் போனால், அவளுடைய வியாதி அதிகரிக்குமென்று பயந்து, சகல விவரங்களையும் ஒரு அந்தரங்கக் கடித மூலமாக அவளுக்குத் தெரிவித்தேன். அதற்கு உடனே அவள் மறுமொழி அனுப்பினாள்; அதில், நான் தேசாந்தரம் போகக் கூடாதென்றும், அப்படி நான் தேசாந்தரம் போகிற பட்சத்தில் தன்னையும் அழைத்துக்கொண்டு போக வேணுமென்றும் எழுதியிருந்தாள். நான், அவளை அழைத்துக் கொண்டு போவதற்குள்ள அசந்தர்ப்பங்களை விவரித்து, இரண்டாவது கடிதம் அனுப்பினேன்; அதற்கு ஒரு பதிலும் வராதபடியால், நான் சொன்ன நியாயங்களை அவள் ஏற்றுக்கொண்டாளென்று ஊகித்துக்கொண்டேன். அவளுக்கு நான் புறப்படப் போகிற தினத்தையும் தெரிவிக்கவில்லை.

## 11. பிரிந்தவர் கூடுதல்

---

ஒரு நாள் இராத்திரி எல்லாரும் தூங்குகிற சமயத்தில் எனக்கு விசுவாசமுள்ள இரண்டு வேலைக்காரர்களையும் கூட்டிக் கொண்டு, வழிக்கு வேண்டிய சாமான்களையும் எடுத்துக்

கொண்டு, எங்களுக்குச் சொந்தமான ஒரு யாத்திரை வண்டி யில் ஏறி, கிழக்கு ரஸ்தா வழியாகப் பிரயாணம் புறப்பட் டேன். எல்லாரும் தாங்கள் போகிற ஊரை நிச்சயித்துக் கொண்டு, அந்த ஊருக்குப் போகிற மார்க்கமாய்ப் போவார் கள். நான் இன்ன ஊருக்குப் போகிறதென்கிற நிச்சயமில்லா மல் கிழக்கு ரஸ்தாவைப் பிடித்துக்கொண்டு, அதி துரிதமாய்ப் போனேன்.

நான் போகும் போது என்னுடைய தேகம் மட்டும் கூட வந்ததே தவிர, என் மனம் என் தாயாரிடத்திலும், ஞானம் பாளிடத்திலும் தங்கிவிட்டது. வழியில் என்ன அதிசயமென்று யாராவது கேட்டால், எனக்கு இன்னதென்று தெரியாது; மறுநாள் மத்தியானம் எங்கே தங்கியிருந்தோம், என்ன ஆகாரம் செய்தோம் என்பதை என் வேலைக்காரர்களைக் கேட்க வேண்டுமே தவிர, எனக்கு யாதொன்றும் தெரியாது. என் பிராணன், மனம் முதலியவைகளை எல்லாம் சத்தியபுரி யிலே வைத்துவிட்டு, நான் ஒரு சஞ்சாரப் பிரேதம் போலச் சென்றேன். அன்றையத் தினம் ஐந்து காதவழி நடந்து, இராத் திரிப் பத்து மணிக்கு நல்லூர் என்னும் கிராமத்தை அடைந் தோம். அந்த ஊர்ச் சத்திரத்தில் நான் ஒரு தனிமையான இடத் தில் பஞ்சணையை விரித்துப் படுத்துக்கொண்டேன். என்னுடைய வேலைக்காரர்கள் சமையல் செய்வதற்காகப் போய்விட்டார்கள். நான் முகம் மறைய முக்காடிட்டுப் படுத்துக்கொண்டு, இனி மேல் ஞானம்பாளைப் பார்க்கக் கூடாதென்று என் பிதா சொன்ன வாக்கியமே நிறைவேறிப் போகுமோ என்று மனங் கலங்கி, எண்ணுததெல்லாம் எண்ணிக்கொண்டு படுத்திருந் தேன். நான் படுத்த சற்றுநேரத்திற்குப் பின்பு யாரோ வந்து என் னைத் தட்டினார்கள். நான் உடனே என் முக்காட்டைத் திறந்து பார்க்க, ஞானம்பாள் வந்து நிற்பது போலத் தோன்றிற்று. இது கனவோ அல்லது உருவெளித் தோற்றமோ என்று நான் மயங்கிக்கொண்டிருக்கையில், அவளுடைய கண்ணீர்ப் பிரவா கம் என் முகத்தின்மேல் விழுந்து, என் மயக்கத்தைத் தெளி வித்தது. உடனே அவள் என்னைத் தழுவிக்கொண்டு, "நான் உங்களுக்கு என்ன அபராதம் செய்தேன்? என் முகத்தில்

விழிக்காமல் வந்து விட்டீர்களே!" என்று பொருமினுள். நானும் சற்றுநேரம் கண் கலங்கின பிற்பாடு, அவளைப் பார்த்து, "நான் இன்றையத் தினம் புறப்படுகிறேன் என்பதும், இந்த வழி யாய்ப் போகிறேன் என்பதும் உனக்கு எப்படித் தெரியும்? நீ இவ்வளவு தூரம் எப்படி வந்தாய்?" என்று கேட்க, அவள், "நீங் கள் பிரயாணம் புறப்படுகிறது நிச்சயமென்று உங்கள் கடிதங்க ளால் அறிந்துகொண்டேன். நீங்கள் எங்கே போனுலும், உங்க ளுக்குப் பிரியமான ஊழியக்காரர்களாகிய கந்தசாமி, வினைதீர்த் தான் இவர்களையும் கூட அழைத்துக்கொண்டு போவீர்களென்ப தும் எனக்குத் தெரியும். அவர்களுடைய பெண்சாதிகள் எனக் குத் தாதிகளானதனுலே, அவர்களுடைய புருஷர்களை விசா ரித்து, நீங்கள் புறப்படுகிற நிச்சயமான தினத்தை அறியும்படிச் சொல்லியிருந்தேன். நீங்கள் உங்களுடைய பெண்சாதிக்கு உண் மையை மறைத்தாலும், உங்களுடைய வேலைக்காரர்கள் அவர்க ளுடைய பெண்சாதிகளுக்கு உண்மையை மறைக்கவில்லை. ஆகையால், அவர்கள் மூலமாக நீங்கள் புறப்படுகிற தினத்தைத் தெரிந்துகொண்டு, நானும் புறப்படுகிறதற்கு ஆயத்தமாய் இருந் தேன். என்னுடைய தாதிகளும், தங்கள் புருஷர்களைப் பிரிந் திருக்க மனம் இல்லாதவர்களாய்த் தங்களை அழைத்துக்கொண்டு போகும்படிப் பிரார்த்தித்தார்கள். அவர்களும், நானும் நீங்கள் புறப்பட்டுச் சற்று நேரத்துக்குப் பின்பு ஒருவருக்கும் தெரியாமல் ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு, உங்களுடைய கண்ணிலே படாமல் கொஞ்ச தூரம் பின்னிட்டு, உங்களைத் தொடர்ந்து வந்து சேர்ந்தோம்," என்ருள்.

ஞானம்பாளைக் கண்டவுடனே, சூரியனைக் கண்ட பனி போல என்னுடைய துக்கமெல்லாம் விலகிவிட்டது. ஆனுல், அவள் வியாதிப்பட்டு மெலிந்திருந்தபடியால், "இப்படிப்பட்ட பலவீனமான ஸ்திதியில் நீ யாத்திரை செய்யக் கூடுமா?" என்று கேட்டேன். அவள் தனக்குப் பூரண சௌக்கியமாய் விட்டதால், யாத்திரை செய்யலாமென்று சொன்னுள். நான் அவளைப் பார்த்து, "என்னை நீ கலியாணம் செய்த நிமித்தம் உன்னுடைய உற்ருர் பெற்ருரையும், சகல சுகங்களையும் இழந்து, வனந்தரத்தில் சஞ்சரிக்கும்படி நேரிட்டதே!"

என்றேன். அவள் என்னைப் பார்த்து, " நான் சொல்ல வேண்டி யதை நீங்கள் சொல்லுகிறீர்கள் ! என்னுலேதான், உங்களுக்கு இப்படிப்பட்ட கதி வாய்த்தது. பின்னும் நீங்கள் இல்லாத இடம் நாடாயிருந்தாலும், அதுதான் காடு. உங்களுடன் கூடி யிருக்கிற காடே எனக்கு நாடு," என்று சீதை இராமருக்குச் சொன்னது போல எனக்குச் சொன்னுள். அவள் மறுபடியும் என்னைப் பார்த்து, " எனக்குத் தங்கை எப்போது வருவாள் ?" என்று கேட்டாள். அதற்கு நான் அர்த்தம் தெரியாமல் மயங் கினேன். அவள் சிரித்துக்கொண்டு, " என்னுடைய மாமா, உங்களுக்கு வேறே பெண் தேடி, விவாகம் செய்ய யோசித்திருப் பதாக நான் கேள்விப்பட்டேன்," என்ருள். அதற்கு நான், " என்னுடைய சிநேகன் ஒருவன் இரண்டு தாரம் கலியாணம் செய்து பட்ட பாடுகளை நினைக்கும்போது, எனக்குத் தலை நடுக்க மாய் இருக்கின்றது ! நான், சந்திர சூரியர் தெற்கு வடக்கானு லும், இரண்டு தாரம் கொள்ளச் சம்மதியேன்," என்றேன்.



## 12. பாக்காக் கொடுத்தது தோப்பாக விளைந்தது !

மறு நாள் நாங்கள் விடியுமுன் எழுந்து, மறுபடியும் பிரயாணம் ஆரம்பித்தோம். பகல் முழுதும் யாத்திரை செய்கிறதும், இரவில் எந்த ஊர் தென்படுகிறதோ அந்த ஊரில் தங்குகிறதும், இவ்வகையாக நாங்கள் பயணம் செய்துகொண்டு போகும் போது, ஒரு நாள் அஸ்தமிக்கிறவரையில் நாங்கள் தங்கும்படியா கச் சத்திரமாவது ஊராவது தென்படவில்லை. அன்றையத் தினம் அமாவாசை இருட்டானதால், எங்கே தங்கலாம் என்று யோசித்துக்கொண்டு போகையில், வழிக்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு சாவடி காணப்பட்டது. அந்தச் சாவடியில் தங்கலாமா வென்று அவ்விடத்தில் நின்றுகொண்டிருந்த ஆட்களை நாங்கள் விசாரித்தோம். அவர்கள், அது தகுதியான இடமென்று சொன் னதனுல், நாங்கள் வண்டியை நிறுத்தி, அந்தச் சாவடியில் தங்கி,

நானும் ஞானம்பாளும் வழியில் வந்த களையினால் முன் நேரத்தில் படுத்துத் தூங்கினோம். வேலைக்காரர்கள் சுயம்பாகம் செய்து, எங்களை எழுப்பி அன்னம் படைத்தார்கள்.

போஜனம் முடிந்தவுடனே, எங்கள் வேலைக்காரர்களில் ஒருவன் எங்களைப் பார்த்து, " ஐயா ! நான் தண்ணீர் கொண்டு வரக் குளத்துக்குப் போன போது, ஒரு மனுஷன் என்னைக் கண்டு, இந்த இடம் கள்ளர்கள் வசிக்கிற இடமென்றும், இந்தச் சாவடியில் அநேக தடவை கொள்ளையும் கொலையும் நடந்திருப்பதாகவும் சொன்னான். தங்குவதற்குத் தகுந்த இடமென்று சில ஆள்கள் சொன்னதை நம்பி, நாங்கள் இங்கே தங்கினோமென்று நான் தெரிவித்தேன். 'அப்படி யாராவது உங்களுக்குத் தெரிவித்திருந்தால், அவர்கள் திருடர்களாகவே இருப்பார்கள். நீங்கள் சர்வ ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும்,' என்று அந்த மனுஷன் எச்சரிக்கை செய்து போய்விட்டான்," என்றான்.

இதைக் கேட்டவுடனே எனக்கு அடிவயிற்றில் இடி விழுந்தது போலிருந்தது. ஞானம்பாள் இல்லாமலிருந்தால், நான் பயப்படமாட்டேன். அவள் கூட இருப்பதால், என்ன அவமானம் நேரிடுமோ என்கிற பயம் அதிகரித்தது. அவளை எங்கேயாவது ஒளித்து வைக்கலாம் என்று பார்த்தால், எங்கும் வெட்டார வெளியாயிருந்ததால், தகுந்த இடம் அகப்படவில்லை. அவள் பயந்து நடுங்குவதைக் கண்டு, " ஞானம்பாள்! நீ ஒன்றுக்கும் பயப்படாதே. நானும் வேலைக்காரர்களும் வண்டிக்காரர்களும் உட்பட ஆறு பேர்கள் இருக்கிறோம். நமக்கு வேண்டிய ஆயுதங்களும் இருக்கின்றன. திருடர்கள் எத்தனை பேர்கள் வந்தாலும், ஒரு கை பார்க்கிறோம்," என்று சொன்னேன். அவள் என்னைப் பார்த்து, " திருடர்கள் வந்தால் நீங்கள் சும்மா இருக்க மாட்டீர்கள் ; அவர்களை எதிர்த்துச் சண்டை செய்வீர்கள். அப்போது என்ன அபாயம் நேரிடுமோவென்றுதான் அஞ்சுகிறேன். என் பயத்தை உங்களுடைய வார்த்தை ஸ்திரப்படுத்துகிறது. நம்முடைய பலத்தையும், எதிரியினுடைய பலத்தையும், இடம், காலம் முதலிய பலாபலங்களையும் யோசிக்காமல் யுத்தத்துக்குப் புறப்படுவது உசிதமல்ல.

சொத்துக்களைத் திருடுவதற்காகவே திருடர்கள் வருகிறுர்கள். கள்ளர்களுடைய கூட்டம் அதிகமாயிருக்கிற.பட்சத்தில் அவர் களை எதிர்க்காமல் நம்முடைய கையில் உள்ள சொத்துக்களை அவர்களிடத்தில் கொடுத்து, மரியாதையையும் பிராணனையும் காப்பாற்றிக்கொள்வதே விவேகம் என்று எனக்குத் தோன்றுகி றது. பின்னும் இந்தச் சமயத்தில் கடவுளைத் தவிர வேறு துணை இல்லாதபடியால், அவரை நம்பினுல் கை விட மாட்டார்," என்றுள்.

இவ்வாருக நாங்கள் பேசிக்கொண்டிருக்கும் போது, மேற் குத் திசையில் வெடிச் சப்தம் கேட்டு, நான் சாவடித் திண்ணையை விட்டுக் கீழே குதித்து, அந்தத் திசையைப் பார்த்தேன்; சிறிது தூரத்தில் வெளிச்சங்களுடனே திருடர்கள் பெருங்கூட்டமாய் வருகிறதைக் கண்டேன்; உடனே திண்ணைமேலேறி நாங்கள் வைத்திருந்த தீபம் வெளியிலே தெரியாதபடி மறைவாக வைத்து விட்டு, திருடர்கள் வந்தவுடனே அவர்களிடத்தில் கொடுக்க வேண்டியதற்காகப் பணப் பெட்டியையும் பக்கத்தில் வைத்துக் கொண்டேன். நாங்கள் மரணத்தை எதிர் பார்த்துக்கொண்டிருப் பவர்கள் போலப் பயந்து நடுநடுங்கிக்கொண்டு இருந்தோம். ஞானம்பாள் ஒரு மூலையில் கண்ணீர்ப் பிரவாகத்துடனே கடவு ளைத் தியானித்துக்கொண்டிருந்தாள்.

மேற்கே இருந்து வந்த திருடர்கள் ரஸ்தாவில் வந்து சேர்ந்து, நாங்கள் இருந்த சாவடிக்கு நேரே திரும்பி வந்தார்கள். அவர்கள் வரும் போது, அவர்களுக்கு நேரே கிழக்கே இருந்து ஒரு பெரும் கூட்டம் வந்து, அவர்களைப் பார்த்து, "நீங்கள் யாரடா?" என்று வினவ, அவர்கள் "நீங்கள் யாரடா?" என்று எதிர்த்துக் கேட்டார்கள். உடனே கிழக்கே இருந்து வந்தவர்களுக்குக் கோபம் உண்டாகி, மேற்கே இருந்து வந்தவர்கள்மேலே விழுந்து, கத்திகளாலும், கழிகளாலும் யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். அவர்கள் அடித்துக் கொள்ளுகிற அடிகள் எங்கள் தலைமேலே அடிக்கிறது போலக் கேட்டு, நடுங்கிக்கொண்டிருந்தோம். அவர்கள் சண்டை செய் கிற காரணம் இன்னதென்று தெரியவில்லை. ஆனுல், அன்றையத் தினம் திருட வேண்டிய முறை இன்னருடையது என்று

ஸ்தாபித்துக்கொள்வதற்காக அவர்கள் சண்டை செய்வதாக நான் அனுமானித்தேன். அந்த இரு பக்கத்தாரும் சமான கட்சியாயிருந்தமையால், ஒரு கட்சிக்காவது தோற்பு கெலிப்பு இல்லாமல் நெடு நேரம் சண்டை செய்தார்கள். ஆனால், கிழக்கே இருந்து வந்த கூட்டத்தாருக்கு மறுபடியும் மறுபடியும் உப பலம் சேர்ந்துகொண்டிருந்தபடியால், அவர்கள் பக்கத்தில் ஜயம் உண்டாகி, மேற்குத் திசையார் ஓட ஆரம்பித்தார்கள். அவர்களைக் கிழக்குத் திசையார் வெகு தூரம் வரையில் தொடர்ந்து போய், பிற்பாடு நாங்கள் இருந்த சாவடியை நோக்கித் திரும்பினார்கள். அவர்கள் வருவதைப் பார்த்தவுடனே எங்களிடத்தில் கொஞ்சம் ஒட்டிக்கொண்டிருந்த அற்பப் பிராணனும் மேற்குத் திசையார் போல ஓட ஆரம்பித்தது.

அந்தக் கூட்டத்தார் சிறிது தூரம் வந்து, பிறகு நின்றுவிட்டார்கள். அவர்களில் இரண்டு பேர் மட்டும் எங்களை நோக்கி வந்தார்கள். அவர்களை யம தூதர்களாகவே எண்ணினோம். ஆனால் அவர்கள் தூரத்தில் வரும்போதே மரியாதையாய், "ஐயா! பிரதாப முதலியாரே! திருடர்கள் ஓடிப் போய்விட்டார்கள்; இனிமேல் நீங்கள் அஞ்ச வேண்டாம். நாங்கள் உங்களுக்குச் சகாயமாக வந்தவர்களே தவிர, திருடர்கள் அல்ல," என்று சொல்லிக்கொண்டு எங்களை நெருங்கி வந்தார்கள். அவர்களில் ஒருவர் என்னிடம் வந்து, நமஸ்காரம் செய்தார். அவருடைய முகக் குறியால் அவர் யோக்கியரென்று தெரிந்துகொண்டு, நானும் அவருக்கு நமஸ்காரம் செய்து ஆசனத்தில் இருத்தி, "நீங்கள் யார்?" என்று வினவ, அவர் சொல்லுகிறார்:

"நான் இதற்கு இரண்டு நாழிகை வழி தூரத்தில் இருக்கிற பொன்னூரில் வசிக்கிறவன். என் பெயர் புண்ணியகோடிச் செட்டி. என் தகப்பனார் சத்தியபுரியில் தங்கள் தகப்பனாரிடத்தில் அநேக வருஷ காலம் காரியம் பார்த்து வந்து, நான் அதிபாலியமாய் இருக்கும் போது இறந்து போனார். அது முதல் என்னையும், என் தாயாரையும் தங்களுடைய தாயாரும் தகப்பனாரும் அன்ன வஸ்திரம் கொடுத்து ஆதரித்ததும் அல்லாமல், எனக்கு வித்தியாப்பியாசமும் செய்து வைத்தார்கள். இது, நீங்கள் பிறக்கிறதற்குச் சில காலத்துக்கு

முன் நிகழ்ந்த சங்கதியானதால், தாங்கள் அறியமாட்டீர்கள். சத்தியபுரியில் தங்களுக்குச் சொந்தமான ஒரு வீட்டில் நானும் என் தாயாரும் குடியிருந்து வந்தோம்.

"எனக்குப் பன்னிரண்டு வயது நடக்கும் போது, ஒரு நாள் அந்த வீட்டுக் கொல்லையில் மரம் வைக்க வேண்டியதற்காக ஒரு சிறிய மண் வெட்டியால் பள்ளம் பறித்துக்கொண்டிருந் தோம். அந்தப் பள்ளத்தில் மண்வெட்டி மோதி, வெண்கல ஓசை போலக் கணீரென்று சப்தம் கேட்டது. அது என்ன வென்று மறுபடியும் தோண்டிப் பார்க்க, தோலினால் வாய் மூடப்பட்ட ஒரு வெண்கலத் தோண்டி அகப்பட்டது. உடனே என் தாயார் தெருக் கதவை மூடிவிட்டு, அதை வீட்டுக்குள்ளே கொண்டு போய் வெண்கலத் தோண்டியைத் திறந்து பார்க்க, அறுநூறு பூவராகனும் அநேக இரத்தினாபரணங்களும் அடக் கஞ்செய்யப்பட்டிருந்தன. அவ்வளவு பொருளை நாங்கள் ஒரு நாளும் பாராதவர்களானபடியால், அந்தச் சங்கதியை வெளிப் படுத்த வேண்டாமென்று என் தாயார் எனக்குச் சொன் னாள். நான், 'இந்த வீடும் கொல்லையும் நம்மை ஆதரிக்கும் கனகாசல முதலியாருக்குச் சொந்தமானதால், இதில் அகப்பட்ட புதையலும் அவருக்குத்தானே சொந்தம்? இந்தச் சங்கதியை அவருக்குச் சொல்லாமல் இருப்பது கிரமமா?' என்று சொல்லிக் கொண்டு தெருக்கதவைத் திறந்தேன். உடனே என் தாயார் நான் வெளியிலே போகாதபடி என்னைக் கட்டிப் பிடித்தாள். நான் திமிறிக்கொண்டு வெளியே ஓடினேன். என் தாயாரும் கதவைப் பூட்டி விட்டு, என்னைத் துரத்திக்கொண்டு ஓடி வந்தாள். நான் அகப்படாமல் ஓடி வந்து, உங்கள் வீட்டுக்குள்ளே நுழைந்து விட்டேன். என் தாயார், இனிமேல் காரியமில்லை என்று வீட்டுக் குத் திரும்பிப் போய்விட்டாள். நான் மேல்மூச்சுக் கீழ் மூச்சுடன் உள்ளே வந்து நுழைந்ததைத் தங்கள் தாய் தந்தையர் கண்டு, 'ஏன் அப்பா, இப்படி ஓடி வந்தாய்?' என்று கேட்டார்கள். நான் ஓடி வந்த சிரமம் நீங்கினவுடனே, புதையல் அகப்பட்ட விவரமும், மற்றச் சங்கதிகளும் அவர்களுக்குச் சொன்னேன். அவர்கள், 'உன்னைப் போல நல்ல பிள்ளை கள் உண்டா?' என்று என்னைப் புகழ்ந்துகொண்டிருக்கும் போது, என் தாயார் வெண்கலத் தோண்டியுடனே வந்து,

புதையல் அகப்பட்ட விவரத்தை உண்மையாகவே தெரிவித்தாள். அவள் முந்தி மறைக்க யத்தனப்பட்டதை உங்கள் தாய் தந்தையர் காட்டிக்கொள்ளாமலே அவளையும் புகழ்ந்தார்கள்.

"பிற்பாடு, உங்கள் தாய்தந்தையர் அறைக்குள்ளே போய்ச் சற்று நேரம் ஆலோசித்துக்கொண்டு வெளியே வந்து, என்னைப் பார்த்து, 'பொய்யும், சூதும், வஞ்சனையும் நிறைந்த இந்த உலகத்தில் உன்னைப் போல யோக்கியமான பிள்ளை அகப்படுவது அருமையானதால், உன்னுடைய நற்குணத்திற்குத் தகுந்த சன்மானமாக அந்தப் புதையலைக் கடவுள் வெளிப்படுத்தியிருக்கிறார். அந்தத் திரவியத்தை நீயே வைத்துக்கொண்டு சுகமாயிரு !' என்றார்கள். பிறகு பொன்னூர்க் கிராமத்தை அவர்களே என் பெயரால் கிரயம் வாங்கி, எனக்குத் தகுந்த பிராயம் வருகிற வரையில், என் தாயுடன் பிறந்த அம்மானைக் காரியஸ்தனாக நியமித்தார்கள். நான் இப்போது சாப்பிடுகிறது உங்களுடைய அன்னந்தான் ; எரிகிறது உங்களுடைய விளக்குதான். தண்ணீர்த் துறையில் உங்களுடைய வேலைக்காரனை நான் பார்த்தபோது, நீங்கள் வந்திருக்கிற சமாசாரம் தெரிந்துகொண்டேன். திருடர்களே உங்களை ஏமாற்றி இந்தச் சாவடியில் தங்கும்படிச் செய்ததாக எனக்குத் தோன்றிற்று. அந்த ஆபத்தைத் தீர்க்க என்ன உபாயம் செய்யலாம் என்று நான் பல வகையில் யோசித்தேன். என்னுடைய கிராமத்துக்கு உங்களை அழைத்துக்கொண்டு போகலாம் என்றால், வண்டி போகும்படியான மார்க்கமில்லை. நீங்கள் வயல் வழியாக நடக்கமாட்டீர்கள். ஆகையால், நானே என் கிராமத்துக்குப் போய் ஆட்களைச் சேர்த்துக்கொண்டு வருவது நலமென்று நினைத்து, அந்தப்படி ஆட்களைக் கூட்டிக்கொண்டு, அதி சீக்கிரமாக வந்தேன். நாங்கள் வந்த சமயமும், திருடர்கள் வந்த சமயமும் ஒத்துக்கொண்டபடியால், திருடர்கள் உங்களைக் கிட்டாதபடி அவர்களை அடித்துத் துரத்திவிட்டோம். அதோ அங்கே நிற்கிற கூட்டம் நம்முடைய கூட்டந்தான். அவர்கள் எல்லோரும் இங்கே வந்தால் திருடர்களென்று நினைத்து நீங்கள் பயப்படுவீர்களென்று கருதி, நாங்கள் இருவர் மட்டும் வந்து உங்களைக் கண்டோம் ; கண் குளிர்ந்தோம். உங்களுடைய தர்ம பத்தினியின் உத்தம குணங்களை இதற்கு முன் கேட்டு, நாங்கள் காது குளிர ஆநந்தம் அடைந்

தோம்; இப்போது அந்த உத்தமியைத் தரிசித்து, கண் குளிர ஆநந்தத்தை அடைகிறேம். எங்களுடைய கண்ணுக்கும் காதுக்கும் இருந்த விவாதம் இன்றேடே தீர்ந்துவிட்டது!"

நான் அவரைப் பார்த்து, "என் தாய்தந்தையர் உங்களுக்குச் செய்த உபகாரம் ஒரு பாக்காகவும், நீங்கள் எங்களுக்குச் செய்த உபகாரம் தோப்பாகவும் ஆகிவிட்டது. நீங்கள் சமயத்தில் வந்திருக்காவிட்டால், எங்களுடைய யாத்திரை பரலோக யாத்திரையாக முடிந்திருக்கும். சமயத்தில் செய்த ஒரு சிறு உதவி பூமியினும் மிகப் பெரிதென்று திருவள்ளுவர் சொல்லுகிறர். அப்படியானல், நீங்கள் சமயத்தில் செய்த பேருதவிக்கு எதை ஒப்பிடுவேன்?" என்று பல வகையாக என்னுடைய நன்றியறிதலை வெளிப்படுத்தினேன். அவர் பொழுது விடிந்தவுடனே தம்முடைய ஊருக்கு வர வேண்டுமென்று பிரார்த்தித்தார். நாங்கள் திரும்பி வரும் போது அவசியம் வருவதாகச் சொல்லி விடை பெற்றுக்கொண்டு, மறுபடியும் பிரயாணம் ஆரம்பித்தோம்.

## 13. புலி! புலி! - பிரயாண முடிவு

ஒரு நாள் மத்தியானத்தில் இரண்டு பக்கமும் மலைகள் அடர்ந்த கானகத்தின் வழியாக நாங்கள் யாத்திரை செய்துகொண்டிருக்கையில் திடீரென்று வானம் இருண்டு, பெருங்காற்றுடனே மழையும் துவக்கிற்று. நாங்கள் இருந்த வண்டியில் நாலு பக்கமும் தூவானம் அடித்து, நாங்கள் நனையும்படியான ஸ்திதியில் இருந்தோம். அதனல் மழை விடுகிறவரையில் அருகிலுள்ள மலைக் குகைக்குள்ளே இருக்கலாமென்று நினைத்து நானும் ஞானம்பாளும் வேலைக்காரர்களும் அவர்களுடைய பெண்சாதிகளும் வண்டியினின்றும் இறங்கி, மலை அடிவாரத்துக்குப் போனேம். வண்டிக்காரர்கள் வண்டிகளுக்குக் காவலாக இருந்தார்கள்.

நாங்கள் மலை அடிவாரத்தில் இருள் அடர்ந்த ஒரு குகையைக் கண்டு, அதற்குள்ளே நுழைந்து வாசற்படி ஓரத்தில்

உட்கார்ந்தோம்; மழை நின்று, கொஞ்சம் வெளிச்சம் கண்ட வுடனே, அந்தக் குகைக்குள்ளாகப் பார்த்தோம். எங்களுக்குக் கொஞ்ச தூரத்தில் அந்தக் குகையில் இரண்டு புலிகளைக் கண்டு நாங்கள் திகில் அடைந்து, ஒருவர் மேல் ஒருவர் விழுந்து ஓட ஆரம்பித்தோம். எங்கள் வேலைக்காரர்கள் எங்களையும் அவர் களுடைய பெண்சாதிகளையும் விட்டுவிட்டு, ஒரு நிமிஷத்தில் போன இடம் தெரியாமல் ஓடி ஒளிந்துகொண்டார்கள். நான் ஞானம்பாளையும், வேலைக்காரிகளையும் முன்னே ஓடச் சொல்லி, பின்னே ஓடினேன். ஓடச் சக்தியில்லாமல் அந்த ஸ்திரீகளும் நானும் சேற்றிலே சறுக்கி விழுந்துகொண்டு, தள்ளாடித் தள் ளாடி ஓடும் பொழுது, பின்னே திரும்பிப் பார்த்தேன்; அந்தப் புலிகள் குகையைவிட்டு ஓடி வருகிறதைக் கண்டு, அந்த ஸ்திரீ களைப் பார்த்து, "சிக்கிரமாய் ஓடுங்கள்!" என்றேன். இதைக் கேட்டவுடனே, அந்த வேலைக்காரிகள் கிலி பிடித்துக் கீழே விழுந்து உதைத்துக்கொண்டார்கள். அவர்களை அந்த ஸ்திதி யில் விட்டுவிட்டு எப்படிப் போகிறதென்று நானும் ஞானம்பாளும் மலைத்து நின்றோம். புலிகள் சமீபித்தவுடனே, அவைகளைச் சுடலாமென்று, என் கையிலிருந்த துப்பாக்கியில் குண்டு போட் டுக் கெட்டிக்க ஆரம்பித்தேன்.

ஞானம்பாள் சற்று நேரம் அந்தப் புலிகளை உற்றுப் பார்த்து, "அவைகளை நன்றாய்ப் பாருங்கள்; இரண்டு கால் புலிகளாய்க் காணப்படுகின்றன!" என்றாள். நான் திரும்பிப் பார்த்த உடனே, அந்தப் புலிகளிடத்தினின்று ஒரு குரல் புறப்பட்டது: "ஐயா! எங்களைச் சுட வேண்டாம். நாங்கள் புலிகள் அல்ல; நாங்கள் வேஷக்காரர்கள்," என்றது அது. சற்று நேரத்தில் அவர்கள் நெருங்கி வந்து, எங்களைப் பார்த்து, "நாங்கள் புலி வேஷம் போட்டுக்கொண்டு, பல ஊர்களுக்குப் போய், யாசகம் வாங்கு கிறதற்காகப் புறப்பட்டோம்; மழையினால் எங்களுடைய வேஷம் கலைந்து போகுமென்று நினைத்து, அந்தக் குகைக்குள் உங்க ளுக்கு முன்பாக வந்து உட்கார்ந்திருந்தோம். இதுதான் நடந்த வாஸ்தவம்," என்றார்கள்.

மேலும் சில நாள் யாத்திரை செய்த பின்பு, ஒரு நாள் எங் களுக்கு நேரே ஒரு நகரம் குறுக்கிட்டது. அது என்ன

ஊரென்று விசாரிக்க, தேவராஜப் பிள்ளையினுடைய ஊராகிய ஆதியூர் என்று கேள்விப்பட்டோம். உடனே எங்களுக்குப் பெரிய ஆச்சரியம் உண்டாகி, "ஒளியப் போயும் தலையாரி வீட்டில் ஒளிந்தது போல, நாம் ஒருவரும் காணாதபடித் தூர தேசத்துக்குப் போக உத்தேசித்துப் போகும் போது, இந்த ஊர் வந்து குறுக்கிட்டதே! இந்த ஊருக்கு வருகிறதென்றும் நாம் நினைக்கவே இல்லையே! நாம் இவ்வளவு சமீபத்தில் வந்தும், அவர்களைப் பார்க்காமல் போனால், பிற்பாடு அவர்களுக்கு உண்மை தெரியும் போது, மனஸ்தாபப்படுவார்களே! இந்தத் தரும சங்கடத்துக்கு என்ன செய்கிறது?" என்று வண்டியை நிறுத்தி ஆலோசித்தோம். அப்போது ரஸ்தாவில் எங்களுக்கெதிரே நாலு குதிரைகள் கட்டின இரண்டு ரதங்கள் ஓடி வந்தன. முன்னே வந்த ரதத்தில் யார் இருக்கிறார்களென்று நான் எட்டிப் பார்த்தேன். அதில் தேவராஜப் பிள்ளையும் அவருடைய மகன் கனக சபையும் இருந்தார்கள். அவர்கள் என்னைப் பார்த்தவுடனே ரதத்தை நிறுத்திக் கீழே குதித்தார்கள். நானும் கீழே குதித்தேன். அவர்கள் முகமலர்ச்சியோடும் அக மகிழ்ச்சியோடும் என்னைக் கட்டிக்கொண்டு பலவாறாக உபசரித்தார்கள். மற்றொரு ரதத்திலிருந்து தேவராஜப் பிள்ளை பத்தினியும் அவருடைய தங்கையும் கீழே இறங்கி, ஞானம்பாளைத் தழுவிக்கொண்டு, பல வகையான முகமன் கூறினார்கள். தேவராஜப் பிள்ளையும், கனகசபையும் ஞானம்பாளுக்குத் தக்கபடி இனிய வசனம் கூறி, அவளை அந்த ஸ்திரீகள் வந்த ரதத்தில் ஏற்றுவித்து, என்னைத் தங்களுடைய ரதத்தில் ஏற்றிக்கொண்டு ஊருக்குத் திரும்பினார்கள்.

நாங்கள் வழியிலே போகும் போது, தேவராஜப் பிள்ளை என்னை நோக்கி, "இன்றையத் தினம் உங்கள் தந்தையாரிடத்திலிருந்து தபால் மார்க்கமாக வந்த கடிதத்தில் நீங்கள் ஒருவருக்கும் சொல்லாமல் ஊரைவிட்டுப் போய்விட்டதாகவும், இன்ன ஊருக்குப் போனீர்கள் என்று தெரியவில்லை என்றும், தாங்கள் பல ஊர்களுக்கு மனுஷர்களும் கடிதங்களும் அனுப்பி இருப்பதாகவும், நீங்கள் இந்த ஊருக்கு வந்தால் உடனே தெரிவிக்க வேண்டுமென்றும் எழுதப்பட்டிருந்தது. நீங்கள் இந்த ஊருக்கு வராமல் வேறே எங்கே போகிறீர்களோ என்று நாங்கள் மிகவும்

கவலைப்பட்டுக்கொண்டிருந்தோம். எங்கள் தெய்வந்தான் உங்களைக் கொண்டுவந்து விட்டது,” என்று சொல்லி, “ நீங்கள் ஒருவருக்கும் சொல்லாமல் ஊரைவிட்டு வெளிப்பட்டதற்குக் காரணம் என்ன ?”வென்று வினவினர். என் தகப்பனர் - மாமனருடைய வீணை சண்டையை வெளிப்படுத்த எனக்கு மனமில்லாமல் இருந்தாலும், பொய்யான காரணத்தைச் சொல்லக் கூடாதென்று நினைத்து சண்டை விளைந்த விபரங்களைத் தெரிவித்தேன். அதைக் கேட்டவுடனே அவருக்கு உண்டான பெருஞ் சிரிப்பு இன்னும் சற்றுநேரம் சிரித்திருப்பாராகுல், அவர் மரித்திருப்பார் என்பது நிச்சயமே. பிறகு, அவர் சிரிப்பை அடக்கிக் கொண்டு, “ தாய்தந்தையருடைய சண்டைகளெல்லாம் பிள்ளைகளின்மேல் இருக்கிற பிரியத்தினுல் விளைகின்றனவே அல்லாமல், மற்றப்படி அல்ல. உம்முடைய மாமனர், தம்முடைய மகள் பிள்ளை தமக்குப் பிள்ளையாயிருக்க வேணுமென்று விரும்பி, அந்தப் பிள்ளையைத் தமக்குச் சுவீகாரம் கொடுக்கும்படிக் கேட்டார். உமது தகப்பனர், தம்முடைய பேரப் பிள்ளையைப் பிரிய இஷ்டமில்லாமல் ஆட்சேபித்தார். ஆகையால், உங்கள் மேலும் உங்கள் சந்ததிகளின்மேலும் அவர்களுக்கு உண்டாயிருக்கிற பிரியத்தினுல், அந்தச் சண்டை விளைந்ததென்பது நிதரிசனமாய் இருக்கின்றது. அநேக சமயங்களில் பொல்லாங்கிலிருந்து சுவாமி நன்மையை விளைவிப்பது போல, இந்தச் சண்டையினுல் எனக்கு ஒரு நன்மையைச் செய்திருக்கிருர். இந்தச் சண்டை நேராவிட்டால், உங்களை இப்போது தரிசிக்கும் படியான பாக்கியம் எங்களுக்குக் கிடைத்திருக்குமா ?” என்ருர். இவ்வகையாகப் பேசிக்கொண்டு, நாங்கள் அவருடைய அரண்மனையிலே போய்ச் சேர்ந்தோம். அங்கே ராஜோபசாரங்களும், விருந்துகளும், வேடிக்கை விநோதங்களும் செய்து, அவர்கள் எங்களைச் சந்தோஷிப்பித்தார்கள்.

## 14. கலகம் தீர்ந்தது.

நாங்கள் வந்து சேர்ந்த மறு தினமே எங்களுடைய க்ஷேம லாபங்களைக் குறித்து, தேவராஜப் பிள்ளை என் தகப்பனருக்கும் மாமனருக்கும் திருமுகங்கள் அனுப்பினர். காலம் போகப் போக, எங்கள் தாய்தந்தையரைவிட்டுப் பிரிந்த துக்கம் பெரிதாயிருந்தது. எங்கள் தந்தையர்களிடத்தில் எங்களுக்கிருந்த அற்ப மனஸ்தாபமும் நாளாவட்டத்தில் தீர்ந்துபோய்விட்டது.

ஒரு நாள் மாலை நானும், தேவராஜப் பிள்ளையும், கனக சபையும் வேடிக்கையாக உரையாடிக்கொண்டிருந்தோம். அப்பொழுது என்னுடைய வண்டிக்காரன் ஒருவன், வெளியேயிருந்து மேல்மூச்சுக் கீழ்மூச்சுடன் ஓடி வந்து, உள்ளே நுழைந்து எங்களைப் பார்த்து, "சந்தோஷ சமாசாரம்! சந்தோஷ சமாசாரம்!" என்று சொல்லிக்கொண்டு ஆநந்த நர்த்தனம் செய்தான். நாங்கள், "அந்தச் சமாசாரம் என்ன?" என்று கேட்க, அவன், "சுவாமிகளே! நான் இரண்டு நாழிகை வழி தூரம் ஓடி வந்ததால், எனக்கு இரைக்கின்றது; இரைப்பு அடங்கின உடனே சொல்லுகிறேன்," என்று மறுபடியும் குதித்துக் கூத்தாடினன். நான் அவனைப் பார்த்து, "இப்பொழுது நீ எத்தனையோ வார்த்தைகள் பேசினய்! சந்தோஷச் செய்தி இன்னதென்று ஒரு வார்த்தையிலே சொல்லக் கூடாதா?" என்று உறுக்கினேன். அவன் மறுபடியும் காரியம் இன்னதென்று தெரிவிக்காமல், சம்பந்தமில்லாத காரியங்களைச் சொல்லி நேரம் போக்கினன். எனக்குக் கோபம் உண்டாகி, அவனை அடிக்கிறதற்காகக் குதிரைச் சவுக்கைக் கையிலே எடுத்தேன். அவன் கத்திக்கொண்டு, "நான் சந்தோஷ சமாசாரம் கொண்டு வந்ததற்கு இதுதான சன்மானம்? நான் இன்று நேற்று வந்தவன? நான் எத்தனையோ காலமாக உங்களுக்கு ஊழியம் செய்து வருகிறேன். பெரிய ஐயா அம்மா கூட என்னை ஒரு வார்த்தை சொன்னதில்லை, ஒரு அடி அடித்ததில்லையே! நேற்றைப் பிள்ளையாகிய நீங்கள் என்னை அடிக்கலாமா? வையலாமா?" என்று பல சம்பந்தமில்லாத காரியங்களைப் பேசினனே தவிர, சங்கதி இன்னதென்று தெரிவிக்கவில்லை.

உடனே எனக்குக் கோபாக்கினி மூண்டு, குதிரைச் சவுக்கை அவன்மேலே பிரயோகிக்க ஆரம்பித்தேன். அவன் இருபது அடி வாங்கின பிற்பாடு, எங்களை நோக்கி, "சத்தியபுரியிலிருந்து ஐயா, அம்மா எல்லாரும் வருகிறார்கள். நான் ஆற்றுக்குப் போன போது அவர்களை வழியிலே கண்டு, சந்தோஷ சமாசாரம் சொல்வதற்காக இரண்டு நாழிகை வழி தூரம் குடல் தெறிக்க ஓடி வந்தேன்," என்றான். இதைக் கேட்டவுடனே, தேவராஜப் பிள்ளை பெருங்களிப்புடனே எழுந்து, பெட்டியைத் திறந்து இரண்டு கோடிவஸ்திரங்களை எடுத்து, சந்தோஷ சமாசாரம் கொண்டு வந்ததற்காக அந்த வண்டிக்காரனுக்கு வெகுமானம் செய்தார். ஆனால், அவன் அத்தனை அடி பட்டும் எங்களுக்குச் சங்கதியைப் பூரணமாய்த் தெரிவிக்கவில்லை. அவன் சொன்னதைக் கொண்டு, என் தாய் தகப்பனார் வருவதாக மட்டும் எண்ணிக் கொண்டோமே தவிர, சம்பந்தி முதலியாரும் அவருடைய பத்தினியுங்கூட வருவதாக ஊகிப்பதற்கு இடமில்லாமல் இருந்தது. ஆனால், அவன் ஞானம்பாள் இடத்திலே போய், அவளுடைய தாய் தந்தை வருவதாக மட்டும் சொல்லி, என் தாய் தந்தையருடைய வரவைப் பற்றி ஒன்றும் பிரஸ்தாபிக்காமல் இருந்துவிட்டான். நானும் ஞானம்பாளும் சந்தித்த போது தான், அவளுடைய தாய்தந்தையர் வருவதாக எனக்கும், என்னுடைய தாய்தந்தையர் வருவதாக அவளுக்கும் வெளியாயிற்று. ஞானம்பாள் என்னை நோக்கி, "அந்த வண்டிக்காரனுடைய குதூகலிப்பையும் ஆநந்தத்தையும் யோசிக்குமிடத்தில் நம்முடைய தாய்தந்தையர் வரவையன்றி வேறு காரணமும் இருக்க வேண்டும். அதை இப்போது நான் அறிகிறேன்," என்று சொல்லி, அந்த வண்டிக்காரனை அழைத்து, "எல்லாரும் வருகிறதாகச் சொன்னாயே! அவர்களுடன் கூட உன் பெண்சாதியும் வருகிறாளா?" என்று கேட்டாள். அவன், "ஆம் அம்மா! ஆம் அம்மா!" என்று சொல்லி, மறுபடியும் நடனம் செய்யத் தொடங்கினான். அப்போதுதான் அவனுடைய ஆநந்த நடனத்துக்குக் காரணம் தெரிந்தது!

அவன் வந்த உடனே காரியத்தைத் தெரிவித்திருப்பானானால், நானும், தேவராஜப் பிள்ளை முதலானவர்களும் என் தாய் தந்தையரை வழியிலே எதிர் கொண்டு அழைப்பதற்காகப்

போயிருப்போம். அவன் காரியத்தைச் சொல்லாமல் தாமதம் செய்தபடியால், நாங்கள் எதிர்கொண்டு போக அவகாசம் இல்லாமல் போய்விட்டது. சற்று நேரத்துக்குள் அநேக வண்டிகள், பல்லக்குகள் முதலிய வாகனங்கள் வருகிற ஓசை கேட்டு நாங்கள் வெளியே ஓடினேம். என் தகப்பனுரும், சம்பந்தி முதலியாரும் இரண்டு குதிரைகள் பூண்ட ரதத்தினின்று கீழே இறங்கினர்கள். உடனே தேவராஜப் பிள்ளை அவர்களிடம் சென்று, கைலாகு கொடுத்து அழைத்துக்கொண்டு வந்து, அவர்களைத் தக்க ஆசனங்களில் இருத்தி உபசரித்தார். அவருடைய பத்தினி முதலிய ஸ்திரீகள் என் தாயார் மாமியார் முதலியோர்களை எதிர்கொண்டு அழைத்து வந்து மரியாதை செய்தார்கள். நான் என் தாய்தந்தையரைக் கண்டவுடனே பூமியில் விழுந்து நமஸ்காரம் செய்து, அவர்களுடைய திருப்பாதங்களை என் கண்ணீரால் கழுவினேன். அவர்கள் ஒவ்வொருவரும் என்னைக் கட்டித் தழுவிக்கொண்டு, நெட்டுயிர்ப்புடன் பொருமி அழுது, அவர்களுடைய கண்ணீரால் என்னை ஸ்நானம் செய்வித்தார்கள். என்னுடைய பிரிவின் நிமித்தம் அவர்கள் பாதி உடம்பாய் மெலிந்துபோயிருந்தபடியால், இப்படிப்பட்ட தாய்தந்தையரை விட்டுப் பிரிந்தோமேயென்று நினைத்து நினைத்து, நெடு நேரம் விம்மி அழுதேன்.

பிறகு, என் தந்தையார் ஒருவாறு தம்முடைய பொருமலை அடக்கிக்கொண்டு, தேவராஜப் பிள்ளையைப் பார்த்து, "ஐயா! இந்தப் பிள்ளை பிறந்த நாள் முதல் ஒரு நாளாவது நான் பிரிந்திருந்தது இல்லை. அப்படிப்பட்ட என்னை இத்தனை நாளாகப் பிரிந்திருக்கும்படிச் செய்துவிட்டான். இவன் பிரிந்த நாள் முதல் நாங்கள் பிராணன் இல்லாத சரீரம் போல இருந்தோமே அல்லாமல், மற்றப்படி அல்ல. 'பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்,' என்கிற பழமொழியை இவன் மெய்யாக்கிவிட்டான். ஆயினும், இவன்மேலே தோஷம் சொல்வதற்கு இடமில்லை. நான் இவனையும் ஞானம்பாளையும் காரணமில்லாமல் தூஷித்து, ஒரு நாளும் சொல்லாத கடுஞ்சொற்களைப் பிரயோகித்தபடியால், அவர்கள் எங்களைப் பிரியும்படி நேரிட்டது. என்னுடைய குற்றத்தை நான் இப்போது நன்ருக உணருகிறேன். இனி ஒருக்காலும்

இவனையும் ஞானம்பாளையும் நான் தூஷிக்கிறதில்லையென்று உங்கள் முன்பாக நான் பிரமாண பூர்வமாகச் சொல்லுகிறேன். இவனும் என்னை ஒரு நாளும் பிரிகிறதில்லையென்று பிரமாணம் செய்ய வேண்டும்," என்றார். அன்பு நிறைந்த இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே, நான் மனம் உருகி, என் தகப்பனார் பாதத்தில் விழுந்து, "ஐயா! உங்களுக்குச் சொல்லாமல் நான் வெளிப்பட்டது, என்மேலே குற்றமேயன்றி, உங்கள்மேலே அணுவளவும் குற்றமில்லை. இனி ஒரு நாளும் உங்களுடைய உத்தரவில்லாமல் உங்களைப் பிரிகிறதில்லையென்று நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன்," என்றேன். இந்தச் சமயத்தில் சம்பந்தி முதலியாரும் வந்து கலந்துகொண்டார். அவர் என்னை ஆலிங்கனம் செய்துகொண்டு, நெடுநேரம் என்னை விடாமல் பொருமினார். என்னை விட்டுவிட்டால், நான் மறுபடியும் அவருடைய மகளை அழைத்துக்கொண்டு, தேசாந்தரம் போய்விடுவேன் என்று பயந்து, அவர் பிடித்த பிடியை விடாமல் என்னை ஆலிங்கனம் செய்ததாகத் தோன்றிற்று. கடைசியாக, அவருடைய ஆலிங்கனமும் நின்றது; மூச்சுத் திணறலும் அடங்கிற்று.

பிறகு என் தகப்பனாரும், மாமனாரும் தேவராஜப் பிள்ளையை நோக்கி, "ஐயா! எங்கள் குழந்தைகள் முகம் அறியாத தேசத்திலே போய் என்ன துன்பம் படுகிறார்களோவென்று நாங்கள் கவலைப்பட்டுக்கொண்டு இருந்தோம். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல, அவர்கள் உங்களிடத்தில் வந்து சேர்ந்திருக்கிற சமாசாரம் தெரிந்த பிறகுதான் எங்களுக்கு ஆறுதல் உண்டாயிற்று. உங்களிடத்தில் வந்து சேர்ந்த பிற்பாடு, அவர்களுக்கு என்ன குறைவு இருக்கின்றது? ஆனால், அவர்கள் வெளிப்பட்ட பிறகு, எங்களுடைய வீடுகள் இருள் அடைந்திருக்கின்றன. ஆகையால், அவர்களை நாங்கள் சிக்கிரத்தில் அழைத்துக்கொண்டு போகும்படித் தாங்கள் உத்தரவு கொடுக்க வேண்டும். கனகசபைக்குக் கலியாணம் நடக்கும் போது, நாங்கள் அவசியம் வருகிறோம். அவனுடைய கலியாணத்தை நிறைவேற்றாமல், ஏன் தாமதம் செய்கிறீர்கள்?" என்று வினவ, தேவராஜப் பிள்ளை சொல்லுகிறார் :

"கனகசபை கலியாணத்தை எவ்வளவு சிக்கிரத்தில் முடிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேனோ, அவ்வளவுக்கு

அது பிந்திப் போகின்றது. பாளையப்பட்டுச் சம்பிரதாயம் என்னவென்றால், எங்களுக்குள் கலியாணம் நடக்கிறதற்கு முன், கலெக்டர், ரெவினியூ போர்டு முதலான அதிகாரஸ்தர்களுக்கு எழுதி, உத்தரவு பெற்றுக்கொண்டு, கலியாணம் செய்கிறது வழக்கம். நான் அந்த அதிகாரஸ்தர்களுக்குப் பல மனுக்கள் அனுப்பியும், யாதொரு மறுமொழியும் வரவில்லை. அந்தக் கலெக்டர் கச்சேரி சிரஸ்ததார் கேட்டுக்கொண்டபடி, என் தங்கை மகளைத் தனக்குக் கலியாணம் செய்துகொடுக்கவில்லையென்கிற அகங்காரத்தினால், கனகசபை கலியாணம் நிறைவேறாதபடி, அவன் ஏதேதோ தடங்கல்கள் செய்து வருகிறான். அவனுடைய துர்ப்போதனைகளுக்குச் செவி கொடுத்து, கலெக்டர் என்னுடைய பாளையப்பட்டை ஜப்தியில் வைக்க வேண்டிய முயற்சிகள் செய்கிறார். நான் ஜப்தி செய்யக் கூடாது என்பதற்குள்ள நியாயங்களைக் கண்டு, கவர்ன்மென்டாருக்கு விண்ணப்பம் அனுப்பி இருக்கிறேன்; அதற்கு அநுகூலமான மறுமொழி கிடைக்கும் என்று தினந்தோறும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். கனகசபை எனக்குப் பிள்ளை அல்லவென்றும், கவர்ன்மென்டாரை வஞ்சிக்கிறதற்காக நான் அவனைப் பிள்ளை போலப் பாவிப்பதாகவும் அந்தச் சிரஸ்ததார் கலெக்டர் முதலான அதிகாரிகளுக்குப் போதித்து வருகிறான். என் தம்பி செய்த மாறுபாடு, இவ்வளவு பிரமாதமாய் வந்து விளைந்திருக்கிறது. ஆயினும், சத்தியத்தை அசத்தியம் வெல்லுமா? எப்படியும் சில தினத்துக்குள் கனகசபையின் கலியாணத்துக்கு உத்தரவு வருமென்று நிச்சயமாக நம்பி இருக்கிறேன். அதுவரையும் தாங்கள் இருந்து, அந்தக் கலியாணத்தைச் சிறப்பிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்," என்றார். அந்தப் பிரகாரம் என் தகப்பனாரும், மாமனாரும் சம்மதித்துப் பயணத்தை நிறுத்தினார்கள்.

## 15. சொத்தெல்லாம் பறிமுதல்; தீபாந்தர சிட்சை!

தேவராஜப் பிள்ளை எழுதிய மனுவுக்குக் கவர்ன்மெண்டாரிட மிருந்து எப்போது உத்தரவு வருமோவென்று நாங்கள் சதா எதிர் பார்த்துக்கொண்டிருந்தோம். ஒரு நாள் குதிரைத் தபால் வழியாகக் கவர்ன்மெண்டாருடைய உத்தரவு வந்து சேர்ந்தது. அதைத் தேவராஜப் பிள்ளை ஆவலாக வாங்கிப் பிரித்து வாசித்தார். அவருக்குக் கனகசபை சொந்தப் பிள்ளையா அல்லவாவென்று விசாரிக்கும்படி மூன்று துரைமார் களை விசாரணைக் கர்த்தர்களாக நியமித்திருப்பதாகவும், அவர் கள் முன்பாகச் சாட்சி சாதகங்களுடன் போய்ச் சங்கதிகளைத் தெரிவித்துக்கொள்ளும்படியாகவும், அந்த விசாரணைக் கர்த்தர் களுடைய அபிப்பிராயப்படித் தீர்மானம் செய்ய அவர்களுக் குப் பூரண அதிகாரம் கொடுத்திருப்பதாகவும் கவர்ன்மெண்டா ருடைய உத்தரவினால் தெரிய வந்தது. அதைப் பார்த்தவுடனே இனிமேல் எப்படியும் நியாயம் கிடைக்கும் என்று நாங்கள் எல் லாரும் ஆநந்தம் அடைந்தவர்களானோம். பிற்பாடு, மேற்படி விசாரணைக் கர்த்தர்களிடத்திலிருந்து வந்த உத்தரவில் வேதபுரி என்னும் ஊரில் விசாரணை நடக்குமென்றும், சகல சாட்சி சாத கங்களுடன் அவ்விடத்திற்கு வரும்படியாகவும் ஆக்ஞாபிக்கப் பட்டிருந்தது.

அந்தப் பிரகாரம் ஆதியூரிலும் பக்க ஊர்களிலும் வசித்த தகுந்த கௌரவமுள்ள பெரிய பிரபுக்களும், நானும், என் தகப்பனாரும், சம்பந்தி முதலியாரும், சாந்தலிங்கப் பிள்ளையும், சந்நியாசியாரும் உட்பட நூறு சாட்சிகள் சகிதமாகத் தேவ ராஜப் பிள்ளையும், கனகசபையும் பயணம் புறப்பட்டு வேத புரிக்குப் போனோம். அந்த மூன்று விசாரணைக் கர்த்தர்களில் இருவர் கலெக்டர் வீட்டில் இறங்கியிருப்பதாகக் கேள்வியுற்று, நாங்கள் மிகவும் கவலை அடைந்தோம். ஆயினும், மூன்று துரை மார்கள் கூடி அநியாயம் செய்ய மாட்டார்களென்று நாங்கள் எங்களைத் தைரியப்படுத்திக்கொண்டோம்.

விசாரணைக் கர்த்தர்கள் தேவராஜப் பிள்ளையை முந்தி விசாரித்தார்கள். அவர் கனகசபை பிறந்தது முதல் நடந்த ஒவ்வொரு சங்கதியையும் விடாமல் முடிவாக வாக்குமூலம் எழுதி வைத்தார். பிற்பாடு, அவர்கள் சந்நியாசியாரையும், கனகசபையையும், அவனை வளர்த்த தகப்பனுரையும், என்னையும், என் தகப்பனுரையும், சம்பந்தி முதலியாரையும் தனித் தனியே விசாரித்தார்கள். நாங்கள் எங்களுக்குத் தெரிந்த ஒவ்வொரு விஷயத்தையும் பூரணமாகத் தெரிவித்தோம். பிற்பாடு, நாங்கள் அழைத்துக்கொண்டு போன பெரிய மனுஷர்களையும், பின்னும் அந்த விசாரணைக் கர்த்தர்களுடைய இஷ்டப்படி வரவழைக்கப்பட்ட நூறு பிரபுக்களையும் பிரத்தியேகம் பிரத்தியேகமாய் விசாரித்தார்கள். அவர்கள் எல்லாரும் ஒரே வாக்காய்த் தேவராஜப் பிள்ளை பக்கம் சாட்சி சொன்னுர்கள். விசாரணைக் கர்த்தர்கள் தங்கள் கையிலிருந்த ஒரு கடிதத்தைத் தேவராஜப் பிள்ளைக்குக் காட்டி, அது முழுவதும் யார் கையெழுத்து என்று கேட்டார்கள். அவர், மேல் விலாசம் மட்டும் தம்முடைய கையெழுத்து என்றும், உள்ளேயிருக்கிற கடிதம் தமது கையெழுத்து அல்லவென்றும், தம்முடைய லிகிதம் போல யாரோ எழுதியிருப்பதாகவும் சொன்னுர்.

மூன்று விசாரணைக் கர்த்தர்களும் ஒரு அறைக்குள்ளே போய் ஆலோசிக்கத் தொடங்கினுர்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் நெடுநேரம் சம்வாதம் செய்துகொண்டு, பிற்பாடு வெளியே வந்து, ஆசனங்களில் அமர்ந்தார்கள். அவர்களில் கலெக்டர் வீட்டில் இறங்கியிருந்த இரண்டு விசாரணைக் கர்த்தர்கள், அனேக சிப்பாய்கள் உருவின கத்திகளுடனே எங்களைச் சுற்றிக் காவலாயிருக்கும்படிச் செய்வித்து, தீர்மானம் சொல்லத் தொடங்கினுர்கள் :

"இந்த விஷயத்தில் நாங்கள் இருவரும் ஒரே அபிப்பிராயமாயிருக்கிறேம். ஒரு விசாரணைக் கர்த்தர் மட்டும் எங்கள் அபிப்பிராயத்துக்கு இசையவில்லை. அப்படியிருந்தாலும், அந்த ஒருவருடைய அபிப்பிராயத்தைப் பார்க்கிலும் இருவருடைய அபிப்பிராயம் விசேஷமானதால், எங்களுடைய அபிப்

பிராயத்தைச் சொல்லுகிறோம். இந்த விஷயத்தில் சாட்சி சொன்ன ஒருவருடைய வார்த்தையையாவது நாங்கள் நம்ப வில்லை. எல்லாருமாய்க் கூடிப் பெரிய பொய்க் கோட்டை கட்டியிருக்கிறார்கள் என்பது சத்தியமே. சந்ததி இல்லாமல் பாளையதார் இறந்து போனால், பாளையப்பட்டு கவர்ன்மென் டுக்குச் சித்தித்துப் போகுமென்று யோசித்து, கவர்ன்மென் டாரை மோசம் செய்வதற்காக, இப்படிப்பட்ட அபாண்டமான பொய்யை உண்டு பண்ணியிருப்பதாக நாங்கள் அபிப்பிராயப் படுகிறோம். ஏழைகளாயிருந்து பொய் சொன்னாலும் அதைப் பொறுத்துக்கொள்ளலாம். பெரிய பிரபுக்களென்று பேர் வைத் துக்கொண்டு, பொய்ச் சத்தியம் செய்து, பொய்ச் சாட்சியம் சொல்லி இருப்பது பெரிய அக்கிரமமாகவும், பிரபலமான துன் மார்க்கமாகவும் இருக்கின்றது. இந்தியா தேசம் முழுதும் தெரியும்படிக்குப் பொய்ச் சத்தியம் செய்தவர்களுக்குத் தகுந்த தண்டனை செய்ய வேண்டியது முக்கியமாய் இருக்கிறது. ஆகையால், பாளையதார் உள்படச் சகல சாட்சிகளையும், அவர் களுடைய ஆயுசு பரியந்தம் தீபாந்தரத்துக்கு அனுப்புகிற தென்றும், அவர்களுடைய சொத்துக்களை எல்லாம் பறிமுதல் செய்து கவர்ன்மென்டாரிடம் சேர்க்கிறதென்றும் தீர்மானம் செய்திருக்கிறோம்.” இவ்வாறு தீர்மானத்தைச் சொல்லி முடித்த உடன் எங்களுக்குக் கை விலங்கு கால் விலங்கு மாட்டிக் காவலில் வைக்கும்படி அவர்கள் உத்தரவு செய்தார்கள்.

இந்தத் தீர்மானத்தைக் கேட்டவுடனே எங்களுடைய நிலைமை எப்படி இருந்திருக்குமென்று நான் சொல்லவும் வேண்டுமா ? தேவராஜப் பிள்ளை எழுந்து மற்றவர்களை நோக்கி, “ஐயோ! உங்கள் எல்லாருக்கும் நான் ஒருவன் கூற்றுவனாய் இருந்தேனே! என்னாலே உங்கள் ஆஸ்திகளை இழந்தீர்களே! பெண்சாதி பிள்ளைகளை இழந்தீர்களே! ஆயுசு வரையில் தண் டனையும் அடைந்தீர்களே! நீங்கள் எனக்கு உபகாரம் செய்ய வந்து, பெரும் துன்பத்தை அடைந்தீர்களே!” என்று சொல்லிப் புலம்பினார். பிறகு அவர் என்னையும், என் தகப்பனாரையும், என் மாமனாரையும் நோக்கி, “இந்தத் துன்பத்தை அநுபவிக் கத்தானா நீங்கள் உங்கள் ஊரை விட்டு இவ்வளவு தூரம் வந்தீர்

கள்? நீங்களாவது தப்பியிருந்தால் எங்களுக்காகப் பிரயத்தனமும் செய்வீர்களே! இப்போது அந்த நம்பிக்கையும் இல்லாமல் போய்விட்டதே! நான் என்ன செய்வேன்?" என்று சொல்லி அழுதார். அப்படியே ஒவ்வொருவரும் பொருமினார்கள். அப்போது மண்ணும், விண்ணும், மரமும், மலையும், சகலமும் அழுவது போலத் தோன்றின. ஆனால், அந்த இரண்டு பாவிகளாகிய விசாரணைக் கர்த்தர்களுடைய மனம் மட்டும் இரங்கவில்லை.

## 16. சுந்தரத்தண்ணி வழக்குரைத்தல் - சத்தியம் நிலைத்தது

புருஷர்களாகிய எங்களுடைய கதியே இப்படியிருக்கும்போது, எங்களுடைய ஸ்திரீகள் பட்ட துக்கங்களை நான் எப்படி விவரிக்கப் போகிறேன்? அப்போது நான் கூட இராவிட்டாலும், நான் கேள்விப்பட்டதை எழுதுகிறேன்:

எல்லா ஸ்திரீகளும் பாளையதார் அரண்மனையில் வந்து கூட்டம் கூடி, புலம்பினார்கள். அவர்களுடன் அழுது புலம்பிக்கொண்டிருந்த என் தாயார், திடீரென்று எழுந்து, மற்ற ஸ்திரீகளைப் பார்த்து, "தங்கைமாரே! தமக்கைமாரே! அழுது பிரயோசனம் இல்லை. வெள்ளம் தலைக்குமேல் ஓடிவிட்டது. நம்முடைய புருஷர்கள் எல்லாரும் அகப்பட்டுக்கொண்டார்கள். அவர்களில் யாராவது ஒருவர் தப்பியிருந்தால், மற்றவர்களைக் காக்கும் பொருட்டு, அவரால் கூடிய வரையில் முயற்சி செய்வார். அவர்கள் எல்லாரும் அகப்பட்டுக்கொண்டிருப்பதால், இனிமேல் நம்மைத் தவிர, நம்முடைய புருஷர்களுக்காகப் பிரயாசைப்படத் தக்கவர்கள் யார்? கப்பல் உடைந்து கடலில் முழுகுகிறவர்களும் ஏதாவது ஒரு பலகையைப் பிடித்துக்கொண்டு கரை ஏற முயலு

கிறார்கள். விஷம் சாப்பிட்டவர்களுக்குக்கூடத் தகுந்த வைத்தியம் செய்து அவர்களைப் பிழைப்பிக்க வகை தேடுகிறார்கள். பிராணன் போன பிற்பாடு கூட, மூச்சு அடங்கியிருக்குமென்று நினைத்து வைத்தியம் செய்கிறார்கள். அப்படிப் போல நாமும் பிரயத்தனம் செய்வது அத்தியாவசியமாய் இருக்கின்றது. ஆனால், காரியம் மலையாய் வளர்ந்து போயிருப்பதால், அதற்குத் தகுந்த முயற்சி செய்ய வேண்டுமே தவிர, அற்பப் பிரயத்தனத்தால் அநுகூலம் உண்டாகாது. சென்னைப்பட்டினக் கவர்னர் நீதிமான் என்றும், தர்மிஷ்டர் என்றும் கேள்விப்படுகிறேன். அவருக்கு நாம் மனு அனுப்பினால், கிரமப்படி உத்தரவாகக் காலதாமதம் ஆகும். உத்தரவு வருகிறதற்கு முன், நம்முடைய நாயகர்களைக் கப்பலில் தீபாந்தரம் அனுப்பிவிடுவார்கள். ஆகையால், இப்போதே நாம் எல்லாருமாய்க் கூடிச் சென்னைப்பட்டினம் போய்க் கவர்னரிடம் நம்முடைய நாயகர்களுக்காக மன்றாடுவோம். இத்தனை பேருடைய பிரார்த்தனை வியர்த்தம் ஆகாதென்று நினைக்கிறேன். அந்தப்புர ஸ்திரீகளாகிய நாம் எப்படி வெளியே புறப்பட்டு அதிகாரிகளிடம் போகிறதென்று யோசிப்பீர்கள். நமக்குத் தகப்பனுக்குச் சமானமான கவர்னரிடத்தில் சென்று, நம்முடைய குறையைச் சொல்லுவதனால், நமக்கு என்ன அவமானம்? நம்முடைய பிரயத்தனத்தால் நம்முடைய பர்த்தாக்கள் விடுதலையானால், அதைவிடப் பெரிய பாக்கியமும் கீர்த்தியும் வேறென்ன இருக்கிறது? புறப்படுங்கள்! புறப்படுங்கள்!!" என்றார்கள். இதைக் கேட்டவுடனே, எல்லாருக்கும் தைரியம் உண்டாகி, என் தாயாரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

ஒரு ஸ்திரீ மட்டும் என் தாயாருடைய அபிப்பிராயத்தை அங்கீகரிக்காமல் குதர்க்கம் பேசினாள்; "கவர்னர் நமக்குப் பேட்டி கொடாத பட்சத்தில் நாம் என்ன செய்கிறது?" என்றாள். உடனே என் தாயார், "கவர்னர் பேட்டி கிடைக்காத பட்சத்தில் நாம் ஒரு விண்ணப்பம் எழுதி, அவர் வெளியிலே வரும் போது கொடுக்கலாம்," என்றார்கள். இதைக் கேட்டவுடனே, எல்லாரும் சரியென்று ஒப்புக்கொண்டு, பிரயாணம் ஆரம்பித்தார்கள்; தூய்மையான வஸ்திரங்களையும், முக்கியமான சில ஆபரணங்களையும் தரித்துக்கொண்டு, அவர்

களுடைய பிள்ளைகளுடனே வாகனங்களில் ஏறிக்கொண்டு, சென்னை நகரம் போய்ச் சேர்ந்தார்கள். அந்த நகரத்திலும் மார்க்கங்களிலும் உள்ள அநேக பிரபுக்களுடைய வீட்டு ஸ்திரீ கள், இந்த அதிசயத்தைக் கேள்விப்பட்டு, அவர்களும் வாகனு ரூடராய்ப் பின் தொடர்ந்தார்கள். எல்லாம் கூடி, ஐந்நூறு வாக னங்களுக்கு மேற்பட்டு, கவர்னர் அரண்மனைத் தோட்டத்தின் வெளிவாசலுக்கு முன்னே வந்து நிறைந்து நின்றன.

அப்போது தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்த கவர்னர், வாகனங்களின் சப்தத்தைக் கேட்டு அதிசயப்பட்டு என்ன வென்று விசாரிக்க, எண்ணிக்கையில்லாத ஸ்திரீகள் தங்களு டைய குறையைத் தெரிவிக்க வந்திருக்கிருர்கள் என்று தெரிந்து கொண்டு, தம்முடைய சபாமண்டபத்துக்கு வரும்படி உத்தரவு கொடுத்தார். அந்தப் பிரகாரம் எல்லா ஸ்திரீகளும் வாகனத்தை விட்டு இறங்கி, சபாமண்டபத்திலே பிரவேசித்தார்கள். அவர்கள் எல்லாரும் பிரபுக்கள் வீட்டு ஸ்திரீகள் என்று அவர்களுடைய முக விலாசத்தால் கவர்னர் அறிந்துகொண்டு, அவர்களை எல் லாம் ஆசனத்தில் உட்காரச் செய்து, தாமும் தம்முடைய தேவி யாரும் பீடத்தில் இருந்துகொண்டு, "நீங்கள் உங்களுடைய துன் பத்தைத் தெரிவிக்கலாம்," என்று இனிமையாக மொழிந்தார். வேருெருவரும் பேசத் துணியாமையால், என் தாயார் எழுந்து நின்றுகொண்டு, அடியில் கண்டபடி விக்ஞாபனம் செய்தார் கள் :—

"மகாப் பிரபுவே! சிஷ்ட பரிபாலனமும் துஷ்ட நிக்கிரக மும் உங்களுடைய வேலையானதால், அந்த வேலையை உங்களுக் குக் கொண்டுவந்திருக்கிருேம். ஒரு துஷ்டன் ஒரு பெண்ணைக் கொள்ள விரும்பி, அந்த ஆசை நிறைவேருமையால், இரு நூறு பெண்கள் தங்கள் நாயகர்களையும் ஆஸ்திகளையும் இழந்து போகும்படிச் செய்துவிட்டான்; தான் ஒரு ஸ்திரீக்குப் புருஷன் ஆகாத நிமித்தம், இருநூறு புருஷர்களுக்குத் தாரங்கள் இருந் தும் இல்லாதவர்களாகச் செய்துவிட்டான்.

"பாளையப்பட்டுச் சங்கதியை விசாரிக்கும்படித் தங்களால் நியமிக்கப்பட்ட விசாரணைக் கர்த்தர்கள் முன்பாக, இருநூறு

பெரிய பிரபுக்கள் அந்தப் பாளையதார் பக்கம் சாட்சி சொல்லி யிருக்கிருர்கள். அவர்களுடைய சாட்சியத்தை நம்பாமல் அந்த விசாரணைக் கர்த்தர்களில் இருவர், அந்த இருநூறு பிரபுக்களை யும் பாளையதாரரையும் ஆயுசு முழுவதும் தண்டித்து, அவர்க ளுடைய ஆஸ்திகளையும் பறிமுதல் செய்யும்படித் தீர்மானித் திருக்கிருர்கள். அந்தச் சாட்சிகளில் நூறு சாட்சிகள் பாளைய தார் கொண்டு போன சாட்சிகளாகவும், மற்றவர்கள் விசார ணைக் கர்த்தர்களால் நேரே வரவழைத்து விசாரிக்கப்பட்ட சாட்சிகளாகவும் இருக்கிருர்கள். இத்தனை பிரபுக்கள் கூடி, தங்களுக்குச் சம்பந்தமில்லாத பாளையதார் விஷயத்தில் தப்புப் பிரமாணம் பண்ணிப் பொய் சொல்லத் துணிவார்களா? நம் பிக்கையான ஏக சாட்சியினுடைய ருசு போதுமானதென்று சாட்சிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்க, நம்பிக்கையும் கௌரவமும் உள்ள இருநூறு சாட்சிகளுடைய ருசுவை அவ மதிப்பது எவ்வளவு பெரிய அநியாயம்? கலெக்டர் கச்சேரிச் சிரஸ்ததாரும், அவனுடைய துர்ப்போதனைகளுக்கு உட்பட் டிருக்கிற கலெக்டருமே பாளையதாருக்கு எதிரிகளாயிருக்க, அந்தக் கலெக்டர் வீட்டில் இரண்டு விசாரணைக் கர்த்தர்கள் வாசம் செய்துகொண்டு விசாரித்தது தர்மமா? கலெக்டர் வீட் டில் தங்காமல் தனியே கூடாரம் அடித்துக்கொண்டிருந்த மற் ருெரு விசாரணைக் கர்த்தர், பாளையதார் பக்கம் அபிப் பிராயப்பட்டது அவருக்குப் பெரிய அநுகூலம் அல்லவா? அந்த இருநூறு சாட்சிகளும் பொய் சொல்லியிருந்தாலுங்கூட, அது அவர்களைத் தேசாந்தரம் அனுப்பும்படியான அவ்வளவு பெரிய குற்றமாகுமா? அவர்களுடைய ஆஸ்திகளையும் பறிமுதல் செய்வது, ஒரு குற்றத்துக்கு இரண்டு தண்டனை செய்ததற்குச் சமானம் அல்லவா? விசாரணைக் கர்த்தர்கள் சொல்லுகிறபடி, எங்கள் புருஷர்கள்தான் குற்றம் செய்தார்கள்; நாங்களும், எங்கள் பிள்ளைகளும் ஆஸ்திகளை இழப்பதற்கு நாங்கள் என்ன குற்றம் செய்தோம்? இப்போது நான் சொல்லுவதைக்கொண்டு, எங்கள் புருஷர்களைப் பார்க்கிலும் ஆஸ்திகளை விசேஷமாக எண்ணியிருக்கிருேமென்று தாங்கள் நினைக்காமலிருக்கும் படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். நாங்கள் மங்கிலியப் பிச்சை கேட்க வந்திருக்கிருேமே அல்லாது, ஆஸ்திப் பிச்சை

கேட்க வரவில்லை. எங்களுக்கு மங்கிலியப் பிச்சை கிடைக்காத பட்சத்தில் எங்களுக்கு ஆஸ்திகளும் வேண்டிய தில்லை. தங்கள் சமுகத்தில் எல்லா விஷயங்களையும் நேரே விசாரித்து, எங்கள் பக்கம் நியாயம் இருந்தால் செய்யும்படிப் பிரார்த்திக்கிறோமே அல்லாது, எங்களுடைய பிர லாபத்துக்கு இரங்கி, பட்சபாதம் செய்யும்படி நாங்கள் கேட்க வில்லை. உங்கள் உத்தியோகஸ்தனை ஒரு பரம துஷ்டன் உங்க ளுடைய கீர்த்தியையும், எங்களுடைய நன்மையையும் அழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறான். அவனைத் தண்டித்து, எங் களை ரட்சிக்கும்படி நாங்கள் பிரார்த்திக்கிறோம். சகலமும் தெரிந்த உங்களுக்குப் புருஷர்களை இழந்த இந்தத் தேசத்து ஸ்திரீகளுடைய நிர்ப்பாக்கியங்களை விவரிக்க வேண்டுவதில்லை. ஆகையால், எங்களுக்கு நாயகர்களையும், எங்களுடைய பிள்ளை களுக்குத் தந்தைமார்களையும் கொடுத்தருளுங்கள்! நாங்கள் சொல்வது பொய்யென்று தாங்கள் அபிப்பிராயப்படுகிறதானால் அந்தக் குற்றத்துக்காக எங்களையும் தண்டித்து, எங்கள் நாய கர்களுடனே எங்களையும் அனுப்பிவிடுங்கள்."

இதைக் கேட்கும் போது, கவர்னருக்கும் அவருடைய தேவி யாருக்கும் கண்ணீர் பெருகி, அடிக்கடிக் கண்களைத் துடைத்துக் கொண்டார்கள்.

பிறகு கவர்னர், என் தாயாரையும் மற்ற ஸ்திரீகளையும் நோக்கி, "இது பெரிய விஷயமானதால், நாம் உங்கள் ஊருக்கே வந்து விசாரித்து, நியாயப்படித் தீர்மானிக்கிறோம்; அது வரையில் விசாரணைக் கர்த்தர்கள் செய்த தீர்மானத்தை நிறைவேற்றாமல் நிறுத்தி வைக்கும்படி இப்பொழுதே உத்தரவு அனுப்புவோம். நீங்கள் ஊருக்குப் போகலாம்," என்று உத்தரவு கொடுத்தார். உடனே என் தாயார் முதலிய ஸ்திரீகள் புறப்பட்டு, எங்க ளுக்குப் பரிசயமானவர்கள் கிருகங்களுக்குப் போய், போஜ னம் செய்த பிற்பாடு, மீண்டும் புறப்பட்டுப் போய்த் தங்கள் ஊரை அடைந்தார்கள்.

மறு நாளே கவர்னர் தம்முடைய பரிவாரங்களுடன் வேத புரிக்கு வந்து, கூடாரங்களில் இருந்துகொண்டு, பரிசீலனை பண்

ணத் தொடங்கினர் ; பாளையதாரும் சாக்ஷிகளும் எழுதி வைத்த வாக்குமூலங்களையும், இரண்டு விசாரணைக் கர்த்தர்கள் செய்த தீர்மானத்தையும், அதற்கு விரோதமாய் மற்றொரு விசாரணைக் கர்த்தர் கொடுத்த அபிப்பிராயத்தையும், இன்னும் மற்ற லிகிதங்களையும் வாசித்துப் பார்த்து உண்மையைத் தெரிந்துகொண்டார். பாளையதார் தமக்குப் பிள்ளை இல்லை என்று சிரஸ்ததாருக்கு எழுதினதாகச் சொல்லப்பட்ட கடிதம் ஒன்றுதான், பாளையதார் கட்சிக்குக் கொஞ்சம் பாதகமாயிருந்தது. பாளையதார் சிரஸ்ததாருக்கு எழுதியிருந்த ஒரு வாஸ்தவமான கடிதத்தைக் கிழித்தெறிந்துவிட்டு, அது வைத்திருந்த உறைக்குள்ளே, சிரஸ்ததார் ஒரு பொய்யான கடிதத்தை எழுதி வைத்துக்கொண்டு மாறுபாடு செய்ததாக அநேக சாட்சிகளாலும் அநுமானங்களாலும் ஸ்தாபிக்கப்பட்டது. அதனால் கவர்னருக்கு உண்டாயிருந்த அற்ப சந்தேகமும் தீர்ந்துவிட்டது. உடனே அவர் அந்த இரண்டு விசாரணைக் கர்த்தர்களுடைய தீர்மானத்தை மாற்றி, பாளையதார் கட்சியை ஸ்தாபித்து, அவரும் எல்லாச் சாட்சிகளும் நிரபராதிகள் என்று தீர்ப்புச் செய்தார் ; அந்த இரண்டு விசாரணைக் கர்த்தர்களையும், கலெக்டரையும் உத்தியோகத்தை விட்டு நீக்கி, அவர்கள் எங்களைத் தீபாந்தரம் அனுப்ப வைத்திருந்த கப்பலில் அவர்களை ஏற்றி, சீமைக்கு அனுப்பிவிட்டார் ; அந்தச் சிரஸ்ததாரை உத்தியோகத்தினின்று விலக்கி, எங்களுக்கு நியமித்திருந்த தீபாந்தரத்துக்கு அவனையே அனுப்பினர்.

## 17. வேட்டையும் வில்லங்கமும்

விடுதலையான எல்லாப் பிரபுக்களும், அவர்களுடைய குடும் பங்களும், ஆதியூரிலும் சுற்றுக் கிராமங்களிலும் வசிக்கிறவர் களும் சமுத்திரம் கரை புரண்டு வருவது போலக் கூட்டம் கூட்டமாய்த் தேவராஜப் பிள்ளை வீட்டுக்கு வந்து, சந்தோஷம் கொண்டாடினார்கள். அவர்களுடைய கொண்டாட்டமே ஒரு பெரிய திருவிழாவாகவும், அந்தத் திருவிழாவுக்குத் தேவராஜப் பிள்ளை கிருகமே ஆலயமாகவும், அந்த ஆலயத்துக்கு என் தாயாரே தெய்வமாகவும் இருந்தாற்போல, சகலரும் என் தாயாரை வாழ்த்தினார்கள்.

இப்படியாக, கனகசபையின் கலியாண விஷயத்தில் நேரிட்ட சகல இடையூறுகளும் நீங்கிவிட்டதால், அந்தக் கலியாணமும் நிறைவேறிற்று. நாங்கள் செய்ய வேண்டிய சீர் வரிசைகள் எல்லாவற்றையும் ஏராளமாகச் செய்தோம்.

கனகசபையின் மணம் முடிந்து, சில நாள் சென்ற பின்பு, என் தந்தையாரும் மாமனாரும் ஊருக்குப் போக உத்தரவு கேட்டார்கள். உடனே தேவராஜப் பிள்ளை அவர்களைப் பார்த்து, "ஐயா! நீங்கள் இங்கே இருந்தது எங்களுக்குப் பெரிய அரணும் கவசமும் போல இருந்தது. உங்களுடைய பிரிவை நினைக்கும் போது, எனக்கு மனசு பகீரென்கிறது. அந்த விசாரணைக் கர்த்தர்கள் அநியாயத் தீர்மானம் செய்த காலத்தில் நீங்களும் சுந்தரத்தண்ணியாரும் இவ்விடத்தில் இல் லாமல் இருந்தால், எங்களுடைய கதி எப்படி முடிந்திருக்கும்?" என்றார். உடனே என் தகப்பனார் அவரை நோக்கி, "இனி மேல் கடவுள் உங்களுக்கு ஒரு ஆபத்தும் வர ஒட்டார். நாங்கள் எங்கள் ஊரைவிட்டு வந்து வெகு நாள் ஆகிறபடியால், தாங்கள் உத்தரவு கொடுக்க வேண்டும்," என்றார். உடனே கனகசபை எழுந்து, என் தகப்பனாரிடம், "ஐயா! நீங்கள் இங்கே விஜயம்

செய்த பிற்பாடு, நான் எவ்வளவோ மன மகிழ்ச்சியாய் இருந்தேன். இப்போது நீங்கள் எல்லாரும் ஒருமிக்கப் போய் விட்டால், நான் எப்படிச் சகிப்பேன் ? அண்ணனும் அண்ணியு மாவது இன்னும் சில நாள் இவ்விடத்தில் இருக்கும்படி உத்தரவு செய்ய வேண்டும். ஒரு மாசத்துக்குள் நாங்கள் எல்லாரும் சத்தியபுரிக்கு வந்து, உங்களைக் கண்டுகொள்ளுகிறோம்," என்று கேட்டுக்கொண்டான். தேவராஜப் பிள்ளையும் அந்தப் படி வேண்டிக்கொண்டபடியால், அவர்களுடைய பிரார்த்த னையை நிராகரிக்கமாட்டாமல், நானும் ஞானம்பாளும் இன்னும் ஒரு மாதம் வரைக்கும் ஆதியூரில் இருக்கும்படி அரை மன துடன் உத்தரவு கொடுத்துவிட்டு, என் தாய் தகப்பனர், மாமனர் மாமியார் முதலானவர்கள் சத்தியபுரிக்குப் போய்விட்டார்கள்.

ஆதியூருக்கு வடக்கே இரு காத வழி தூரத்துக்கு அப்பால் எல்லை காணக் கூடாத விஸ்தீரணமான காடுகளும், மலைகளும் இருந்தன. அவைகளில் யானை, புலி, கரடி முதலிய துஷ்ட மிரு கங்கள் பெருகி, அடுத்த கிராமங்களில் இருக்கிற ஜனங்களுக் கும், ஆடு, மாடு முதலியவைகளுக்கும் சேதத்தை உண்டு பண்ணினபடியால், அந்த மிருகங்களை நாசம் செய்யும்படி வேட்டைக்காரர்களுக்கு உத்தரவு கொடுக்க வேண்டுமென்று பல கிராமத்தார் வந்து, தேவராஜப் பிள்ளையிடத்தில் முறை யிட்டுக்கொண்டார்கள். உடனே, அவர் வேட்டைக்காரர்களை அழைப்பித்து, மிருக வேட்டையாடும்படி உத்தரவு கொடுத்தார். நானும் கனகசபையும் வேட்டை பார்க்க விரும்பினமையால், தேவராஜப் பிள்ளை அவருடைய பெரிய பட்டத்து யானையைச் சிங்காரித்து, வேட்டையாடுகிற கானகத்திலே கொண்டுபோய்ச் சித்தமாய் வைத்திருக்கும்படி உத்தரவு செய்தார்.

நானும் கனகசபையும் குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு கானகத்துக்குப் போனேம். என்னுடைய குதிரை யானை நின்ற இடத்துக்கு முந்திப் போய்விட்டதால், நான் குதிரையினின்று இறங்கி, யானைமேல் ஏறி அம்பாரியில் உட்கார்ந்துகொண் டேன். யானைப் பாகன் கனகசபையைக் காணுமையினல், வழியைப் பார்த்துக்கொண்டு யானைக்குப் பக்கத்தில் நின்று

கொண்டு இருந்தான். வேடர்களால் கலைக்கப்பட்டுப் பெரும் புத ரில் பதுங்கிக்கொண்டிருந்த ஒரு புலியானது, அந்தப் பாகன் மேலே பாய்ந்து, அவனைத் தூக்கிக்கொண்டு ஓட ஆரம்பித்தது. உடனே நான் என் கையிலிருந்த துப்பாக்கியில் குண்டு போட் டுக் கெட்டித்துப் புலியின்மேலே பிரயோகித்தேன். அந்தக் குண்டுகளையும் புலி லட்சியம் செய்யாமல் பாகனைத் தூக்கிக் கொண்டு ஓடிற்று. யானை தன் முதுகின்மேலே வெடிச் சப்தம் கேட்ட உடனே, விறிட்டுக்கொண்டு, புலியைத் தொடர்ந்து சென்றது. புலி வெகு தூரம் வரையில் ஓடி, யானை நுழையக் கூடாத ஒரு மலைக் குகைக்குள் நுழைந்துவிட்டது. ஒரு பர்வதம் மலையருவிகளுடன் நடந்து போவது போல, அந்த மத யானை மத ஜலங்களை ஒழுகவிட்டுக்கொண்டு குறுக்கே யிருக்கிற மரங்கள் செடிகளை முறித்துத் தள்ளி, இடி முழக்கம் போலச் சப்தித்துக்கொண்டு, கனவேகத்துடன் கானகத்துக்கு நடந்து போவதைப் பார்த்த மற்ற யானைகள், புலி, கரடி முதலி யவைகள் அஞ்சி, நடுநடுங்கி, அங்கும் இங்கும் ஓடிப் பதுங்கிக் கொண்டன.

இவ்வகையாக, அந்த யானை பல நாள் வரைக்கும் என்னை யும் சுமந்துகொண்டு, அநேக காறு, மலைகள் எல்லாம் தாண்டி வட திசையை நோக்கி ஓடிற்று. அதை வசப்படுத்தித் திருப்ப, நான் செய்த பிரயத்தனங்கள் எல்லாம் வியர்த்தமாய்ப் போய்விட்டன. நான் தத்தளித்துத் தடுமாறித் தயங்கினேன். எனக்காகவும் கனகசபைக்காகவும் பல பாத்திரங்களில் அநேக வகையான பக்ஷணங்களும், பலகாரங்களும், ஜலமும் அம்பாரிக் குள் வைக்கப்பட்டிருந்தாலும், நான் மனக் கலக்கத்தினால் மூன்று நாள் வரைக்கும் ஆகாரத்தை நினைக்கவே இல்லை. பிறகு, நான் அந்தப் பக்ஷணங்களையும் ஜலத்தையும் அருந்தி, ஒருவாறு பசி தீர்த்துக்கொண்டேன்.

அந்த யானை ஒரு இடத்திலும் நில்லாமல் அல்லும் பகலு மாக அநேக நாள் ஓடின பிறகு, ஒரு பெரிய மலையருகில் வந்து சேர்ந்தது. அந்த மலைச்சாரலில் எண்ணிறந்த யானைகள் கூட் டம் கூட்டமாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்தன. அந்த யானை

களில் ஒன்ருவது இந்த யானையைப் போலப் பெரும் காத்திர முள்ளதாய் இருக்கவில்லை. மாமிச பர்வதம் போலவும், இடி முழக்கத்துடன் மேகம் கர்ச்சித்துக்கொண்டு வருவது போல வும் அந்த யானை ஓடி வருவதைக் கண்ட மற்ற யானைகள் கலங்கி, அங்குமிங்கும் ஓடிப் போய்விட்டன. அந்த யானை எங்கும் நில்லாமல் ஒரே ஓட்டமாய் அந்த மலைச் சார்பை நாடி வந்ததை யோசிக்குமிடத்தில், ஆதியில் இந்த இடம், அந்த யானை வசித்த இடமாய் இருந்திருக்கலாமென்று தோன்றிற்று. யானை மலை ஓரத்தில் சென்று தாண்டித் தாண்டி, தன் மேலிருந்த அம்பாரியைப் பாறையுடன் சேர்த்து மோதிற்று. உடனே அந்த அம்பாரி சுக்குச் சுக்காக உடைந்து, அதிலிருந்த நான் வெளிப்பட்டு, மலை மேலே தொத்திக்கொண்டேன். நான் அம்பாரியில் கழற்றி வைத்திருந்த என் முண்டாசு, சட்டை முதலியவைகள் அந்த மலையில் எனக்கு எட்டாத இடத்தில் மாட்டிக்கொண்டன. பிறகு அந்த யானை என் கண்ணுக்கு மறைவாய்ப் போய்விட்டதால், அதன் செய்தி யாதொன்றும் எனக்குத் தெரியாது.

பயத்தினுல் நான் கீழே இறங்கக் கூடாமலும், மேலே போவதற்கு மார்க்கம் இல்லாமலும் அந்தரத்தில் அகப்பட்டுக் கொண்டேன். அந்த மலை செங்குத்தாயிராமல் சாய்வாக வும் கரடு முரடாகவும் இருந்தபடியால், நான் கொஞ்சம் கொஞ்சமாய் மேலே ஏற ஆரம்பித்தேன்; வழியிலுள்ள மரங்களில் என் பெயரை ஒரு ஆணியினுல் வரைந்துகொண்டு போனேன். நான் மலை விருட்சங்களின் கனிகளை உண்டு, பசி தீர்த்துக்கொண்டு மலைமேல் ஏற இரண்டு நாட்கள் சென்றன. நான் மலை முகட்டில் சேர்ந்த உடனே, மறு பக்கத்தில் இறங்கு வதற்கு வழி இருக்கிறதாவென்று ஆராய்ந்தேன். மலைக்கு வட புறத்தில் மனிதர்கள் ஏறும் படியாகவும், இறங்கும் படியாகவும் படிகள் வெட்டப்பட்டிருந்தன. அவைகளைப் பார்த்த உடனே எனக்குச் சந்தோஷம் உண்டாகி, அவைகளின் வழியாக நான் இறங்க ஆரம்பித்தேன். நான் ஒரு நாள் பகலும் இரவும் மெள்ள மெள்ள இறங்கி, மறுநாள் காலையில் அடிவாரத்தில் வந்து சேர்ந் தேன்.

## 18. விக்கிரமபுரியா ? அக்கிரமபுரியா ?

மலையின் அடிவாரத்தில் உயரமான மதிலும், நாகலோகம் வரையில் செல்லுகின்ற அகழியும் உடைய ஒரு பெரிய நகரம் இருந்தது. நான் கோட்டை வாசலைக் கடந்து, தெரு வீதி வழியாய்ப் போகும்போது, ஒரு சக்கிலியன் இரண்டு ஜோடுகளைக் கையில் வைத்துக்கொண்டு, விலை கூறிக்கொண்டு எதிரே வந்தான். அப்போது வெயில் அதிகரித்து, பூமியில் கால் வைக்கக் கூடாமல் இருந்தபடியால், நான் அந்த ஜோடு களை வாங்கி, என் காலில் மாட்டிப் பார்த்தேன். அவை கள் என் காலுக்குச் சரியாயிருந்தபடியால், நான் அந்தச் சக்கிலி யனைப் பார்த்து, " உன்னை நான் சந்தோஷப்படுத்துகிறேன் ; இந்த ஜோடுகளை விலைக்குக் கொடு," என்றேன். அவன் நல்ல தென்று சம்மதித்தான். அந்த ஜோடுகள் அரை வராகன் பெறு மானதால், நான் அந்தத் தொகையைச் சக்கிலியன் கையில் கொடுத்தேன். அவன், "எனக்குச் சந்தோஷம் வரவில்லை," என் ருன். நான் மறுபடியும் கால் வராகன் கொடுத்தேன். அவன் அதையும் வாங்கிக்கொண்டு, " சந்தோஷம் வரவில்லை," என் ருன். நான் பின்னும் சில தொகை கொடுத்தேன். அவன் நான் கொடுப்பதையெல்லாம் வாங்கிக்கொண்டு, " சந்தோஷம் இல்லை! சந்தோஷம் இல்லை !" என்ருன். நான் அவனைப் பார்த்து, "உன்னுடைய ஜோடு எனக்கு வேண்டாம். என்னுடைய பணத்தைக் கொடு," என்று கேட்டேன். அவன் உடனே என்னைப் பிடித்துக்கொண்டு, " என்னைச் சந்தோஷப்படுத்து வதாக ஒப்புக்கொண்ட நீ, அப்படிச் செய்யத் தவறிப்போய் விட்டதால், உன்னை நான் சும்மா விடுவேனு ? என்னுடைய ஜோட்டை நீ காலில் மாட்டிப் பார்த்த பிறகு அவைகளை நீ கொடுத்தால், நான் வாங்குவேனு? நியாய சபைக்குப் போவோம்; வா, " என்று என்னைப் பற்றி இழுத்துக்கொண்டு போனுன். அவன் கையைத் திமிறிக்கொண்டு நான் தப்பித்துக்கொள்வது எளிதாயிருந்தாலும், ' தன்னூருக்கு யானை, அயலூருக்குப்

பூனை ' என்பது போல, நான் என்னுடைய ஸ்வரூபத்தைக் காட்டாமல் அடக்கிக்கொண்டு போனேன்.

நாங்கள் போகும்போது, ஒற்றைக் கண் குருடன் ஒருவன் எங்களுக்கு எதிரே வந்தான். அவன் என்னைக் கண்ட உடனே ஓடி வந்து, " அடா திருடா ! நீ போன வருஷத்தில் திருநாளுக்குப் போவதற்காக, உன்னுடைய குருட்டுக் கண்ணை எனக்குக் கொடுத்துவிட்டு, என்னுடைய நல்ல கண்ணை இரவல் வாங்கிக் கொண்டு போனாயே ! கெடு தப்பி இத்தனை நாளாகியும், நீ ஏன் என் கண்ணைக் கொடுக்கவில்லை ?" என்று சொல்லி ஒரு பக்கத்தில் என்னைப் பிடித்துக்கொண்டான்.

என்னுடைய கழுத்திலும், காதுகளிலும், கைகளிலும் நான் பல ஆபரணங்களைத் தரித்துக்கொண்டிருந்தேன். அந்த ஆபரணங்களை இச்சித்தே அவர்கள் என்னை அநியாயம் செய்ததாக எனக்கு விளங்கிற்று. அந்த அநியாயக்காரர்களுக்கு நகைகளைக் கொடுத்துத் தயவு சம்பாதிப்பதைப் பார்க்கிலும், நியாயாதிபதிகள் செய்யும் தீர்மானத்துக்கு உட்படுவது நலமென்று நினைத்து, நான் அவர்களுடன் நியாய சபைக்குப் போனேன்.

நாங்கள் போவதற்கு முந்தி நியாய சபை கலைந்து போய் விட்டதால், அன்றைக்கு விசாரணை நடக்கவில்லை. அந்தத் துஷ்டர்கள் என்னைக் காவல் கிடங்கில் ஒப்புவிப்பதற்காகக் கொண்டு போனார்கள். என்னுடைய நகைகளை நானே கொடுத்து விடுவேனென்று அவர்கள் எதிர்பார்த்தும், நான் கொடுக்கவில்லை. அவர்களும் விடாக் கண்டகர்கள் ; நானும் கொடாக் கண்டகனானதால், அவர்கள் என்னை வழிப்பறி செய்ய ஆரம்பித்தார்கள். உடனே நான், "கூ ! கூ ! கொள்ளை அடிக்கிறார்கள் !" என்று கூவினேன். அந்தச் சப்தம் கேட்டுக் காவற் சேவகர்கள் வந்து வளைத்துக்கொண்டு, நடந்த சங்கதியை விசாரித்தார்கள். நான், " என்னுடைய ஆபரணங்களை இந்தப் படு பாவிகள் கழற்றிக்கொண்டார்கள்," என்று முறையிட்டேன். அவர்கள் என் சொல்லை மறுத்து, "அந்த ஆபரணங்கள் எங்க

களுக்குச் சொந்தம்,'' என்று சாதித்தார்கள். அந்தக் காவற் சேவகர்கள் என்னைப் பார்த்து, "அந்த நகைகள் உனக்குச் சொந்தமல்லவென்று அவர்கள் சொல்லுகிறார்கள்; அவர்களுக் குச் சொந்தமல்லவென்று நீ சொல்லுகிறாய். ஆகையால், நீங் கள் இருதிறத்தாரும் அந்த நகைகளுக்குச் சொந்தக்காரர்கள் அல்லவென்பதற்கு உங்களுடைய வாய்ப் பிறப்பே போதுமான தாய் இருக்கிறது. நாதன் இல்லாச் சொத்துக்கு நாங்கள் பாத்தி யஸ்தர்கள் ஆனதால், அந்த நகைகள் எங்களுக்குத்தான் சொந் தம்!'' என்று சொல்லி, நகைகளைப் பறித்துக்கொண்டார்கள். பிறகு அந்தச் சக்கிலியனும் ஒற்றைக் கண்ணனும் என்மேலே குற்றம் சாட்டி, என்னைக் காவலில் வைக்கும்படிச் சேவகர்களை வேண்டிக்கொண்டார்கள். அந்தப் பிரகாரம் சேவகர்கள் என்னைப் பிடித்துக் கை விலங்கு, கால் விலங்கு மாட்டி, என்னு டைய வஸ்திரங்களையும் பிடுங்கிக்கொண்டு, கௌபீனத்துடன் என்னைக் காவலில் வைத்துக்கொண்டார்கள். 'வேலியே பயிரை மேய்ந்தது' போல, அந்தக் காவற்சேவகர்களுடைய செய்கையே அப்படியிருக்குமானால், என்னைப் பிடித்துக்கொண்டு வந்த சக்கிலியன் முதலானவர்கள்மேலே குறை சொல்ல எனக்கு வாயும் உண்டா?

என்னோடு கூடக் காவற்கூடத்தில் இருந்தவர்களில் ஒருவன் சகஜமாய்ப் பேசக் கூடியவனாகக் காணப்பட்டபடியால், நான் அவனைப் பிரத்தியேகமாக அழைத்து, இந்த ஊர்ப் பெயரும், அரசன் பெயரும் என்னவென்றும், ராஜரீக தர்மமும், நியாயப் பரிபாலனமும் எப்படியென்றும் விசாரித்தேன். அவன் என்னைப் பார்த்து, "நீர் அன்னியதேசத்தார் போலக் காணப்படுகின்றது. இந்த ஊருக்கு விக்கிரமபுரி என்று பெயர். பல நாடுகளுக்கு இது ராஜ நகரமாய் இருக்கின்றது. இதை ஆண்ட அரசன், இதற்கு இரண்டு வருஷத்துக்கு முன்பு, ஆண் சந்ததி இல்லாமல் இறந்து போனான். அது முதல் ஒவ்வொருவனும் தான்தான் பெரியவ னென்று தலைக்குத் தலை மூப்பாய்த் தறுதலையாய்த் திரிகிறான். இந்த நாடு தலையில்லாத சரீரம் போலத் தத்தளித்துக்கொண்டி ருக்கின்றது. சூரியன் போன பிற்பாடு துஷ்ட மிருகங்கள் வெளிப் பட்டுச் சஞ்சரிப்பது போல, அரசன் போன பிற்பாடு அக்கிரமக்

காரர்கள் கிளம்பி ஊரைப் பாழாக்கிவிட்டார்கள். சாதுக்கள் எல்லாரும் ஒடுங்கிப் போனார்கள். வெளியே போனால் மறுபடியும் வீட்டுக்குத் திரும்பி வருவோம் என்கிற நம்பிக்கை இல்லை. நம்முடைய பொருளை நாமே சுதந்தரமாக அநுபவிப்போம் என்கிற நிச்சயம் இல்லை. 'பாழூருக்கு நரி ராஜா' என்பது போலத் துஷ்டர்களே எங்கும் பரவியிருக்கிறபடியால், லக்ஷாதிபதியாயிருக்கிறவன் ஒரு நிமிஷத்தில் பிக்ஷாதிபதியாகிறான்; பிக்ஷாதிபதியாயிருக்கிறவன் லக்ஷாதிபதியாகிறான். இந்த ஊருக்கு விக்கிரமபுரி என்ற பெயர் போய், அக்கிரமபுரி என்கிற பெயர் வந்துவிட்டது. பெரிய அரண் போல மலைகளும் கடல்களும் சூழ்ந்திருப்பதால், இந்த ஊருக்கு வெளிச் சத்துருக்கள் ஒருவருமில்லை; உட்சத்துருக்களுடைய போராட்டமே பெரிதாயிருக்கின்றது. குடியரசு கொடிய அரசாகிவிட்டதால், சீக்கிரத்தில் ஒரு அரசனை நியமிக்க வேண்டும் என்பது சாதுக்களுடைய மனோபாவமாய் இருக்கின்றது. அப்படிப்பட்ட நல்ல காலம் எப்போது வருமோ தெரியவில்லை," என்றான்.

நான் அந்த மனுஷனைப் பார்த்து, "இப்போது அரசன் இல்லாதபடியால், நம்முடைய சங்கதிகளை யார் விசாரிப்பார்கள்?" என்று கேட்டேன். அவன் என்னைப் பார்த்து, "அரசனால் முன்பு நியமிக்கப்பட்ட ஒரு நியாயாதிபதி இருக்கிறான். அவன்தான் நம்முடைய சங்கதிகளை விசாரிப்பான். அவன், அரசன் உள்ள வரையில், உருத்திராட்சப் பூனை வேடம் போட்டுக்கொண்டு வந்தான்; அரசன் இறந்த பிறகு, அவனுடைய சொரூபத்தைக் காட்டிவிட்டான். அவன் சிஷ்ட நிக்கிரகமும் துஷ்டாநுக்கிரகமும் செய்கிறதேயன்றி, துஷ்ட நிக்கிரகமும் சிஷ்டாநுக்கிரகமும் செய்கிறதில்லை. அவன் ஒரு மாதத்தில் ஒரு தரம் அல்லது இரண்டு தரந்தான் நியாய சபைக்கு வருகிற வழக்கம். அந்த ஒரு நாளையில் கெடுகிற குடிகள் ஆயிரத்துக்கு அதிகமாயிருக்கலாம். அவன் நியாயா நியாயங்களைப் பார்த்துத் தீர்மானிக்காமல் குருட்டு நியாயமாக ஆறு மாதம்வரையில் வாதிகள் பக்கத்திலும், ஆறு மாதம் வரையில் பிரதிவாதிகள் பக்கத்திலும் தீர்மானிக்கிற வழக்கம். இப்போது வாதிகள் பக்கம் தீர்மானிக்கிற காலமானபடியால், நம்

மேல் வந்திருக்கிற வழக்குகளை நமக்குப் பிரதிகூலமாகவும், வாதிகளுக்கு அநுகூலமாகவும் தீர்ப்பான் என்பதற்குச் சந் தேகமில்லை. நாம் பிராணனுடன் வீட்டுக்குத் திரும்பிப் போய் நம்முடைய பெண்ஜாதி பிள்ளைகள் முகத்தில் விழிப்போம் என் கிற நம்பிக்கையைக் கட்டோடே விட்டுவிட வேண்டியதுதான்," என்றான். இதைக் கேட்ட உடனே எனக்கு உண்டான துயரத் தைப்போல அதற்குமுன் ஒரு நாளும் நான் அநுபவித்ததில்லை.

## 19. கிரகணம் விட்டது!

விக்கிரமபுரியின் நியாயாதிபதி தினந்தோறும் நியாய சபைக்கு வராவிட்டாலும், அவன் என்றைக்கு வருவான் என்கிற நிச்சயம் தெரியாமையினால் நாங்கள் தினந்தோறும் நியாய ஸ்தலத்துக்குப் போய் அலைந்துகொண்டு வந்தோம். அவன் இருபது நாளைக்குப் பிறகு, ஒரு நாள் நியாய ஸ்தலத்துக்கு வந்து என்னுடைய சங்கதிகளை முந்தி விசாரிக்க ஆரம்பித்தான். சக்கிலியனுடைய வழக்கு முதல் வழக்கானதால், நியாயாதிபதி சக்கிலியனுடைய வாதத்தையும் என்னுடைய வாதத்தையும் கேட்டுக்கொண்டு தீர்மானம் சொல்லத் தொடங்கினான். நியா யாதிபதி என்னைப் பார்த்து, "சக்கிலியனைச் சந்தோஷப்படுத்து வதாக நீ ஒப்புக்கொண்டபடியால், நாளைத் தினம் அருணோ தயத்துக்கு முன் அவனை நீ எப்படியாவது சந்தோஷப்படுத்த வேண்டும். அப்படிச் செய்யத் தவறினால், நாளைத் தினம் விடிந்த உடனே அவன் உன் பிராணனைக் கேட்டாலும், நீ கொடுக்க வேண்டியதுதான்," என்றான். இதைக் கேட்ட உடனே நான் வேர்த்து, விறுவிறுத்துப் போனேன்.

இந்த ஒரு வழக்கின் தீர்மானத்தைக் கொண்டு, மற்ற வழக்குகள் எப்படித் தீர்மானிக்கப்படும் என்பதை நான் அறிந்துகொண்டபடியால், இனிமேல் என் பிராணன் எனக்குச் சொந்தமல்லவென்று நிச்சயித்துக்கொண்டேன்; பிராணனை

இழப்பது நிச்சயமாயிருந்தாலும், அந்த விபத்தைத் தடுக்கும் பொருட்டு என்ன உபாயம் செய்யலாம் என்று ஆலோசித்தேன்; எனக்கு அண்ட சாஸ்திரம் தெரியும். அதன் மூலம் மறுநாள் சூரிய கிரகணம் என்றும், அது பாதாள கிரகணமானதால், நெடு நேரம் வரையில் சூரியன் ஒருவருக்கும் தோன்ருது என்றும் நான் அறிந்துகொண்டேன்; தவிர, அந்த ஊராருக்குக் கிரகணம் கணிக்கிற முறையே தெரியாதென்றும் தெரிந்துகொண்டேன். நான் அந்த நியாயாதிபதியைப்பார்த்து, "நாளைத் தினம் பொழுது விடிகிறதற்கு முன் நான் சக்கிலியனைச் சந்தோஷப் படுத்த வேண்டுமென்று அநீதமாகத் தீர்மானம் செய்திருக்கிறீர்கள். நாளைத் தினம் பொழுது விடியாவிட்டால், என்ன செய்வீர்கள்?" என்றேன். அவன், "நாளைக்குப் பொழுது விடியாதபடிச் செய்ய உன்னுல் ஆகுமா?" என்ருன். "என்னுல் ஆகும் என்பதும், ஆகாது என்பதும் நாளைத் தினம் பார்த்துக்கொள்ளலாம்," என்றேன். அவன் உடனே கோபாவேசத்துடன் என்னை நோக்கி, "நீ பொழுது விடியாதபடிச் செய்தால், நீ சமர்த்தன் தான். நாளைக்கு வழக்கப்படி பொழுது விடிந்தால், உனக்கு இறுதி உண்டாகும் என்பது உறுதிதான். இவ்விரண்டில் ஒன்று தெரிந்த பிறகுதான், மற்ற வழக்குகள் விசாரிக்கப் படும்," என்று சொல்லி, மூர்க்காவேசத்துடன் வீட்டுக்குப்போய் விட்டான். அங்கே இருந்தவர்கள் எல்லாரும் என்னைப் பார்த்து, "நீயே உனக்குத் தீங்கைத் தேடிக்கொண்டாயே! பொழுது விடியாதபடிச் செய்ய உன்னுல் கூடுமா?" என்று என்னைத் தூஷித்தார்கள். ஆனுல் அநேகர் நான் சொன்னபடியே நடந்தாலும் நடக்குமென்று பயந்துகொண்டு, அன்று இரவு முழுதும் தூங்காமல் இருந்ததாகக் கேள்விப்பட்டேன். நானும் அந்த இரவு முழுதும் நித்திரை செய்யாமல், மந்திர தந்திரங்கள் செய்வது போல மாமாலம் பண்ணி ஒரு வெண்பாவையும் பாடிப் பிரசுரம் செய்தேன்:

"முடியரசன் போனபின்பு மூர்க்கரெல்லாங் கூடிக்
குடியரசென் ருேர்பெயரைக் கூறி—நெடிய
பழுதே புரியுமிந்தப் பாழு ரதனில்
பொழுதே விடியாமல் போ."

மறுநாள் கிரகணம் பிடித்துக்கொண்டபடியால், வெகு நேரம் வரையில் பொழுது விடியவே இல்லை. இதைப் பார்த்த உடனே, பட்டணம் கிடுகிடுத்துப் போய்விட்டது. அந்த நியாயாதிபதி பொழுது விடியவில்லை என்று தெரிந்த உடனே புறப்பட்டுக் காவற்கூடத்துக்கு ஓடி வந்தான். அவனைக் கண்ட ஜனங்கள் மண்ணை வாரி இறைத்து, "அட பாவீ! சண்டாளா! அந்தப் புண்ணியவானுக்கு விரோதமாகத் தீர்மானஞ் செய்து, பொழுது விடியாதபடிப் பண்ணிவிட்டாயே!" என்று வாயில் வந்தபடி அவனைத் தூஷித்தார்கள். அவன் என்னிடத்தில் வந்து நமஸ்காரம் செய்து, "சுவாமி! உங்களுடைய மகிமையை அறியாமல் அபசாரம் செய்துவிட்டேன். சக்கிலியன் பக்கம் செய்த தீர்மானத்தை நான் இப்போதே மாற்றிவிடுகிறேன். பொழுது விடியும்படிக் கிருபை செய்ய வேண்டும்," என்று பிரார்த்தித்தான். மற்ற ஜனங்களும் "அந்தப்படிக் கிருபை செய்ய வேண்டும்," என்று என் காலில் விழுந்து, விழுந்து கும்பிட்டார்கள். நான் ஜனங்களைப் பார்த்து, "பொழுது விடிந்த உடனே, நீங்கள் குடியரசை நீக்கி, ஒரு அரசனை நியமித்துக்கொள்வதாக எனக்கு வாக்குத்தத்தம் செய்தால், நான் பொழுது விடியும்படிச் செய்கிறேன்," என்றேன். அவர்கள் அந்தப்படி வாக்குத்தத்தம் செய்தார்கள். கிரகணம் விடுகிற சமயம் நெருங்கிவிட்டதால், இனிமேல் நான் தாமதம் செய்தால், நான் சொல்லாமலேயே பொழுது விடிந்து போகும் என்று பயந்துகொண்டு, நான் உடனே ஒரு வெண்பா பாடினேன் :

"வாடு பயிர்க்குவரு மாமழைபோல் நைந்துருகி
நாடுமக வுக்குதவு நற்றாய்போல்—நாடு
முழுதே யழுதேங்க மூடுமிருள் நீங்கப்
பொழுதே விடிவாயிப் போது."

என் பாட்டு முடிந்த உடனே, கிரகணம் கொஞ்சங்கொஞ்சமாய் விலகி, வெளிச்சம் காண ஆரம்பித்தது. அப்போது அதிர்ஷ்டவசமாக மேகக் கூட்டங்கள் சூரியனை மறைத்துக் கொண்டபடியால், கிரகணம் விடுகிற சமாசாரம் ஜனங்களுக்குத் தெரியாது. கிரகணம் முழுதும் நீங்கின உடனே, சூரியன் ஜகஜ்

ஜோதியாய்ப் பிரகாசிக்க ஆரம்பித்தது. உடனே ஜனங்களுக்கு உண்டான சந்தோஷத்தையும், அவர்கள் எனக்குச் செய்த ஸ்தோத்திரங்களையும் நான் விவரிக்கவும் வேண்டுமா? அவர்கள் என்னை மட்டுமிதமில்லாமல் புகழ்ந்த பிற்பாடு, என்னைப் பார்த்து, " சுவாமி! உங்களுடைய உத்தரவுப்படி, நாங்கள் இன் றையத் தினமே ஒரு அரசனைத் தெரிந்துகொள்ளப் போகிறேம். நாங்கள் தேவாலயத்துக்குப் போய்ப் பிரார்த்தனை செய்து கொண்டு, பட்டத்து யானையைச் சிங்காரித்து அதன் கையிலே பூமாலையைக் கொடுத்து அனுப்புவோம். அந்த யானை யார் கழுத் திலே பூமாலை போட்டுத் தன் முதுகின்மேலே தூக்கி வைத்துக் கொள்ளுகிறதோ, அவரை அரசனுக நாங்கள் அங்கீகரித்துக் கொள்வது வழக்கமாய் இருக்கிறது. ஆகையால், அந்தப்படிச் செய்ய உத்தரவு கொடுக்க வேண்டும்," என்று சொல்லி, என் னிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு போய்விட்டார்கள்.

சூரியனைப் பிடித்த கிரகணம் நீங்கியும், என்னைப் பிடித்த பீடை நீங்காமையினுல் நான் காவற்கூடத்திலேயே இருந்தேன். அரசனை நியமிக்கிறதற்காகப் போன ஜனங்கள் உடனே தேவா லயத்துக்குச் சென்று, பிரார்த்தனை செய்த பிறகு, பட்டத்து யானை கையிலே பூமாலையைக் கொடுத்துவிட்டதாகவும், அது யாரோ ஒருவர் கழுத்திலே மாலையைப் போட்டுத் தன் முதுகின்மேலே தூக்கி வைத்துக்கொண்டதாகவும், ஜனங்கள் அவரை அரசராகத் தெரிந்துகொண்டதாகவும் அன்றையத் தினம் சாயங்காலத்தில் நான் கேள்விப்பட்டுத் திருப்தி அடைந் தேன். அந்த அரசருடைய ஊர், பெயர், ஜாதி முத லிய பூர்வோத்தரங்களும், குணுகுணங்களும் ஒருவருக்கும் தெரியவில்லை. ஆனுல், அவருடைய அதிரூப சௌந்தரியத்தைப் பற்றிப் புகழாதவர்கள் ஒருவரும் இல்லை. அன்றையத் தினம் சூரியன் அஸ்தமித்து இருட்டின பிறகு, சில சேவகர்கள் ஓடி வந்து, "புதிதாக வந்திருக்கிற அரசர், அநேக வழக்குகள் விசா ரணையாகாமல் வெகு காலமாய்ப் பாக்கியிருக்கின்றனவென்று கேள்விப்பட்டு, உடனே எல்லாரையும் அழைத்துக்கொண்டு வரும்படிக் கட்டளையிட்டார்," என்று தெரிவித்தார்கள்.

உடனே நாங்கள் எல்லாரும் புறப்பட்டுக் கொலு மண்டபத்துக்குப் போனோம். புது ராஜாவினுடைய மாதிரி தெரியாமையினால், எப்படித் தீர்மானம் செய்வாரோவென்று நான் பயந்து, அடி வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு போவது போலப் போனேன். அப்போது இரவுக் காலமாகவும், ஜனக்கூட்டமாகவும் இருந்தபடியால், அரசருடைய முகம் எனக்கு நன்றாகத் தெரியவில்லை. அவர் மிருதுவாகப் பேசுபவராக இருந்தபடியால், அவருடைய குரலும் நன்றாகக் கேட்கவில்லை.

ஒரு உத்தியோகஸ்தன் என்னுடைய வாதியான சக்கிலியன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்ட உடனே சக்கிலியன் சபை முன்னே வந்து, "இந்த மனுஷன் என்னுடைய ஜோட்டை வாங்கி உபயோகித்துக்கொண்டு, அதற்காக என்னைச் சந்தோஷப்படுத்துவதாக ஒப்புக்கொண்டவன், அந்தப்படிச் செய்யாததனால், என்னைச் சந்தோஷப்படுத்தும்படி உத்தரவு செய்ய வேண்டும்," என்று பிரார்த்தித்தான். நானும், என்னுடைய எதிர் வாதங்களைத் தெரிவித்தேன். அரசர் சற்று நேரம் மௌனமாயிருந்து, பிறகு சக்கிலியனை நோக்கி, "நாம் இப்போது அரசனாக வந்திருக்கிறோமே! உனக்கு எப்படி இருக்கிறது?" என்று வினவினார். அவன், "எனக்குச் சந்தோஷமாய் இருக்கிறது," என்றான். உடனே அரசர், "நீ சந்தோஷமாய் இருப்பதாக ஒப்புக்கொள்ளுகிறபடியால், ஜோட்டுக்காக அந்தச் சந்தோஷத்தை எடுத்துக்கொள்!" என்று தீர்ப்புக் கொடுத்தார்.

பிறகு ஒற்றைக்கண் குருடன் வந்து, "இவன் தன்னுடைய குருட்டுக் கண்ணைக் கொடுத்துவிட்டு, என்னுடைய நல்ல கண்ணை இரவல் வாங்கிக்கொண்டு போனவன் மறுபடியும் கொடாததனால், என்னுடைய நல்ல கண்ணை வாங்கிக்கொடுக்க வேண்டும்," என்றான். உடனே அரசர் அவனைப் பார்த்து, "நீ பிரதிவாதியினுடைய குருட்டுக் கண்ணை முந்தி வாங்கிக் கொண்டதாக ஒப்புக்கொள்ளுகிறபடியால், அந்தக் கண்ணைத் தோண்டி அவருக்குக் கொடுத்துவிடு. உன்னுடைய நல்லக் கண்ணைப் பற்றிப் பிற்பாடு தீர்மானம் செய்கிறோம்," என்றார்.

அவன், "குருட்டுக் கண்ணை எப்படித் தோண்டுவேன்?" என்றான். "அது உன்னால் கூடாத போனால் நாம் தோண்டும்படிச் செய்விக்கிறோம்" என்று சொல்லி, ஒரு குறடு கொண்டு வரும்படி அரசர் உத்தரவு கொடுத்தார். இதைக் கேட்ட உடனே அந்த ஒற்றைக் கண்ணன், "என்னைச் சும்மாவிட்டால் போதும்; எனக்கு நல்ல கண் வேண்டாம்!" என்று கதறிக் கொண்டு ஓடினான்.

என் மேலே வந்த இவ்வழக்குகள் எனக்கு அனுகூலமாக முடிந்தபடியால், நான் கரை காணாக் களிப்படைந்தேன். என்னுடைய வழக்குகள் முடிந்த பிற்பாடு, அரசர் ஜனங்களை நோக்கிச் சொல்லுகிறார்: "இப்போது நாம் விசாரணை செய்த துர்வழக்குகளினால் இந்த ஊர் எவ்வளவு கெட்ட நிலைமைக்கு வந்திருக்கிறது என்பதைக் கண்டுகொண்டோம். இப்படிப்பட்ட வழக்குகளை நாம் எந்த ஊரிலும் கேள்விப்பட்டதில்லை. இப்படிப்பட்ட வழக்குகளைக் கொண்டு வருகிறவர்கள் நம்மையும், நம்முடைய நியாய சபையையும் அவமானப் படுத்துகிறபடியால், அவர்களைத் தண்டிக்க வேண்டியது நம்முடைய கடமையாயிருக்கின்றது. ஆயினும், நமக்குப் பட்டாபிஷேகமான இந்த மங்கள தினத்தில் ஒருவரையும் தண்டிக்க நமக்கு மனமில்லாதபடியால், அந்த வழக்குக்காரர்களை இந்தத் தடவை மன்னிக்கிறோம். இனிமேல் இத்தன்மையான வழக்குகளை யாராவது கொண்டு வருவார்களானால், அவர்கள் தப்பாமல் தண்டிக்கப்படுவார்கள். தாவர ஜங்கமங்களை அநியாயமாக இழந்து போனவர்களும் அல்லது வேறு விதமான துன்பத்தை அடைந்தவர்களும் நம்மிடத்தில் வந்து முறையிட்டுக்கொண்டால், நாம் கிரமப்படி விசாரணை செய்து பட்சபாதமோ, தாட்சணியமோ இல்லாமல் தீர்மானம் செய்யச் சித்தமாய் இருக்கிறோம். இந்த ஊரிலே குடியரசு நிலைத்த பிற்பாடு, அக்கிரமம் நிலை பெற்று, தர்மம் குடியோடிப் போய்விட்டதாகத் தெரிய வருகிறது. நம்முடைய காலத்தில் தர்மம் தலையெடுக்கும்; அநியாயம் அதோகதியாய்ப் போகும். இதை நீங்கள் சிக்கிரத்தில் காண்பீர்கள்!"

இந்த உபந்நியாசத்தைக் கேட்ட உடனே, சாதுக்கள் எல்லாரும் பரம சந்தோஷம் அடைந்தார்கள். துஷ்டர்கள் எல்லாரும் கருடனைக் கண்ட பாம்புபோல அடங்கினார்கள். நான் இதுதான் சமயமென்று நினைத்து, என்னுடைய வஸ்திராபரணங்களைக் கவர்ந்துகொண்ட காவல் வீரர்களை நோக்கி, "நீங்கள் செய்த அக்கிரமங்களை நான் அரசனுக்குத் தெரிவிக்கப் போகிறேன்," என்று சொல்லி, என் காலை எட்டி வைத்தேன். அவர்கள் உடனே என்னை வழிமறித்துக்கொண்டு, "சுவாமி! உங்களுடைய சொத்துக்களைக் கொடுத்துவிடுகிறோம். எங்களுடைய செய்கையை அரசனுக்குத் தெரிவிக்க வேண்டாம்!" என்று பல்லைக் காட்டிக் கெஞ்சினார்கள். நான் அரசனிடத்துக்குப் போகாமல் திரும்பி, என்னுடைய உடைமைகளைக் கொடுக்கும் படிக் கேட்டேன். அவர்கள் என்னைப் பார்த்து, "சுவாமி! இந்த ஆடையாபரணங்கள் உங்களுக்கு ஒரு விஷயமா? பொழுது விடிவதும் விடியாமல் போவதுமே உங்களுடைய சுவாதீனத்தில் இருக்கும் போது, உங்களுடைய சக்திக்கு மேற்பட்டது யாது? நீங்கள் ஆகாயத்தை ஆடையாக்கி அணிந்து கொள்வீர்கள்; மண்ணையும் கல்லையும் ஆபரணமாக்கிப் பூண்டு கொள்வீர்கள். எங்களுக்குக் கொடுத்துவிட்ட ஆடையாபரணங்களை மறுபடியும் கேட்கலாமா?" என்றார்கள். நான் அவர்களைப் பார்த்து, "அவைகளை நான் உங்களுக்கு மனப்பூர்வமாய்க் கொடுத்திருந்தால், மறுபடியும் கேட்க மாட்டேன். அவைகளை நீங்களே கவர்ந்துகொண்டபடியால், மறுபடியும் கொடுக்க வேண்டும்," என்றேன். அவர்கள் என் சொத்துக்களைக் கொண்டு வருவதாகக் கூறி, வெளியே போய்ச் சற்று நேரத்துக்குப் பின்பு ஒரு மூட்டையைக் கொண்டு வந்து என் கையிலே கொடுத்து, என்னுடைய உடைமைகளெல்லாம் அதற்குள் இருப்பதாகச் சொல்லிப் போய்விட்டார்கள். அவர்களை நான் பயமுறுத்தி என்னுடைய சொத்துக்களை மறுபடியும் வாங்கிக்கொண்ட விஷயத்தில் என்னுடைய சாமர்த்தியத்தை நானே மெச்சிக்கொண்டேன்.

## 20. கனவல்ல—நனவுதான்!

நடுச் சாமத்தில் ராஜ சபை கலைந்தது. அரசன் முதலிய எல்லாரும் அவரவர்களுடைய இருப்பிடங்களுக்குப் போய்விட்டார்கள். அந்த ஊராரிடத்தில் வாயைக் கொடுத்தால் பாடாவிதியாய் வருகிறபடியால், இனிமேல் ஒருவரிடத்திலும் வாயைத் திறக்கிறதில்லை என்றும், பொழுது விடிகிறவரையில் எங்கேயாவது படுத்திருந்து, விடிந்தவுடனே அந்த ஊரை விட்டுப் போய்விடுகிறதென்றும் நான் நிச்சயித்துக்கொண்டேன். நான் கொலு மண்டபத்தை விட்டு வெளியே போவதற்கு முன், வஸ்திரத்தைத் தரித்துக்கொள்ளலாம் என்று நினைத்து, அந்தச் சேவகர்கள் கொடுத்த மூட்டையை அவிழ்த்தேன். வெங்காயம் உரிக்க உரிக்கத் தோலாயிருப்பது போல, அந்த மூட்டையை அவிழ்க்க அவிழ்க்கப் பழங்கந்தையாயிருந்ததேயல்லாமல் என்னுடைய ஆடைகளையும் காணேன்; ஆபரணங்களையும் காணேன். எனக்காக இத்தனை கந்தைகளை அந்தப் படுபாவிகள் எப்படிப் பொறுக்கிச் சேர்த்து வைத்திருந்தார்கள் என்பது எனக்குப் பெரிய ஆச்சரியமாய் இருந்தது. நமன் வாயில் அகப்பட்ட உயிர் திரும்பினாலும், அவர்களிடத்தில் அகப்பட்ட சொத்து மீளாதென்கிற உண்மை, அப்போதுதான் எனக்குத் தெரிந்தது.

நான் கொலு மண்டபத்தை விட்டு வெளியே போக யத்தனமாயிருக்கையில், ஒரு சேவகன் ஓடி வந்து, என்னைப் பார்த்து, "ஐயா! துஷ்டர்களுக்கு இந்த ஊர் வாசஸ்தானமாயிருப்பதால், இந்த நடு இரவில் நீங்கள் வெளியே போகாமல் கொலு மண்டபத்திலேயே படுத்துக்கொள்ளும்படி மகாராஜா உத்தரவு செய்தார்கள்," என்று சொல்லிப் போய்விட்டான். நான் அரசருடைய காருணியத்தை வியந்துகொண்டு, அவர் தீர்க்காயுசாயிருக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்தேன். பிறகு, அந்த மண்டபத்தில் ஒரு மூலையில் பூமியே புஷ்ப மெத்தையாகவும், என் கையே தலையணையாகவும் வைத்துக்

கொண்டு, படுத்துக்கொண்டேன். படுத்த உடனே அந்த மண்டபத்தில் புத்திர பௌத்திர பிரபௌத்திரர்களுடன் தலைமுறை தலைமுறையாய் வாழ்ந்துகொண்டிருந்த மூட்டுப் பூச்சிகள் வந்து, என்மேலே ஏறி, கவசம் போட்டது போல மொய்த்துக்கொண்டன. அவைகள் உபத்திரவத்தினால் எனக்கு நல்ல நித்திரையில்லாமல் பாதி நித்திரையாய்க் கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தேன்.

படுத்துச் சற்று நேரத்திற்குப் பின்பு, அந்தக் கொலு மண் டபத்துக்கும் ராஜ மாளிகைக்கும் மத்தியிலிருந்த வாசற்படிக் கதவு படீரென்று திறந்த சப்தம் கேட்டது. என்ன ஆபத்து வருமோவென்று பயந்துகொண்டு, நான் கண்களை இறுக மூடிக் கொண்டேன். சற்று நேரத்துக்குப் பின்பு யாரோ வந்து என்னை மிருதுவாகத் தட்டினார்கள். நான் முழுக் கண்ணையும் திறவா மல், பாதிக் கண்ணைத் திறந்து பார்த்தேன். ஞானம்பாள் வந்து நிற்பது போலத்தோன்றிற்று. 'இந்த இடத்துக்கு ஞானம்பாள் எப்படி வரக் கூடும் ? நாம் கனவுதான் காண்கிறோம்' என்று நினைத்து, மறுபடியும் கண்ணை மூடிக்கொண்டேன். அவள் என்னைப் பிடித்துத் தூக்கி, உட்கார வைத்து, “ஐயோ ! அத் தான் ! உங்களை இந்தப் பஞ்சைக் கோலத்தில் பார்க்க நான் என்ன பாவம் செய்தேன் ?” என்று சொல்லி அழுதாள். நான் கண்ணை விழித்து, “நீ யார் ?” என்றேன். அவள், “என்னை இவ்வளவு சீக்கிரத்தில் மறந்துவிட்டீர்களா ? நான் ஞானம்பாள் அல்லவா ?” என்றாள். நான் அவளைப் பார்த்து, “நான் தூங்கு கிறேனா விழித்திருக்கிறேனா என்று நிச்சயம் தெரியவில்லை. அந்த நிச்சயம் தெரியும்பொருட்டு நீ என்னைக் கிள்ளு !” என்றேன். அவளை நான் பூரண அன்புடன் அங்கீகரிக்கவில்லை என்கிற கோபத்தினாலும், என்னுடைய நித்திரை மயக்கத்தைத் தெளி விக்க வேண்டுமென்கிற எண்ணத்தினாலும் அவள் என்னைப் பலமாகக் கிள்ளினாள். உடனே நான் திடுக்கென்று விழித்துக் கொண்டேன். எனக்கு நித்திரை மயக்கம் தெளிந்து, அவள் ஞானம்பாள் என்று நிச்சயம் தெரிந்த உடனே, அவளைக் கட்டிக் கொண்டு சிறு பிள்ளை போல நெடுநேரம் கதறினேன். அவளும் என்னுடன் புலம்பின பிறகு, என்னைப் பார்த்து, “உங்களை

இந்தக் கோலத்தோடு நான் ஒரு நாளும் பார்த்ததில்லை. உங்களைப் பார்க்கப் பார்க்க என் வயிறு பற்றி எரிகின்றது. நீங்கள் ஊரைவிட்டுப் புறப்பட்டது முதல் நடந்த சங்கதிகளையெல்லாம் தெரிவிக்க வேண்டும், " என்ருள்.

நான் வேட்டை பார்க்கப் புறப்பட்டது முதல் நடந்த ஒவ்வொரு விஷயத்தையும் தெரிவித்ததும் தவிர, கடைசியாகப் புது அரசர் என்னை விடுதலை செய்த விவரத்தையும் சொல்லி, "அந்த அரசருக்குக் கடவுள் பூரண ஆயுசைக் கொடுக்கவேண்டும். அவராலேதான் உன்னை இப்பொழுது நான் காணும்படியான பாக்கியம் கிடைத்தது," என்றேன். ஞானம்பாள் என்னைப் பார்த்து, " உங்களை விடுதலை செய்த புது அரசன் நான்தான், " என்ருள். இதைக் கேட்டவுடனே, நான் ஆச்சரியம் கொண்டு, பிரமித்து, நான் மறுபடியும் தூங்குகிறேனே, விழித்திருக்கிறேனேவென்று என் கண்ணைத் தடவிப் பார்க்க ஆரம்பித்தேன். அவள் என்னைப் பார்த்து, " உங்களுடைய புத்தியைச் சிதற விட வேண்டாம். நான் சொல்லுவது வாஸ்தவந்தான். எல்லாக் காரியங்களையும் விவரமாகச் சொல்லுகிறேன் ; வாருங்கள்" என்று சொல்லி, என் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு, அரண்மனைக்குப் போனுள்.

## 21. புருஷனைத் தேடப் போய் அரசன் ஆனேன்!

அரண்மனையில் ஞானும்பாள் என்னை ஆசனத்தில் உட்கார வைத்து தன்னுடைய வரலாறுகளைச் சொல்லத் தொடங்கினாள் :

"நீங்கள் வேட்டை பார்க்கப் போன பிறகு, கானகத்தில் என்ன ஆபத்து நேரிடுமோவென்று நான் சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கும்போது நீங்களும், நீங்கள் ஏறிய யானையும், யானைப் பாகனும் போன வழி தெரியவில்லையென்றும், நீங்கள் ஆதியூருக்குத் திரும்பி வந்துவிட்டீர்களாவென்று விசாரித்துக் கொண்டு வரும்படிக் கனகசபை அண்ணன் உத்தரவு கொடுத்த தாகவும் சிலர் வந்து தெரிவித்தார்கள். நீங்கள் ஆதியூருக்குத் திரும்பி வராமையினால், தேவராஜப் பிள்ளையும், இன்னும் அநேகரும் உடனே புறப்பட்டுக் கானகத்துக்குப் போய்த் தேடியும், உங்களுடைய செய்தி ஒன்றும் தெரியவில்லை. வேடர்கள் வேட்டையாடிக்கொண்டிருந்த இடத்துக்கும் யானை நின்ற இடத்துக்கும் அதிக தூரமாகையால், யானை வீறிட்டுக்கொண்டு போன சப்தம் மட்டும் தங்கள் காதில் விழுந்ததாகவும், அந்த யானை எந்தத் திசை நோக்கி நடந்ததென்பது தங்களுக்குத் தெரியாதென்றும் வேடர்கள் தெரிவித்தார்கள். வேட்டையாடுவதை நிறுத்திவிட்டு, வேடர்களும் மற்றவர்களும் அந்தக் காட்டில் நுழையக்கூடாத இடங்களெல்லாம் நுழைந்து தேடியும், நீங்கள் அகப்படவில்லை. தேவராஜப் பிள்ளை, கனகசபை அண்ணன் முதலானவர்கள் வீட்டுக்குத் திரும்பி வராமல், அந்தக் காட்டிலே கூடாரம் அடித்துக்கொண்டு பலநாள் வரைக்கும் தேடியும் தாங்கள் அகப்படவில்லை. நான் சித்தம் கலங்கி, தேக ஸ்மரணை தப்பிப் பைத்தியம் பிடித்தவள் போலப் புலம்பிக் கொண்டு திரிந்தேன். தேவராஜப் பிள்ளை முதலானவர்கள் எனக்கு ஆறுதலாகச் சொன்ன வார்த்தைகளெல்லாம் பயனற்றவைகளாகிவிட்டன. நான் சரியான ஆகாரமும், உறக்கமும்

இல்லாமல் எப்போதும் அழுதுகொண்டு, வட திசையை நோக்கிப் பார்த்த வண்ணமாயிருந்தேன்.

"ஒரு நாள் இராத்திரி நடுச் சாமத்தில் நான் மேல் மாடியில் உட்கார்ந்துகொண்டு, சாளரத்தின் வழியாக வடக்கு நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, தூரத்தில் ஒரு கரிய மேகம் நடந்து வருவது போல, ஒரு யானையானது பாகனுமில்லாமல், அம்பாரி முதலிய அலங்காரமுமில்லாமல் வெறுமையாய் நடந்து வந்தது. அந்த யானை சமீபத்தில் வந்த உடனே நிலா வெளிச்சத்தில் நான் அதை உற்றுப் பார்த்தேன். அதுதான் உங்களை மோசம் செய்த பட்டத்து யானையென்று எனக்கு விளங்கிற்று. அந்த யானை வழக்கமாய்க் கட்டப்படுகிற கொட்டத்துக்குள்ளே வந்து, தானே நுழைந்துகொண்டது. அப்போது எல்லாரும் நல்ல நித்திரையில் இருந்தபடியால், அந்த யானை வந்தது என்னைத் தவிர வேறொருவருக்கும் தெரியாது. அந்த யானையைப் பார்த்த உடனே எனக்குச் சகிக்கக் கூடாத சஞ்சலம் உண்டாகி, நான் ஒருவருக்கும் தெரியாமல் எழுந்து, அது நின்ற இடத்துக்குப் போனேன். அது என்னைப் பார்த்த உடனே தன்னுடைய துதிக்கையை என்மேல் நீட்டி, மிருதுவாகத் தடவிற்று. நான் உடனே அதைப் பார்த்து, "ஐயோ! துஷ்ட மிருகமே! என்னுடைய பர்த்தாவை என்ன செய்தாய்? எந்தத் திக்கிலே கொண்டு போய் விட்டாய்? அவரைக் கொன்றுவிட்டாயோ? அல்லது உயிரோடே விட்டு விட்டாயோ? ஒன்றும் தெரியவில்லையே! என் பர்த்தா இருக்கும் இடத்தைக் காட்டாயா? என் துன்பத்தை ஓட்டாயா?" என்று பல விதமாகச் சொல்லிப் புலம்பினேன். என்னுடைய கண்ணீர்த் துளிகள் யானையின் துதிக்கையை நனைத்துவிட்டன. உடனே அது தன்னுடைய துதிக்கையை என்னுடைய இடுப்பிலே சுற்றி, என்னை அதிமிருதுவாகத் தூக்கி, தன் முதுகின்மேலே வைத்துக்கொண்டு வெளியே நடந்தது. ஆரம்பத்தில் எனக்குப் பயம் உண்டான போதிலும், யானை வட திசையை நோக்கி நடந்தபடியால், நீங்கள் இருக்கிற இடத்திலே என்னைக் கொண்டு போய் விட்டாலும் விடுமென்று நான் மனத்திடம் செய்துகொண்டேன். அப்போது நடு இரவாகவும், எல்லாரும் தூங்குகிற சமய

மாகவும் இருந்தபடியால், யானை என்னைத் தூக்கிக்கொண்டு போனது ஒருவருக்கும் தெரியாது.

"யானை உள்நகர் புறநகர் எல்லாம் கடந்து, கானகத்துக்குள் நுழைந்து, மரம் செடிகளெல்லாம் நெறு நெறென்று சாய்த்துத் தள்ளிக்கொண்டு, பல காடுகள், ஆறுகளெல்லாம் தாண்டி, வட திசையை நோக்கி இரவும் பகலுமாகக் கடுமையாக நடந்தது. நான் வழியிலிருக்கிற மரக் கனிகளை உண்டு பசி தீர்த்துக்கொண்டு போனேன். யானை பல நாள் நடந்த பிறகு, ஒரு பெரிய மலை அடிவாரத்தில் வந்து சேர்ந்து, அந்த மலையோரத்தில் அசையாமல் நின்றது. நான் அந்த மலையில் ஒரு பக்கத்தில் அம்பாரி உடைந்து கிடப்பதைக் கண்டு, யானையை விட்டுத் தாண்டி, அந்த மலைமேலே தொற்றிக்கொண்டேன். அந்த அம்பாரி கிடந்த இடத்துக்குக் கொஞ்ச தூரத்தில் சில ஆடைகள் கிடந்தன. அவைகளை ஒரு நீளக் கழியினால் இழுத்து என் கையிலே எடுத்துப் பார்க்க, அவைகள் உங்களுடையனவாக இருந்தபடியால், எனக்கு உண்டான மனோவிசாரம் இவ்வளவென்று சொல்ல ஒண்ணாது. அவைகளை நான் கையில் எடுத்துக்கொண்டு மலைமேல் ஏறும்பொழுது உங்களுடைய பெயர் எழுதப்பட்டிருந்த மரங்களையும் பார்த்தேன்; அந்த மரங்களையே வழி காட்டியாக வைத்துக்கொண்டு நடந்து, மலையின் உச்சியில் வந்து சேர்ந்தேன். அந்த மலைக்கு வட புறத்தில் வெட்டப்பட்டிருந்த படிகளைக் கண்ட உடனே, அவைகளின் வழியாக நீங்கள் இறங்கிப் போயிருக்கலாமென்று நினைத்து, நானும் இறங்கி வருகிறதென்று நிச்சயித்துக்கொண்டேன்; ஆனால், பெண் வடிவமாய்ப் போகிறது எப்போதும் ஆபத்தை விளைவிக்குமானதால், ஆண் வேடம் தரித்துக்கொண்டு போவது உத்தமம் என்று நினைத்து, இடையில் தரித்திருந்த வெள்ளைச் சேலையை இரண்டாகக் கிழித்து, இடுப்பு வேஷ்டியாகவும் அங்க வஸ்திரமாகவும் உபயோகித்துக்கொண்டு, உங்களுடைய சட்டையையும் முண்டாசையும் தரித்துக்கொண்டேன். இப்படியாக ஆண் வேடத்துடன் படி வழியாய் இறங்கி, அடிவாரத்தில் வந்து சேர்ந்தேன்.

"நான் வந்து சேர்ந்த போது, அங்கிருந்த பட்டணத்து ஜனங்களெல்லாரும் மலை அடிவாரத்தில் ஏகமாய்க் கூட்டம் கூடியிருந்தார்கள். அவர்களால் விடப்பட்ட யானையானது என்னிடத்தில் வந்து, என் கழுத்தில் பூமாலை போட்டு, என்னைத் தூக்கித் தன் முதுகின்மேலே வைத்துக்கொண்டது. உடனே ஜனங்கள் எல்லாரும் என்னை நோக்கி, "மகா ராஜாவே! நீங்கள் தீர்க்காயுசாயிருக்க வேண்டும். நாங்கள் ராஜாவை நியமிக்க வேண்டியதற்காக, யானையின் கையிலே பூ மாலையைக் கொடுத்து அனுப்பினோம். அது உங்களுடைய கழுத்திலே மாலையைப் போட்டபடியால், இனி நீங்கள்தான் எங்களுக்கு மகாராஜா ; நாங்கள் உங்களுக்குப் பிரஜைகள். நீங்கள் எங்களுக்குப் பிதா ; நாங்கள் உங்களுக்குப் பிள்ளைகள்," என்று சொல்லி, என்னை நமஸ்கரித்தார்கள். கூத்து பார்க்கப் போன இடத்திலே பேய் பிடித்தது போல, புருஷனைத் தேடி வந்த இடத்தில் இப்படிப்பட்ட சகட யோகம் வந்ததேயென்று நான் திகைத்து, ராஜாங்கம் வேண்டாமென்று நிராகரிக்க எண்ணங்கொண்டேன். ஆனால், நான் வேண்டாமென்றாலும் ஜனங்கள் என்னை விடமாட்டார்கள் என்கிற பயத்தினாலும், நான் அரசனாயிருந்தால் நீங்கள் இருக்கிற இடத்தை அநாயாசமாய்க் கண்டு பிடிக்கலாம் என்கிற நம்பிக்கையினாலும் சும்மா இருந்துவிட்டேன்.

"பிறகு அவர்கள் என்னைப் பட்டணப் பிரதட்சணம் செய்வித்து, அரண்மனைக்குக் கொண்டு போய் மகுடம் சூட்டினார்கள். அப்போது ஒரு பக்கத்தில் பரத நாட்டியமும், ஒரு பக்கத்தில் மேள வாத்திய முழக்கமும், ஒரு பக்கத்தில் சங்கீத கானமும், ஒரு பக்கத்தில் பிராமணர்களுடைய வேத கோஷமும், ஒரு பக்கத்தில் வித்வான்களுடைய ஸ்தோத்திரப் பாடல்களும், ஒரு பக்கத்தில் ஆசியக்காரர்களுடைய விகடங்களும் கூடி எனக்குத் தலை வேதனையாய்ப் போய்விட்டது. அந்த ஆரவாரங்களெல்லாம் போதுமென்றும், நான் ஏகாந்தமாயிருக்க விரும்புகின்றேன் என்றும் நான் ஆயிரம் தரம் தெரிவித்த பிறகு, அவர்கள் ஒருவர் ஒருவராய்த் தொலைந்தார்கள். அவர்கள் தொலைந்ததும் ஆயிரம் பேர் என்னைச் சுற்றிக்கொண்டு, பங்காப் போடு

கிறவர்களும், கவரி வீசுகிறவர்களும், குடை பிடிப்பவர்களும், படிக்கம் ஏந்துகிறவர்களும், அடைப்பம் ஏந்துகிறவர்களும், பன்னீர் தெளிப்பவர்களும், கந்தப் பொடி இறைப்பவர்களும், பூ மழை பொழிபவர்களும், கட்டியங்கூறுகிறவர்களும், வாழ்த்து கிறவர்களும், இன்னும் அநேக வித கோலாகலம் செய்கிறவர் களுமாயிருந்தார்கள். நான் அரண்மனையைச் சேர்ந்த சிங்கார வனத்துக்காவது போய், சற்றுநேரம் ஏகாந்தமாயும் அமரிக்கை யாயும் இருக்கலாம் என்று நினைத்துப் புறப்பட்டேன். அப் பொழுதும் என்னை நூறு பேர் தொடர்ந்து வந்தார்கள். நான் உடனே இதற்குப் பரிகாரம் தேட வேண்டுமென்று நினைத்து, அவர்களை நோக்கி, "எந்தத் தேசத்திலும் ராஜாக்களுக்கு ஸ்திரீ கள் பணிவிடை செய்வது வழக்கமாயிருக்கின்றது. இந்த ஊரில் அந்த வழக்கம் ஏன் அனுஷ்டிக்கப்படவில்லை? இது ஸ்திரீகள் இல்லாத நகரமா?" என்று கேட்டேன். உடனே அவர்கள், "மகா ராஜாவே! உங்களுடைய அபிப்பிராயம் தெரியாமையினால், நாங் கள் உங்கள் பணிவிடைகளைச் செய்ய ஆரம்பித்தோம். கணக்கில் லாத ஸ்திரீகள் உங்களுடைய ஊழியங்களைச் செய்யச் சித்தமாய்க் காத்துக்கொண்டிருக்கிறார்கள்," என்றார்கள். அவர்கள் நான் ஸ்திரீலோலன் என்றும், கோலாகலப் புருஷன் என்றும் எண் ணிக்கொண்டு, உடனே புறப்பட்டுப் போய் நூறு ஸ்திரீகளை அனுப்பினார்கள். நான் உட்கார்ந்திருக்கும்போதே சில ஸ்திரீகள் எனக்குக் கால் பிடிக்கவும், சிலர் கை பிடிக்கவும், பல ஸ்திரீகள் உடம்பெல்லாம் தடவிவிடவும் யத்தனித்தார்கள். நான் அவர்களை வரவழைத்தது, சணப்பன் வீட்டுக் கோழி தானே விலங்கில் மாட்டிக்கொண்டது போல ஆயிற்று. ஏனென் றால், அந்தப் புருஷர்கள் என் சமீபத்தில் வரப் பயந்துகொண் டிருந்தார்கள். இந்த ஸ்திரீகளோ என்றால், நிர்ப்பயமாக என்னை நெருங்கித் தொட ஆரம்பித்தார்கள். அவர்களை நான் கடுகடுத்துக்கொண்டு, "என்னுடைய உத்தரவில்லாமல் என்னை யாராவது தொட்டாலும், கிட்ட நெருங்கினாலும் அவர் கள் சிரச்சேதம் செய்யப்படுவார்கள்," என்று அச்சுறுத்தினேன்.

"ஸ்நானம் ஜபம் முதலிய நித்திய காரியங்கள் முடிந்த பிற்பாடு, நான் அமுது செய்வதற்காகப் போஜன சாலைக்

குள் நுழைந்தேன். அங்கே எனக்கு அமுது படைக்கிறதற்கு முன், இரண்டு பேருக்கு இலேயில் அமுது படைக்கப்பட்டு, அவர்கள் எனக்கு முந்திப் புசிக்க ஆரம்பித்தார்கள். நான் ஆச்சரியம் அடைந்து, "அவர்கள் யார்," என்று வினவினேன். உடனே மடைப்பள்ளி விசாரணைக்கர்த்தர்கள் என்னை நோக்கி, "மண்டலாதிபதியே! அந்த இருவருக்கும் 'உண்டு காட்டி கள்' என்று பெயர். அவர்களை விஷ பரீட்சகர்கள் என்றும் சொல்லலாம். மகாராஜாவினுடைய உணவில் யாராவது சத்து ருக்கள் விஷம் கலக்கக் கூடுமாகையால், அதைப் பரீட்சிப்பதற் காக, அந்த இருவருக்கும் சாதம் படைப்பதும், அவர்கள் முந் திப் புசிப்பதும் வழக்கம். அவர்கள் போஜனம் செய்து, இரண்டு நாழிகைக்குப் பிறகு, அவர்களுக்கு விஷ உபத்திரவம் இல்லை யென்று தெரிந்த பிறகுதான், மகாராஜா சாப்பிட வேண்டும்," என்றார்கள். எனக்குத் தாளக்கூடாத பசியாயிருந்தாலும், விஷ சோதனை செய்வதற்காக நான் வெகு நேரம் வரையில் அன்னத் தைத் தொடாமல் உட்கார்ந்திருந்தேன்.

"சகல துன்பங்களும் தீர்ந்து போய்விட்டபடியால், பிறகு அமரிக்கையாய்ப் புசிக்கலாம் என்று நினைத்து, நான் சாதத்தை அள்ளி வாயில் வைத்தேன். உடனே இரண்டு வைத்தியர்கள் என் முன்பாக நின்றுகொண்டு, "மகாராஜா! ராஜேந்திரா!! அந்தப் பதார்த்தம் வாயு; இந்தப் பதார்த்தம் சூடு; அந்தக் கறி பித்தம்; இந்தக் கறி சீதளம்," என்று சொல்லி, அநேக பதார்த் தங்களை நான் புசிக்காதபடித் தடுக்க யத்தனித்தார்கள். நான் அவர்களுடைய வார்த்தைகளைக் காதிலே வாங்கிக்கொள்ளாமல் எனக்கு இஷ்டமான பதார்த்தங்களையெல்லாம் பரிபூரணமாக உண்டு, பசி தீர்த்துக்கொண்டேன். பிறகு நான் சுயம்பாகி களைப் பார்த்து, "இந்த வைத்தியர்கள் கறிகளுக்கெல்லாம் குற்றம் சொல்லுகிறபடியால், அவர்கள் சாப்பிடும்போது அவர் களுக்குக் கறிகள் படைக்காமல், தண்ணீரும் சாதமும் படை யுங்கள்," என்று கட்டளையிட்டேன்.

"நான் சாப்பிட்ட பிறகு நடந்த உபசாரங்களும் அதிகம். அந்த உபசாரங்களை எல்லாம் நான் அபசாரங்கள் என்றே

நினைத்தேன். நான் ராஜாவாயிருந்து பட்டபாடுகள் நீங்கள் காவற்கிடங்கில்கூடப் பட்டிருக்கமாட்டீர்கள்!

" 'ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கண்' என்பது போல, நான் பட்ட உபத்திரவங்களின் மத்தியில் உங்களை நான் மறக்கவில்லை. இந்த ஊரில் என்ன விசேஷமென்றும், யாராவது அன்னியர்கள் வந்திருக்கிறார்களாவென்றும் நான் பொதுவாக வேவுகாரர்களை விசாரித்த போது, அவர்கள், "ஒரு அன்னிய தேசத்தார் வந்திருக்கிறார். அவர்மேலே பல துர்வழக்குகள் வந்திருக்கின்றன. அவர் பொழுதை விடியச் சொன்னால் விடிகின்றது; விடிய வேண்டாமென்றால் விடிகிறதில்லை," என்றார்கள். அவர்கள் சொன்ன அந்த அடையாளங்களைக்கொண்டு, நீங்கள்தானென்று நிச்சயித்து, உடனே உங்களையும், மற்றவர்களையும் விசாரணைக்குக் கொண்டுவரும்படி நான் உத்தரவு செய்தேன். அந்த விசாரணை முடிந்த பிறகு, நீங்கள் கொலு மண்டபத்தைவிட்டு அப்பால் போக வேண்டாமென்று ஒரு சேவகன் மூலமாக நான்தான் உங்களுக்குச் சொல்லி அனுப்பினேன்."

இந்த வரலாறுகளையெல்லாம் கேட்ட உடனே, எனக்கு உண்டான ஆச்சரியம் அளவு கடந்து போய்விட்டது.

## 22. ராஜ்ய பரிபாலனம்

இவ்வாறு நானும் ஞானம்பாளும் எங்களுடைய துயரங்களை ஒரு வருக்கொருவர் சொல்லி மனம் தேறினேம். பிறகு ஞானம் பாள் என்னைப் பார்த்து, " நீங்கள் இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டு பிடிப்பதற்குச் சாதகமாய் இருக்கும் என்று நினைத்தே, நான் இந்த ராஜ்ய பாரத்தை வகிக்க ஒப்புக்கொண்டேன். இப் போது என்னுடைய மனோரதம் நிறைவேறி, உங்களைக் காணும் படியான பெரும்பேறு கிடைத்துவிட்டதால், இனி எனக்கு இந்த ராஜ்ய பாரம் வேண்டுவதில்லை. எனக்கு நீங்களே ராஜா ; நானே உங்களுக்குக் குடி. எனக்கு நீங்களே எசமான் ; நான் உங்க ளுடைய ஊழியக்காரி. நான் உங்களுடைய ஊழியத்தை விட்டு விட்டு, ராஜாங்கத்தை வகிப்பது முறையல்ல. அன்றியும், அர சாட்சி செய்யத் தகுந்த யோக்கியதையும் என்னிடத்தில் இல்லை. ஆகையால், ஒருவருக்கும் தெரியாமல், நாம் இந்த ஊரை விட் டுப் போய்விடுவதே உத்தமம்," என்றாள்.

நான் அவளைப் பார்த்து, " இந்த ஊர் சில காலமாக அரசன் இல்லாமல் அராஜரீகமாய் இருப்பதால், துஷ்டர்கள் அதிகரித்து, சாதுக்கள் எல்லாரும் ஆலையில் அகப்பட்ட கரும்பு போலத் துன்பப்படுகிறார்கள். இதை நாம் அநுபவம் மூலம் தெரிந்திருந் தும், அந்தச் சாதுக்களைக் கைவிட்டுப் போவது தர்மமா? அன்றி யும், நீ மகாராணியாய் இருப்பதும், உனக்கு நான் கணவனா யிருப்பதும் எனக்கு எவ்வளவோ மேன்மை. அந்த மேன் மையை இழந்துவிட எனக்குச் சம்மதமில்லை," என்றேன்.

அதற்கு ஞானம்பாள், " ராஜ்ய பாரத்தை வகிப்பது எனக் குச் சம்மதமில்லாமல் இருந்தாலும், அது உங்களுக்குப் பிரிய மாய் இருக்கிறபடியால், உங்களுடைய சித்தப் பிரகாரம் நடக்கக் காத்திருக்கிறேன். பெரிய மலையைத் தூக்கித் தலைமேல் வைத் துக்கொண்டது போல, ராஜாங்க பாரத்தை நான் வகித்துக்

கொண்டபடியால், அதை நான் தாங்கும்படி நீங்களும் எனக்கு உதவி செய்ய வேண்டும். ஏனென்ருல், அரசு செலுத்துவது நம் முடைய வீட்டுக் கிள்ளுக் கீரை அல்ல. உலகத்திலுள்ள சகல தொழில்களிலும், அதிகாரங்களிலும், ராஜாதிகாரம் எப்படி மேலானதாய் இருக்கிறதோ அப்படியே அதைச் சேர்ந்த வேலை களும் அபாரமாய் இருக்கின்றன.

"ராஜ பதவி எல்லாருடைய அந்தஸ்துக்கும் மேற்பட்டதாய் இருப்பது போலவே, அரசன் நற்குணங்களிலும், புத்தியிலும், சாமர்த்தியங்களிலும் மற்றவர்களுக்கு மேலானவனுய் இருக்க வேண்டும். அப்படி இல்லாவிட்டால், அவனை யார் மதிப்பார் கள் ? சூரியன் தன்னுடைய ஒளியினுல் எல்லாப் பொருள்களை யும் பிரகாசிக்கச் செய்வது போல அரசனும் தன்னுடைய நற் குணங்களால் குடிகளுடைய குணம் திருந்தும்படிச் செய்ய வேண்டும். அரசனுக்குச் செங்கோலின் பலமே பலம் அல்லா மல், ரத கஜ துரக பதாதிகள் பலம் அல்ல. செங்கோல் கோணு மல் அரசாளுகிற மன்னனுக்கு நாடெல்லாம் அரணுனதால், வேறு அரண் வேண்டுவது இல்லை. குடிகள் எல்லாம் அவனுக்குப் படையாகையால், வேறு படை வேண்டுவது இல்லை. அவர்க ளுடைய மனங்கள் எல்லாம் அவனுக்கு வாசஸ்தலம் ஆனதால் வேறு அரண்மனை வேண்டுவது இல்லை. அந்த அரசனுக்குச் சத்துருக்களும் இல்லை," என்று கூறினுள். மேலும் அவள் அரச னுக்கு இருக்க வேண்டிய குணுகுணங்கள், கடமைகள், அவன் அரசாங்கம் நடத்த வேண்டிய முறை முதலிய விஷயங்களைப் பற்றி விஸ்தாரமாக, நாழிகை சென்றதுகூடத் தோன்ருமல் தேன் மழை பொழிவது போலப் பிரசங்கித்தாள்.

நான் அளவற்ற ஆச்சரியம் அடைந்து, அவளைப் பார்த்து " நீ இவ்வளவு கையிருப்பு வைத்துக்கொண்டு அரசாளத் தெரி யாது என்று சொன்னுயே! இப்போது உலகத்தில் அரசு செய் கிறவர்களுக்கு, உனக்குத் தெரிந்த காரியங்களில் நூற்றில் ஒரு பங்கு கூடத் தெரியுமா ?" என்றேன். அவள் என்னைப் பார்த்து " வார்த்தைக்குத் தரித்திரம் உண்டா ? வாய்ப்பந்தல் போட யாராலே கூடாது ? அரசன் நடக்க வேண்டிய நெறிகளைப் பற்றி

நான் வாக்குச் சாதுரியமாகப் பேசின போதிலும், பேசினபடி நடப்பது அல்லவோ கஷ்டம் ?'' என்ருள்.

இவ்வாறு நாங்கள் சம்பாஷித்துக்கொண்டிருக்கும்போது உதய பேரி முதலிய வாத்தியங்கள் முழங்கினபடியால், விடியற் காலம் ஆய்விட்டதென்று தெரிந்துகொண்டோம். உடனே ஞானம்பாள் எழுந்து, அறைக்குள்ளே போய், தன் பெண் ரூபத்தை மாற்றி ஆண் ரூபம் தரித்துக்கொண்டு என் முன் பாக வந்தாள். அப்பொழுது அவள் சாக்ஷாத் புருஷ வடிவ மாகவே இருந்தபடியால், அவள் பெண் என்பதை மறந்துவிட்டு, ' இந்த மகா புருஷனை மணம் செய்வதற்கு நாம் பெண்ணுய்ப் பிறக்காமல் போய்விட்டோமே !' என்று சற்று நேரம் நான் மதி மயங்கி, பிற்பாடு தெளிந்துகொண்டேன்.

நான் அருணேதயம் ஆவதற்கு முன் ஞானம்பாளைப் பார்த்து, " நீ மகாராஜாவாய் இருப்பதால், உன்னோடு கூட நான் சரிசமானமாக இருப்பதைப் பார்க்கிறவர்கள் விபரீதமாய் எண்ணிக்கொள்வார்கள். நான் இன்னுனென்று உண்மை யைத் தெரிவிப்பதும் கூடாத காரியமாய் இருக்கின்றது. நீயும் பொய் சொல்ல மாட்டாய். இந்தச் சங்கடங்களையெல்லாம் யோசிக்கும்போது, நான் ஒரு இடத்தில் தனிமையில் இருப்பது உத்தமம் என்று நினைக்கிறேன்,'' என்றேன். அவள் என்னைப் பார்த்து, "மத யானை ஏறியும் திட்டி வாசலில் நுழைவது போல, நமக்கு ராஜ பட்டம் கிடைத்தும், நாம் ஒருவருக்குப் பயப்பட வேண்டுமா ? உங்களை மேலான இடத்தில் வைத்து, நான் கை கட்டிச் சேவிக்காமல், இந்த ராஜாங்க நிமித்தம் உங்களை எனக்குச் சமானமாக வைத்துக்கொள்ளும்படி நேரிட்டிருப்பது, எனக்கு எவ்வளவோ வருத்தமாய் இருக்கிறது. நீங்கள் அதைக்கூட ஜனங்கள் வித்தியாசமாய் நினைப்பார்களென்று சொல்லுகிறீர்கள். ஜனங்கள் எப்படி வேண்டுமானுலும் எண்ணிக்கொள்ளட்டும். நான் இனிமேல் உங்களை ஒரு நிமிஷங்கூடப் பிரிகிறதில்லையென்று பிரதிக்ஞை செய்துகொண் டிருக்கிறேன். நான் இதற்கு முன் உங்களைப் பிரிந்து பட்ட துன்பம் போதாதா ? இன்னமும் பிரிய வேண்டுமா ? நீங்கள்

இன்னுரென்று மற்றவர்களுக்கு உண்மையைத் தெரிவிப்பது அசாத்தியமாய் இருந்தாலும் நான் பொய்யும் சொல்லாமல், தக்கபடி சொல்லிச் சமாளித்துக்கொள்ளுவேன்,'' என்ருள். நான் ஞானம்பாளைப் பார்த்து, “ஓ! மகாராஜாவே! உங்களுடைய கட்டளைப் பிரகாரம் நடக்கச் சித்தமாய் இருக்கிறேன்,'' என்று சொல்லிச் சிரித்தேன்.

அன்றைய தினம் பட்டாபிஷேகமான மறு நாளானதால், மந்திரி, பிரதானி முதலானவர்கள் வந்து தரிசன மாலில் ராஜ பேட்டிக்குக் காத்திருப்பதாக உத்தியோகஸ்தர்கள் தெரிவித்தார்கள். நானும், ஞானம்பாளும் உயர்ந்த வஸ்திராபரணங்களைத் தரித்துக்கொண்டு, தரிசன மாலுக்குப் போய், சிங்காசனங்களில் வீற்றிருந்தோம். நான் ராஜாவோடுகூடச் சமானமாய் இருப்பதைப் பார்த்தவர்கள் எல்லாம் ஆச்சரியம் அடைந்து, என் முகத்தை வெறிக்க வெறிக்கப் பார்த்தார்கள். உடனே ஞானம்பாள் அவர்களை நோக்கிச் சொல்லுகிருள் :

“என்னோடு கூட ஆசனத்தில் இருப்பவர் என்னுடைய அத்தை குமாரர். அவரும் நானும் ஒரே இடத்தில் பிறந்து, ஒரே இடத்தில் வளர்ந்து, ஒரே இடத்தில் கல்வி கற்று, ஒரே இடத்தில் வாழ்ந்தோம். எனக்குப் பிராணன் அவர்தான்; அவருக்குப் பிராணன் நான்தான். எனக்கு அவரே பிரியர்; அவரே அன்பர். இளமைப் பருவ முதல் எனக்கு அவரே காவலர்; அவரே துணைவர். என்னை ஒரு நாளும் பிரியாதவர், பிரிந்து வெளிப்பட்டு வந்துவிட்டதால், அவரைத் தேடிக் கொண்டு நான் வந்த இடத்தில், எனக்குப் பட்டாபிஷேகம் கிடைத்தது. அவருடைய யோக்கியதையை நீங்களும் அறிவீர்கள். பொழுது விடியாதபடி முந்திப் பாடி, பிறகு பொழுது விடியும்படியாகப் பாடினவர் இவர்தாம்.'' இதைக் கேட்டவுடனே, மந்திரி பிரதானிகள் எல்லாரும், “ஆம்! ஆம்! இவர் மகா வரப் பிரசாதி; புண்ணியாத்மா. இவரை அரசராக நியமிக்க வேண்டும் என்பது அநேகருடைய கருத்தாயிருந்தது. இவர் மகாராஜாவுக்குச் சமீப பந்துவாயிருந்தது எங்களுக்குப் பரம சந்தோஷம்,'' என்ருர்கள். உடனே ஞானம்பாள் அவர்

களை நோக்கி, "இவரை அரசராகத் தெரிந்துகொள்ள அநேகர் விரும்பினதாக நீங்கள் சொல்லுகிறபடியால், இவரை உப ராஜாவாக வைத்துக்கொண்டு ராஜ்ய பாரம் செய்ய வேண்டும் என்பது என்னுடைய விருப்பமாய் இருக்கிறது. அதற்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் ?" என்றாள்.

உடனே அவர்கள், "இவருடைய மகிமையை நாங்கள் பிரத்தியட்சமாக அறிந்திருக்கிறோம். ஆதலால், இவர் உங்களுக்கு உபராஜாவாயிருக்க எங்களுக்குச் சம்மதந்தான். நீங்கள் இருவரும் திடகாத்திரராய் நெடுங்காலம் அரசாளும்படிக் கடவுள் அநுக்கிரகிப்பார்," என்று சொல்லி, உத்தரவு பெற்றுக் கொண்டு போய்விட்டார்கள்.

மகாராஜாவாகிய ஞானம்பாளும், உப ராஜாவாகிய நானும் சிங்காசனம் ஏறி, ராஜ்ய பரிபாலனம் செய்யத் தொடங்கினோம் ; செங்கோல் கோணாமலும், மநு நீதி தவறாமலும், வர்ணாசாரங்கள் பேதிக்காமலும், மாதம் மும்மாரி பெய்யவும், முப்போகம் விளையவும், ஆறில் ஒரு கடமை வாங்கி அரசாட்சி செய்தோம்; பிரஜைகளுக்கு ராஜாக்கள் செய்ய வேண்டிய அநுகூலங்களையெல்லாம் குறைவறச் செய்தோம் ; தேவாலயம், தர்ம சத்திரம், பாடசாலை, வைத்தியசாலை, தொழிற்சாலை முதலியவைகளில் பழமையாய் இருந்தவைகளை எல்லாம் புதுப்பித்தோம் ; இல்லாத கட்டடங்களை நூதனமாகக் கட்டுவித்தோம் ; ஜீரணமாய் இருந்தவைகளை ஜீரணோத்தாரணம் செய்தோம். பழைய ராஜாங்கத்தில் உத்தியோக நியமன விஷயத்தில் நடந்திருந்த அக்கிரமங்களை எல்லாம் நாங்கள் திருத்திச் சீர்படுத்தினோம்.

என்னுடைய அபிப்பிராயமும் ஞானம்பாளுடைய அபிப்பிராயமும் அநேக விஷயங்களில் ஏக பாவமாக ஒத்திருந்தாலும், இரண்டொரு விஷயங்களில் நானும் அவளும் வெவ்வேறாக அபிப்பிராயப்பட்டோம். ராஜாங்க வருமானத்தைப் பார்க்கிலும் செலவு அதிகரித்துப் பணம் போதாமலிருந்தபடியால், ஜனங்களிடத்தில் அதிக வரி வசூல் செய்ய வேண்டும் என்பது என்னுடைய கருத்தாயிருந்தது. ஞானம்பாள் என்னுடைய

அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளாமல், என்னைப் பார்த்து, "ஜனங்களுக்கு நியாயமாக எவ்வளவு வரி ஏற்படுத்தக் கூடுமோ அவ்வளவு வரி முன்னமே ஏற்பட்டிருப்பதால், நாம் செலவைக் குறைக்க மார்க்கம் தேட வேண்டுமேயல்லாது, ஜனங்களுடைய தலைமேலே அதிக வரிகளைச் சுமத்துவது தர்மமல்ல. 'சுண்டைக் காய் கால் பணம், சுமை கூலி முக்கால் பணம்' என்பது போல, அநேக உத்தியோகஸ்தர்களுக்கு வேலை குறைவாயிருக்க, அவர்களுக்கு அபரிமிதமான சம்பளங்கள் ஏற்படுத்தப்பட்டிருக் கின்றன. இந்தப் பூலோகத்தில் ஒரு ராஜாங்கத்திலும் இவ்வளவு சம்பளம் கொடுக்கப்படவில்லை. கோட்டை போல நாலு பக்கத்தி லும் மலைகளும் கடலும் சூழ்ந்திருக்கிற இந்த நாட்டுக்குச் சத்துரு பயமே இல்லாமலிருக்க, எண்ணிறந்த ரத கஜ துரக பதாதிகளை வைத்துக்கொண்டு, அவர்களுக்கு நாம் சம்பளம் கொடுப்பது அக்கிரமம் அல்லவா? அன்றியும், மராமத்து டிபார்ட்மெண்டு என்கிற ஒரு பெரும் பூதம் நம்முடைய பொக்கிஷப் பணங்களை யெல்லாம் புசித்துவிடுகின்றது. அநாவசியமான செலவுகளையெல் லாம் குறைத்துவிட்டால், நம்முடைய வருமானம் செலவுக்கு மேல் மிஞ்சி, கையிருப்புக்கும் இடம் உண்டாகும். சம்பளங் களைக் குறைப்பது உத்தியோகஸ்தர்களுக்கு அதிருப்தியாய் இருக்குமென்பது நிச்சயந்தான். ஆனால், சில உத்தியோகஸ்தர் களுடைய திருப்திக்காகக் கோடானுகோடி ஜனங்களுடைய சௌக்கியத்துக்கு நாம் குறைவு செய்யலாமா?" என்றாள். ஞானம்பாள் சொன்ன நியாயங்கள் மறுக்கக் கூடாதவைகளா யிருந்தபடியால், நானும் அவளுடைய கருத்துக்கு இசைந்தேன்.

## 23. தமிழ் மொழி வளர்க!

விக்கிரமபுரியில் நியாய சாஸ்திரம் தெரியாதவர்களெல்லாம் நியாயவாதிகளாக நியமிக்கப்பட்டிருந்தார்கள். அவர்களை யெல்லாம் ஞானம்பாள் வர வழைத்து, பின் வருமாறு பிரசங்கித்தாள் :

“ சட்டம் தெரியாத பாமர ஜனங்களுக்கு உபகாரார்த்தமாக நியாயவாதத் தொழில் சகல தேசங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. நியாயவாதிகள் துன்பம் அடைந்தவர்களுக்குத் துணைவர்களாயும், ஆஸ்திகளை இழந்தவர்களுக்கு அடைக்கல ஸ்தானமாயும், பாத்தியக் கிரமங்களுக்குப் பாதுகாவலராயும் இருக்கிறார்கள். நியாயவாதிகளே நியாய சாஸ்திரம் தெரியாமல் இருப்பார்களானால், அவர்கள் மற்றவர்களுக்கு எப்படிச் சகாயம் செய்யக் கூடும்? குருடனுக்குக் குருடன் வழி காட்டவும், செவிடனுக்கு ஊமையன் உபதேசிக்கவும் கூடுமா? நியாய ஸ்தலங்களில் சகல விதமான வழக்குகளும் வருகிறபடியால், அந்த வழக்குகளுக்குச் சம்பந்தமான சகல சட்டங்களும், சாஸ்திரங்களும், தேசாசாரங்களும் நியாயவாதிகளுக்கு உள்ளங்கை நெல்லிக் கனி போலப் பாடமாயிருக்க வேண்டும். ஒரு அற்பத் தொழிலாளிகூட, வெகு காலம் பிரயாசைப்பட்டுக் கற்றுக்கொண்டு, பிறகு அந்தத் தொழிலில் பிரவேசிக்கிறான். அப்படியானால், வக்கீல் வேலையைக் கற்றுக்கொள்வதற்கு ஒவ்வொருவனும் எவ்வளவு சிரமப்பட வேண்டும்? நியாய சாஸ்திரம் தெரியாத நியாயவாதி எப்போதும் பரம சங்கடப்பட ஏதுவாகுமாகையால், நியாயவாதிக்குச் சகல சாஸ்திரங்களும், விவகார அநுபோகங்களும் தெரிந்திருக்க வேண்டும்.

“ வக்கீல் ஒரு வழக்கை நியாய வழக்காயிருந்தால் மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டும். வக்கீல் தன்னிடத்தில் வருகிற வழக்காளிகளின் சங்கதிகளைப் பூரணமாய் விசாரித்தால், பெரும்

பாலும் உண்மையைக் கண்டு பிடிப்பது பிரயாசையாயிராது. ஒருவன் பொய்ப் பத்திரத்தை உண்டு பண்ணினதாக வக்கீ லுக்குத் தெளிவாகத் தெரிந்த பிறகு, அந்தப் பத்திரம் உண்மை என்று வக்கீல் வாதித்தால், அந்தப் பத்திரத்தைச் சிருஷ்டி செய்தவனுக்கும், வக்கீலுக்கும் என்ன பேதம் இருக் கிறது ? அந்த வழக்காளியும் மனதறியப் பொய் ஆதரவை உண்டு பண்ணினான்; வக்கீலும் மனதறியப் பொய்ப் பத் திரத்தை மெய்ப் பத்திரம் என்று சாதித்தான். சில வக்கீல்கள் வழக்கின் தன்மையை யோசிக்காமல், எந்த வழக்காயிருந்தா லும் உடனே அங்கீகரித்துக்கொண்டு, தங்களுடைய மனோ சாட்சிக்கு விரோதமாகக் கறுப்பை வெள்ளை என்றும், வெள்ளை யைக் கறுப்பு என்றும் வாதித்து, பெயரைக் கெடுத்துக்கொள்ளு கிறார்கள்.

“வக்கீலிடத்தில் வருகிற கட்சிக்காரன், அறியாப் புத்தியினால் ஆதாரமற்ற வழக்கைச் செய்ய யத்தனித்திருக்கிறானென்று வக்கீ லுக்குத் தெரிந்த மாத்திரத்தில், அவன் வீண் வழக்காடி நஷ்டப் படாதபடி, அவனுக்கு வக்கீல் புத்தி போதிக்க வேண்டும். சமா தானமாகக் கூடிய வழக்குகளைச் சமாதானப்படுத்த வேண்டிய தும் வக்கீலின் கடமை. வக்கீல்கள் பீசு வாங்குகிற விஷயத்தில் அக்கிரமம் செய்யக் கூடாது. துன்பப்படுகிறவர்களுக்குச் சகாயம் செய்ய வேண்டியது எல்லாருடைய கடமையாகவும் இருப்பது போலவே, வக்கீல்களுக்கும் முக்கியக் கடமையாய் இருக்கிறது. சொத்து நஷ்டமாவது அல்லது சரீரத் துன்பமாவது அடைந்து பீசு கொடுக்க நிர்வாகம் இல்லாத பரம ஏழைகளிடத்தில் வக்கீல் கள் ஒன்றும் வாங்காமல், அவர்களுடைய கட்சியைப் பேசிச் சாதிப்பார்களானால், அவர்களுக்குப் பரம இன்பமும் கீர்த்தியு மாய் இருக்கும். மற்றவர்கள் பொருள் கொடுத்துச் சம்பாதிக் கிற புண்ணியம், வக்கீல்களுக்கு வாய் வார்த்தையால் வருகிறபடி யால், அவர்கள் எப்போதும் ஆபத்துச் சகாயிகளாயும் தீனோப காரிகளாயும் இருக்க வேண்டும். அந்த ஏழைகளுக்குப் பொரு ளுதவி வேண்டுமானாலும் செய்து, அவர்கள் ஜயித்த பின்பு அந் தத் தொகையை வாங்கிக்கொள்வதும் பெரிய உபகாரம். நியாய வாதிகள் நியாயாதிபதிகளுக்கு அடுத்தபடியிலிருப்பதாலும், ஒரு

கால் அவர்கள் நியாயாசனத்தில் ஏறவும் கூடுமாகையாலும் நியாயவாதிகள் நீதிமான்களாயும், சர்வ குணோத்தமர்களாயும் பிரகாசிக்க வேண்டும்.'' இவ்வாறு நியாய போதம் செய்த பிறகு, மேலும் அவள் வக்கீல்களைப் பார்த்துச் சொல்ல லானாள் :

''இங்கு ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற தமிழ்க்கோர்ட்டுகளில் சில தமிழ் நியாயவாதிகள் தமிழில் வாதிக்காமல், இங்கிலீஷில் வாதிக்கிறார்களென்று கேள்விப்படுகிறோம். தேச பாஷையும் தமிழ் ! கோர்ட்டில் வழங்காநின்ற பாஷையும் தமிழ் ! நியாயாதிபதியும் தமிழர் ! வாதிக்கிற வக்கீலும் தமிழர்! மற்ற வக்கீல்கள், கட்சிக்காரர்கள் முதலானவர்களும் தமிழர்கள் ! இப்படியாக, எல்லாம் தமிழ் மயமாயிருக்க, அந்த வக்கீல்கள் யாருக்குப் பிரீதியாய் இங்கிலீஷில் வாதிக்கிறார்களோ தெரியவில்லை ! நியாயாதிபதியாவது அல்லது வக்கீலாவது இங்கிலீஷ்காரராய் இருக்கிற பட்சத்தில் இங்கிலீஷில் வாதிப்பது நியாயமாயிருக்கலாம். தமிழ் நியாயாதிபதி முன்பாகத் தமிழ் வக்கீல் இங்கிலீஷில் வாதிப்பது ஆச்சரியம் அல்லவா ? ஜனங்களுக்கு இங்கிலீஷ் தெரியாதாகையால் ஐரோப்பியர்கள்கூட இத்தேச பாஷையில் பரீட்சை கொடுக்க வேண்டுமென்றும், அவர்கள் தேச பாஷையிலே சம்பாஷிக்க வேண்டுமென்றும் சட்டம் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் அந்தப்படிப் பரீட்சை கொடுத்து வருவதுமன்றிக் கட்சிக்காரர்களிடத்தில் தேச பாஷையிலே சம்பாஷிக்கவும் பிரியப்படுகிறார்கள். அப்படியிருக்க, சுதேசிகளான வக்கீல்கள் சொந்தப் பாஷையைத் தள்ளிவிட்டு, அந்நிய பாஷையில் வாதிப்பது சரிப்படாது அல்லவா ? தங்களுக்குத் தமிழில் நன்றாகப் பேசத் தெரியாமையினால், இங்கிலீஷில் வாதிப்பதாகத் தங்களுக்குக் கௌரவம் போல அவர்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள். சுய பாஷை பேசத் தெரியாமலிருப்பது போல இழிவான காரியம் வேறொன்றும் இருக்கக் கூடுமா ? ஒரு ஐரோப்பியர் தம்முடைய சுய பாஷையில் தமக்குப் பேசத் தெரியாதென்று சொன்னால், இந்த வக்கீல்களே அவரைப் பழிக்க மாட்டார்களா ? அப்படியே தங்களுடைய சுய பாஷையில் தங்களுக்கு வாதிக்கத் தெரியாதென்று சொல்வது, அவர்களுக்கு அவமானம் அல்லவா ?

"நியாய சாஸ்திரங்கள் எல்லாம் இங்கிலீஷ் பாஷையில் இருப்பதாலும், இங்கிலீஷில் இருக்கிற நீதி வாக்கியங்களுக்குச் சரியான பிரதி பதங்கள் தமிழில் இல்லாமையாலும் தாங்கள் இங்கிலீஷ் பாஷையை உபயோகிப்பதாகச் சில வக்கீல்கள் சொல்லுகிருர்கள். இங்கிலீஷ் வார்த்தைகளுக்குச் சரியான பிரதி பதங்கள் தமிழில் இல்லையென்று வக்கீல்கள் சொல்வது, அவர்களுடைய தெரியாமையேயல்லாமல் உண்மை அல்ல. தமிழ் நூல்களைத் தக்கபடி அவர்கள் ஆராய்ந்தால், பிரதி பதங்கள் அகப்படுவது பிரயாசமா? அப்படித்தான் இரண்டொரு குறிப்பான வார்த்தைகளுக்குத் தமிழிலாவது சமஸ்கிருதத்திலாவது பிரதி பதங்கள் அகப்படாத போனுல், அந்த வார்த்தைகளை மட்டும் இங்கிலீஷிலே பிரயோகித்தால், அவர்களை யார் கோபிக்கப் போகிருர்கள்? வக்கீல்கள் இங்கிலீஷில் வாதிப்பது அக்கிரமம் என்று சில தமிழ் நியாயாதிபதிகளுக்குத் தெரிந்திருந்தும், அதைக் கண்டித்தால், தங்களுக்கு இங்கிலீஷ் தெரியாதென்று வக்கீல்களும் மற்றவர்களும் நினைப்பார்கள் என்று எண்ணி, இங்கிலீஷ் வாதத்துக்கு இடங்கொடுத்து வருகிருர்கள்.

"ஜனங்களுக்குத் தெரிந்த பாஷையிலே வக்கீலினுடைய வாதமும் மற்ற நடவடிக்கைகளும் நடந்தால்மட்டும் உண்மை வெளியாகுமே தவிர, அவர்களுக்குத் தெரியாத பாஷையில் நடந்தால், எப்படி உண்மை வெளியாகும்? இங்கிலீஷ் தெரிந்த சுதேச நியாயாதிபதிகள் தீர்ப்பு மட்டும் இங்கிலீஷில் எழுதலாமென்று சட்டம் சொல்லுகிறதேயல்லாமல், மற்ற நடவடிக்கைகளையும் இங்கிலீஷில் நடத்தும்படிச் சொல்லவில்லை. அப்படியிருக்க, சில தமிழ் நியாயாதிபதிகளும், சில வக்கீல்களும் இங்கிலீஷைக் கலந்து, நியாயப் பரிபாலனத்தைக் குளறுபடி செய்வது கிரமமா?

"கோர்ட்டில் நடக்கிற விவகாரங்களைக் கேட்டு விவேகம் அடைவதற்காகவே, ஜனங்கள் கூட்டம் கூட்டமாய்க் கோர்ட்டுகளுக்குப் போய், காத்திருக்கிருர்கள். அவர்களுடைய முகத்திலே கரியைத் தடவுவது போல, அவர்களுக்குத் தெரியாத பாஷையில் விவகாரம் நடந்தால், அவர்களுக்கு என்ன ஞானம் உண்டாகக் கூடும்? குருடன் கூத்து பார்க்கப் போனது போலவும், செவிடன் பாட்டு கேட்கப் போனது போலவும் யாதொரு

பிரயோஜனமும் இல்லாமல், அவர்கள் வீட்டுக்குத் திரும்புகிருர்கள். தமிழ் நியாயாதிபதி முன்பாக இங்கிலீஷில் வாதிக்கிற தமிழ் வக்கீல், இந்தத் தமிழ் நாட்டையும், தமிழ்ப் பாஷையையும், மற்ற வக்கீல்களேயும், கட்சிக்காரர்களேயும், சகல ஜனங்களேயும் மெய்யாகவே அவமானப்படுத்துகிருர். அந்த வக்கீல்களுடைய வாதம் அபவாதமாக முடிகிறபடியால், நீங்களும் அவர்களேப் போல அந்நிய பாஷைகளில் வாதிக்காமல், தமிழிலேயே வாதிப்பீர்கள் என்று நம்புகிருேம்.

இங்கிலீஷில் வாதிக்கிற வக்கீல்களேப் பார்த்து, இங்கிலீஷ் நன்ருகத் தெரியாத சில வக்கீல்களும் இங்கிலீஷில் வாதிக்கத் துணிகிருர்கள். அவர்கள் சொல்வது கோர்ட்டாருக்குத் தெரியாமலும், கோர்ட்டார் சொல்வது அவர்களுக்குத் தெரியாமலும் அவஸ்தைப்படுகிருர்கள். அப்படிப்பட்ட ஒரு வக்கீல், ஒரு பெரிய வழக்கில், ஒரு ஜமீன்தாருக்கு வக்கீலாயிருந்தார். அந்த வக்கீலினுடைய இங்கிலீஷ் வாதத்தினுலேயே அந்த வழக்கு அபஜெயமாய்ப் போய், ஜமீந்தாருக்கு விரோதமாய்க் கோர்ட்டார் இங்கிலீஷில் தீர்ப்பு எழுதிப் படித்தனர். அந்தத் தீர்ப்பு ஜமீந்தாருக்கு அநுகூலம் என்று வக்கீல் பிசகாக எண்ணிக்கொண்டு, ஜமீந்தாருடைய ஊருக்குப் போய், அவர் பக்கம் தீர்ப்பானதாகத் தெரிவித்தார். அதைக் கேட்டவுடனே ஜமீந்தாருக்கு ஆனந்தம் உண்டாகி, வக்கீலுக்கு அளவற்ற வெகுமானம் செய்ததுமன்றி, கோயிலுக்கு அபிஷேகங்களும், தான தர்மங்களும், விருந்துகளும், வேடிக்கைகளும் செய்தார். கோர்ட்டார் தீர்ப்பு சொன்ன அன்றைய தினமே கோடை காலத்துக்காக இரண்டு மாதக் காலம் கோர்ட்டு மூடப்பட்டு, எல்லாரும் அவரவர்களுடைய ஊர்களுக்குப் போய்விட்டதால், ஜமீந்தாருக்கு உண்மை தெரிய இடமில்லாமல் போய்விட்டது. வரப்போகிற வழக்கு சொத்தை நம்பி, கையிலிருந்த சொத்துக்களேயெல்லாம் மேலே கூறியபடி விரயம் செய்துவிட்டார். கோர்ட்டு திறந்து உண்மை தெரிந்ததும், ஜமீந்தாருக்கும் வக்கீலுக்கும் என்ன பிரமாதம் நடந்திருக்கும் என்பதை நான் சொல்ல வேண்டுவதில்லே.

"இங்கிலீஷ் அரசாட்சியில் வக்கில்களேப் போலவே, மற்ற உத்தியோகஸ்தர்களும், வித்தியார்த்திகளும் சுதேச பாஷைகளே

நிந்தனை செய்கிறார்கள். இங்கிலீஷ், பிரெஞ்சு முதலிய பாஷை கள் ஜீவனத்துக்கு மார்க்கமாய் இருக்கிறபடியால், அநேகர் வயிறே பெரிது என்று எண்ணி, அந்தப் பாஷைகளைமட்டும் அதிக சிரத்தையாகப் படிக்கிறார்கள். ராஜாங்கத்தாருடைய சகாயம் இல்லாமல் இருக்குமானால், சில வருஷங்களுக்கு முன்னமே சுதேச பாஷைகள் இருந்த இடம் தெரியாமல் போயி ருக்கும். ராஜாங்கத்தார் சுதேச பாஷைகளைச் சில பரீட்சை களுடன் சேர்த்து, ஆதரித்து வந்தார்கள். இப்போது அவர்களே அலட்சியமாய் இருப்பதால், சுதேச பாஷைகளுக்கு நாளுக்கு நாள் ஜீவ தாது குறைந்து வருகின்றது. வித்தியார்த்திகளுடைய இஷ்டப்படி, சுதேச பாஷைகளையாவது அல்லது லத்தீன் முதலிய பாஷைகளையாவது படிக்கலாமென்று துரைத்தனத்தாரே நியம னம் செய்திருப்பதால், சுதேச பாஷைகளுக்கு ஜீவாந்த காலம் சமீபித்து இருக்கின்றது. சென்னைப்பட்டினம் ஸெனட் (Senate) என்னும் ஆலோசனைச் சங்கத்தைச் சேர்ந்த அநேக பிரபுக்கள் சுதேச பாஷைகளை ஆதரிக்காமல் விட்டுவிட்டார்கள். ஆனால், அந்தச் சங்கத்தில் இரண்டொரு சுதேச கனவான்கள், சுதேச பாஷைகளுக்கு ஆதரவு கொடுத்துக் காப்பாற்றி வருகிறார்கள். இங்கிலீஷ்காரர்கள், தங்களுடைய சுதேசங்களில் இங்கிலீஷையா வது அல்லது வேறெந்தப் பாஷையையாவது இங்கிலீஷ் பிள்ளை கள் படிக்கலாமென்று உத்தரவு செய்வார்களா? அப்படி ராஜாங்கத்தார் உத்தரவு செய்தாலும், ஜனங்கள் இங்கிலீஷ் பாஷையை விட்டு விட்டு அந்நிய பாஷைகளைப் படிப்பார்களா?

"எண்ணிறந்த தேவாலயங்களும், பிரமாலயங்களும், அன்ன சத்திரங்களும், நீர்வளமும், நிலவளமும், நாகரிகமும், ஆசார நியமங்களும் நிறைந்த இந்தத் தமிழ் நாடு, மற்றைய நாடுகளி லும் விசேஷமென்றும், அப்படியே தமிழ்ப் பாஷையும் எல்லா விதங்களிலும் மேலான பாஷையென்றும் சகலரும் அங்கீகரிக்கி றார்கள். அகஸ்தியர் நாவிலே பிறந்து, ஆரியத்தின் மடியிலே வளர்ந்து, ஆந்திரம் முதலிய பாஷைகளின் தோழமை பெற்று, சங்கப் புலவர்கள் நாவிலே சஞ்சரித்து, வித்துவான்கள் வாக்கிலே விளையாடி, திராவிட தேசம் முழுதும் ஏக சக் ராதிபத்தியம் செலுத்தி வந்த தமிழ் அரசியை இப்போது நாம்

இகழலாமா? நம்மைப் பெற்றதும் தமிழ்; வளர்த்ததும் தமிழ்; நம்மைத் தாலாட்டித் தூங்க வைத்ததும் தமிழ். நம்முடைய மழலைச் சொல்லால், நமது தாய்தந்தையரைச் சந்தோஷிப்பித்ததும் தமிழ். நாம் குழந்தைப் பருவத்தில் பேச ஆரம்பித்த போது, முதலில் உச்சரித்ததும் தமிழ். நம்முடைய அன்னையும் தந்தையும் நமக்குப் பாலோடு புகட்டினதும் தமிழ். தாய், தந்தை, குரு முதலானவர்கள் நமக்கு ஆதியில் உபதேசித்ததும் தமிழ். ஆதி காலம் முதல் நம்முடைய முன்னோர்கள் எல்லோரும் பேசின பாஷையும், எழுதி வைத்த பாஷையும் தமிழ். இப்போது நம்முடைய மாதா பிதாக்களும், பந்து ஜனங்களும், இஷ்ட மித்திரர்களும், இதரர்களும் பேசுகிற பாஷையும் தமிழ். நம்முடைய வீட்டுப் பாஷையும் தமிழ்; நாட்டுப் பாஷையும் தமிழ்.

“இப்படிப்பட்ட அருமையான பாஷையை விட்டு விட்டு, லத்தீன் முதலிய பாஷைகளைப் படிக்கிறவர்கள், சுற்றத்தார்களை விட்டு விட்டு, அந்நியர்களிடத்தில் நேசம் செய்கிறவர்களுக்குச் சமானமாய் இருக்கிறார்கள். ஆபத்துக் காலத்தில் சுற்றத்தார் உதவுவார்களே அல்லாது, அந்நியர்கள் எப்படி உதவ மாட்டார்களோ, அப்படியே, எந்தக் காலத்திலும் நமக்குச் சுய பாஷை உதவுமேயல்லாமல், அந்நிய பாஷைகள் உதவுமா? பல பாஷைக்காரர்கள் ஒருவருடன் ஒருவர் கலந்து பேசுவதும், ஒருவருடைய கருத்தை ஒருவருக்கு வெளிப்படுத்துவதுமே பாஷாந்தரங்களைப் படிப்பதனால் உண்டாகிற முக்கிய பிரயோஜனமாய் இருக்கிறது. சம்பாஷணைக்கும் உலக வியாபாரங்களுக்கும் உபயோகமில்லாத அந்தப் பாஷைகளை அவ்வளவு பிரயாசைப்பட்டுப் படித்தும் பிரயோஜனம் என்ன? ஆனால், சமஸ்கிருதமும், லத்தீனும் அதிக சிறப்பும், அழகும், அலங்காரமும் பொருந்திய பாஷைகள் என்பதற்குச் சந்தேகமில்லை. அவகாசமுள்ளவர்கள் சொந்தப் பாஷைகளோடுகூட அந்தப் பாஷைகளையும் படிப்பது, அதிக விசேஷந்தான். ஆனால், சொந்தப் பாஷைகளை நன்றாகப் படிக்காமல், அந்தப் பாஷைகளிலேயே காலமெல்லாம் போக்குவது அகாரியம் என்றுதான் நாம் ஆட்சேபிக்கிறோம்.

"இங்கிலிஷ், பிரெஞ்சு முதலிய ராஜ பாஷைகளைப் படிக்க வேண்டாமென்றும் நாம் விலக்கவில்லை. அந்த ராஜ பாஷை களில் அநேக அருமையான கிரந்தங்கள் இருக்கிறபடியால், அவைகளைப் படிக்கப் படிக்க அறிவு விசாலிக்கும் என்பது திண்ணமே. ஆனால், மாதா வயிறு எரிய மகேசுவர பூஜை செய்வது போல, சொந்தப் பாஷைகளைச் சுத்தமாக விட்டு விட்டு, ராஜ பாஷைகளை மட்டும் படிப்பது தகுதியின்மை அல்லவா? அநேகர், தங்கள் சுய பாஷைகளில் தங்களுடைய கையெழுத்துக்களைக் கூடப் பிழையில்லாமல் எழுத அசக்தர்களாயிருக்கிறார்கள். சிலர் தமிழ்ப் பாஷை தெரியாமலிருப்பது தங்களுக்குக் கௌரவ மாகவும், அந்தப் பாஷையை அறிந்திருப்பது தங்களுக்கு அகௌரவமாகவும் எண்ணுகிறார்கள்; சுய பாஷா ஞானம் தங்களுக்கு எவ்வளவு குறைவாயிருக்கிறதோ, அவ்வளவுக்கு ராஜ பாஷைகளில் தங்களைச் சமர்த்தர்கள் என்று சகலரும் எண்ணு வார்கள் என்று நினைத்து, சுய பாஷைகளை முழுதும் அலட்சியம் செய்கிறார்கள். அவர்கள் தமிழ்ப் புத்தகங்களைக் கையிலே தொடு கிறதாயிருந்தால், பாம்பின் புற்றுக்குள்ளே கையை விடுவது போலிருக்கும். அவர்களுக்குத் தமிழ்ப் பாஷை பேசுகிறது வேப்பி லைக் கஷாயம் குடிப்பது போலிருக்கும். தமிழ் வார்த்தைகளைக் கேட்பதும் அவர்களுக்குக் கர்ண கடூரமாயிருக்கும். அவர்கள் தமிழ்ப் ப்பாஷையைப் பேசினாலும், முக்கால் பங்கு இங்கிலீஷும், கால் பங்குத் தமிழுமாகக் கலந்து பேசுவார்கள். அவர்களுக்குத் தேசாபிமானமுமில்லை ; பாஷாபிமானமுமில்லை.

"யானை முதல் எறும்பு கடையாக உள்ள சகல ஜீவ ஜந்துக் களுக்கும் தனித்தனியே ஒவ்வொரு பாஷை சொந்தமாய் இருக் கின்றது. அந்தந்த ஜந்துக்களுக்குரிய பாஷைகளை அவைகள் ஒரு காலத்திலும் மறவாமல் எப்போதும் உபயோகித்துக்கொண்டு வருகின்றன. இங்கிலிஷ்காரரர் முதலிய ஐரோப்பியர்கள், தங்கள் தங்களுடைய சொந்தப் பாஷைகளை எவ்வளவோ கௌரவமாகப் போற்றி வருகிறார்கள் என்பதை அவர்களே அறிவார்கள். அவர் கள் மட்டும் தங்கள் ஜன்ம பாஷையாகிய தமிழையும், தமிழ் வித்துவான்களையும் அவமதிக்கலாமா ? தமிழ் நூல்களையே பாராத அவர்கள் அவைகளுக்கு எப்படிப் பழுது சொல்லக்

கூடும்? திருவள்ளுவருடைய குறளை அவர்கள் ஜன்மாந்திரத்தி லும் பார்த்திருப்பார்களா? கம்பருடைய கற்பனையைக் கனவி லும் கேட்டிருப்பார்களா? நாலடியார் செய்தவர்களுடைய காலடி யையாவது கண்டிருப்பார்களா? ஔவையாருடைய நீதி நூலைச் செவ்வையாக அறிவார்களா? அதிவீரராம பாண்டியனை அறு வளவும் அறிவார்களா? இன்னும் எண்ணிக்கையில்லாத தமிழ்ப் புலவர்களுடைய பிரபந்தங்களை அவர்கள் எக்காலத்திலும் பார்த்திரார்கள்.

"இங்கிலீஷ், பிரெஞ்சு முதலிய பாஷைகளைப்போல, தமிழில் வசன காவியங்கள் இல்லாமலிருப்பது பெருங்குறைவென்பதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். அந்தக் குறைவைத் தீர்ப்பதற் காகத்தான் எல்லாரும் ராஜ பாஷைகளும் தமிழும் கலந்து படிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். ராஜ பாஷைகளும், சுதேச பாஷைகளும் நன்றாக உணர்ந்தவர்கள் மட்டும் உத்தம மான வசன காவியங்களை எழுதக் கூடுமேயல்லாது, இதரர்கள் எழுதக் கூடுமா? வசன காவியங்களால் ஜனங்கள் திருந்த வேண்டுமேயல்லாது, செய்யுட்களைப் படித்துத் திருந்துவது அசாத்தியம் அல்லவா? ஐரோப்பிய பாஷைகளில் வசன காவி யங்கள் இல்லாமலிருக்குமானால், அந்தத் தேசங்கள் நாகரிகமும் நற்பாங்கும் அடைந்திருக்கக் கூடுமா? அப்படியே நம்முடைய சுய பாஷைகளில் வசன காவியங்கள் இல்லாமலிருக்கிற வரை யில் இந்தத் தேசம் சரியான சீர்திருத்தம் அடையாது என்பது நிச்சயம்.

"சுதேச பாஷைகளைப் படிக்காமல் ராஜ பாஷைகளை மட்டும் படிக்கிறவர்கள் மற்ற ஜனங்களுடன் கலவாமல், தாங்கள் ஒரு அந்நிய தேசத்தார் போல ஜீவிக்கிறார்கள். ராஜ பாஷை தெரியாத தங்களுடைய மாதா பிதாக்கள், மனைவி மைந்தர்கள் முதலியோர் களிடத்தில் பேசுவதுகூட அவர்களுக்கு அருவருப்பாயிருக்கிறது. தாங்களும் சுய பாஷைகளை நன்றாகப் படிக்காமலும், மற்றவர் களுக்குப் போதிக்காமலும் இருப்பது அவர்களுடைய பிசகேயல் லாமல், அவர்களுடைய பந்து ஜனங்களின் பிசகல்லவே! ராஜ பாஷைகளைப் படித்துக் கல்வியின் அருமை அறிந்தவர்களே சுய பாஷைகளைக் கவனிக்காமல் இருப்பார்களானால், இதர ஜனங்கள்

எப்படிக் கவனிக்கக் கூடும் ? ஸ்திரீகளும் மற்ற ஜனங்களும் சுய பாஷைகளைப் படித்துத் திருந்த வேண்டுமேயல்லாது, அவர்கள் எல்லாரும் ராஜ பாஷைகளைக் கற்றுணர்வது சாத்தியமான காரியமா? சுய பாஷையைப் படிக்காமல் ராஜ பாஷையை மட்டும் படிக்கிறவர்கள் தாங்கள் மட்டும் பிழைக்க அறிவார்களேயன்றி, மற்றவர்களுக்கு அவர்களால் என்ன நன்மை ? சுய பாஷைகளைப் படிக்காதவர்கள் தாங்கள் கெடுவதுமன்றி, ஐரோப்பியர்களையும் கெடுக்கிறார்கள். முன் வந்த ஐரோப்பியர்கள் இத்தேச பாஷைகளை எவ்வளவோ கவனமாகப் படித்தார்கள். இப்போது சுதேசிகளே சுய பாஷைகளைக் கைவிட்டு விட்டபடியால், ஐரோப்பியர்களும் அந்தப் பாஷைகளைப் பொருள் அற்றவைகளாக எண்ணுகிறார்கள். இவ்வாறு நம்முடைய பாஷைகளை அந்நியர்கள் அவமதிக்கும்படி செய்வது தகாத காரியம் அல்லவா ?

" இந்தத் தேசத்துப் பெரிய பிரபுக்கள், தனவான்கள், மிராசுதார்கள், ஜமீன்தார்கள், பாரி வர்த்தகர்கள் முதலானவர்களுடைய அறியாமையை நினைக்கும்போது நமக்கு அழுகையும் பெரு மூச்சும் உண்டாகின்றன. அவர்களில் அநேகர் சுத்த நிரக்ஷரகுக்ஷிகளாய் இருக்கிறார்கள். இந்தத் தேசத்தில் சிலர் தங்களுடைய கையெழுத்துக்களை மட்டும் எழுதக் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். 'சுப்பிரமணியன்' என்பதற்குச் 'சுக்கிரமணியன்' என்றும், ' சிதம்பரம் ' என்பதற்குச் ' செலம்பரம் ' என்றும், ' துரைசாமி ' என்பதற்குத் 'தொறைசாமி' என்றும், 'பொன்னம்பலம்' என்பதற்குப் 'பொண்ணம்பளம்' என்றும், 'வைத்தியலிங்கம்' என்பதற்கு 'வயித்துலிங்கம்' என்றும் கையெழுத்து வைக்கிறார்கள். இந்த வித்துவ சிரோமணிகள் அதிகார ஸ்தானங்களுக்குப் போகும்போது, பிரதிமைகளைப் போல நாற்காலிகளில் வீற்றிருக்கிறார்களே அல்லாது, அவர்களுடைய வேலை இன்னதென்பதைப் பகுத்து அறியார்கள். பிரதிமைகளுக்கும் இவர்களுக்கும் பேதம் என்னவென்றால், பிரதிமைகள் அசையாமல் இருக்கின்றன. இவர்கள் நாற்காலிகளில் தூங்கி விழுந்து அசைந்துகொண்டிருக்கிறார்கள். தேச பாஷைகளில் தகுந்த வசன காவியங்கள் இருக்குமானால், இவர்கள் இவ்வளவு நிர்ப்பாக்கியமான ஸ்திதியில் இருப்பார்களா ?

"ஆதலால், இங்கிலிஷ், பிரெஞ்சு முதலிய ராஜ பாஷைகளைப் படிக்கிறவர்கள், தேச பாஷைகளையும் தீர்க்கமாக உணர்ந்து, இந்தத் தேசத்தைச் சூழ்ந்திருக்கிற அறியாமை என்னும் அந்தகாரம் நீங்கும்படி வசன காவியங்கள் என்னும் ஞான தீபங்களை ஏற்றுவார்களென்று நம்புகிறோம். தமிழ் படிக்காதவர்கள், தமிழ் நாட்டில் வசிக்க யோக்கியர்கள் அல்லர். அவர்கள் எந்த ஊர்ப் பாஷைகளைப் படிக்கிறார்களோ, அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடமாகையால், சுய பாஷையைப் படிக்காமல் இங்கிலிஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலாந்து தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரெஞ்சு மட்டும் படிப்பவர்களைப் பாரீசுப் பட்டணத்துக்கு அனுப்புவோம். லத்தீன் முதலிய பாஷைகளுக்குச் சொந்த ஊர் இல்லாதபடியால், அந்தப் பாஷைகளைப் படிப்பவர்களை அநாமகரணத் தீவுக்கு அனுப்புவோம்."

## 24. விபரீதமான விவாகப் பேச்சு

விக்கிரமபுரி குடியரசாவதற்கு முந்தி, அதை ஆண்டு வந்த அரசனுக்குப் புருஷ சந்ததி இல்லையென்பதை முன்னமே தெரிவித்திருக்கிறேன். அவருக்கு அதிரூப சௌந்தரியமான ஒரு பெண் குழந்தை மட்டும் இருந்தது. அந்தப் பெண் பெயர் ஆநந்தவல்லி. அந்தக் குழந்தை, அதிபாலியமாயிருக்கும் போது தாயும் தகப்பனும் இறந்து போய்விட்டதால், பாட்டியாருடைய கையிலே வளர்ந்தது. ஞானம்பாளுக்குப் பட்டாபிஷேகமான பிறகு, அவள் அந்தக் குழந்தையைத் தன் குழந்தை போலப் பாவித்து, மிகுந்த அன்போடும் இன்பத்தோடும் ஆதரித்து வந்தாள். தகுந்த உபாத்தியாயர்களைக் கொண்டு வித்தியாப்பியாசம் செய்வித்ததுமன்றி, தன்னால் கூடியபோதும் அந்தப் பெண்ணுக்குச் சன்மார்க்கங்களையும், ராஜ நீதிகளையும் ஞானம்பாள்

போதித்து வந்தாள். அந்தப் பெண்ணுக்குப் பக்குவ காலம் சமீ பித்த உடனே, அவளுக்கும் எங்களுக்கும் முக தரிசனம் இல்லா மல் அவள் அந்தப்புர வாசமாயிருந்தாள். அவளுடைய அந்தஸ் துக்குரிய காரியங்களில் ஒரு குறைவுமில்லாமல், சகல மேம்பாடு களும் உபசார மரியாதைகளும் நடந்து வந்தன.

ஞானம்பாள் ஆண் வேடம் பூண்டுகொண்டு அரசு செய் வது தனக்குத் தொந்தரவாயிருப்பதால், தான் பெண்பால் என் பதை ஜனங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று அனேக தடவை விரும்பினுள். நான் கூடாதென்று தடுத்தபடியால் என் பிரியத்துக்காக அவள் ஆண் வேடத்துடன் அரசு செய்து வந்தாள். ஆனுல், ராஜ்ய பாரத்தைச் சேர்ந்த பல கவலைகளினு லும், தன்னுடைய உற்ருர் பெற்ருரைப் பிரிந்திருக்கிற ஏக்கத்தி ஞலும் ஞானம்பாள் சில நாளாய்ச் சந்தோஷமாயிராமல் தேகம் மெலிந்து போனுள். அவள் ஒரு நாள் நெட்டுயிர்ப்புடன் என்னை நோக்கி, "எப்படிப்பட்ட சாதுக்களாயிருந்தாலும், பிரபஞ்ச மாயா விகாரத்தில் மதி மயங்காதிருப்பது அதிதுர்லபம் என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். நமக்குப் பிரபஞ்ச மாயையுடனே கூட ராஜ யோகமும் வந்துவிட்டதால், நாம் சித்தம் பேதித்து, நம்முடைய உற்ருர் பெற்ருர்களையெல்லாம் மறந்துவிட்டோம். நாம் அவர்களை மறந்துவிட்டது போல, அவர் கள் நம்மை ஒரு நிமிஷமாவது மறந்திருப்பார்களா ? நாம் ஆதியூரை விட்டுத் தப்பிப் போன சமாசாரம் கேள்விப்பட்ட உடனே, அவர்கள் பிராணனையும் வைத்திருப்பார்களா ? அவர் களை நாம் இன்னெருதரம் காண்போமா ? அவர்களுடைய அமி ருத வாசகத்தைக் கேட்போமா ? என்னுடைய அத்தையாரைப் போலப் புண்ணியவதிகளை நான் எந்த உலகத்திலே காணப் போகிறேன் ?" என்று சொல்லி, முத்து மாலை போலக் கண் ணீர் விட்டுத் தேம்பினுள். அதைக் கேட்டவுடனே எனக்கும் சகிக்கக் கூடாத சஞ்சலம் உண்டாகி, சிறிது நேரம் பொருமி னேன். மறுபடியும் ஞானம்பாள் என்னைப் பார்த்து, "உங்க ளுடைய பிரியத்துக்காக இதுவரையும் அபாரமான இந்த ராஜாங்க பாரத்தைச் சுமந்தேன். இனிமேல் சுமக்க என்னுல் முடியாது. இருக்கிற இடம் தெரியாமல் எவ்வளவோ அடக்க

ஒடுக்கமாயிருக்க வேண்டிய பெண் பாலாகிய நான், புருஷ வேடம் பூண்டுகொண்டு எத்தனை நாளைக்குக் கஷ்டப்படுவேன்? இனி, என்னால் நிர்வகிக்கச் சாத்தியமில்லாதபடியால், நீங்கள் என் தலைமேலே தூக்கி வைத்த பாரத்தை இறக்கிவிடும்படிக் கிருபை செய்யப் பிரார்த்திக்கிறேன்," என்றாள். நான் அவளைப் பார்த்து, "நான் செய்ய வேண்டிய காரியம் இன்னதென்று சொன்னால், உடனே செய்கிறேன்," என்றேன்.

ஞானம்பாள் என்னைப் பார்த்து, "நம்முடைய ஊரில் நமக்கு என்ன பாக்கியம் குறைவாயிருக்கிறது? இந்த ஊர்க் குடிகளுடைய செளக்கியத்துக்காக நாம் இந்த அரசாட்சியை ஏற்றுக்கொண்டதேயல்லாது, நமக்கு ஏதேனும் இலாபம் உண்டா? குடிகளுக்கு வேண்டிய செளக்கியங்களையும், சட்ட திட்டங்களையும் நாம் ஏற்படுத்தி விட்டபடியால், இனிமேல் இந்த ஊரை ஆளுகிறவர்களுக்கு அதிக சிரமம் இராது. இந்த ஊரை முன்னே ஆண்ட ராஜாவின் புத்திரியாகிய ஆநந்தவல்லி கூடியவரையில் கல்வி கற்று, குணசாலியாகவும், பட்டத்துக்கு யோக்கியமாயும் இருப்பதால், அவளுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து, நாம் நம்முடைய ஊருக்குப் போவது நன்மையென்று நினைக்கிறேன்," என்றாள். நான் ஞானம்பாளைப் பார்த்து, "உன்னுடைய இஷ்டப்படி நடக்க, எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால், ஜனங்கள் அந்த ராஜ புத்திரிக்கு மகுடம் சூட்டச் சம்மதிப்பார்களோ, சம்மதியார்களோ தெரியவில்லை. அன்றியும், இந்த நாடு மலைகளாலும் சமுத்திரங்களாலும் சூழப்பட்டிருப்பதால், நம்முடைய ஊருக்கு எந்த மார்க்கமாய்ப் போகிறதென்றும் தெரியவில்லை. அந்த விவரங்களெல்லாம் தெரிந்துகொண்டு, பிறகு அந்த ராஜ கன்னிகைக்கு மகுடாபிஷேகம் செய்விப்பதைப் பற்றி யோசிக்கலாம். அதுவரையில் நம்முடைய எண்ணம் பிறர் அறியாதபடி இரகசியமாயிருக்க வேண்டும்," என்றேன்.

சில நாட்களுக்குப் பின்பு ஒரு நாள் காலையில் மந்திரி பிரதானிகள் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களும், பெரிய பிரபுக்களும், இன்னும் அநேக ஜனங்களும் அரண்மனையில்வந்து ராஜ சேவைக்குக் காத்திருப்பதாகக் கேள்விப்பட்டு, நானும் ஞானம்பா

ளும் எழுந்து போய், வந்தவர்களுக்குப் பேட்டி கொடுத்தோம். அவர்களில் வயோதிகர்களான சில பெரிய பிரபுக்கள் எழுந்து, ஞானம்பாளைப் பார்த்து, "மண்டலேசுவரா! நாங்கள் ஒரு பெரிய காரியத்தை உத்தேசித்து வந்திருக்கிறோம். தாங்கள் ஒரு ஆட்சேபமும் சொல்லாமல், எங்களுடைய மனோரதத்தை நிறைவேற்ற வேண்டும்," என்றார்கள். ஞானம்பாள் அவர்களை நோக்கி, "நீங்கள் உத்தேசித்திருக்கிற காரியம் யுக்தமாயும் சாத்தியமாயுமிருக்கிற பட்சத்தில், அந்தப்படி செய்யத் தடையில்லை. ஆனால், காரியம் இன்னதென்று தெரிந்துகொள்ளாமல், முன்னால் வாக்குத்தத்தம் செய்வது சரியல்லவே!" என்றாள். அந்தப் பிரபுக்கள் ஞானம்பாளைப் பார்த்து, "நீங்கள் கலியாணம் இல்லாமல் பிரமசாரியாயிருப்பது, எங்களுக்குப் பெரிய மனோ வியாகுலமாயிருக்கிறது. தக்க பருவத்தில் கலியாணம் செய்யாதிருப்பதால், உங்களுடைய தேகம் நாளுக்கு நாள் இளைத்துப் போகின்றது. நீங்கள் சுகமாயிருந்தால்தானே, எங்களுக்கும் சுகம் உண்டு. உங்களிடத்தில் நாங்கள் எத்தனையோ உபகாரங்களைப் பெற்றுக்கொண்டோம். உங்களுக்கு நாங்கள் என்ன பிரதி உபகாரம் செய்யப் போகிறோம்? உங்களுடைய கலியாண மகோற்சவத்தைப் பார்க்க வேண்டுமென்று எங்கள் கண்கள் விரும்புகின்றன. எங்களுடைய முந்தின ராஜாவின் மகளுடைய அழகும், குணமும் உங்களுக்கு நன்றாய்த் தெரியும். அந்தப் பெண்ணினுடைய பாட்டியார் முதலான பந்துக்களுடைய கருத்தையும் நாங்கள் அறிந்தோம். அவர்கள் எல்லாரும் அந்தப் பெண்ணை உங்களுக்குக் கன்னிகாதானம் செய்யப் பூரண சம்மதமாயிருக்கிறார்கள். அந்தப் பெண்ணினுடைய கருத்தும் தங்களையே நாடியிருப்பதாகவும் நாங்கள் தெரிந்துகொண்டோம். உங்களையும், அந்தப் பெண்ணையும் அதிருஷ்டம் வந்து மடியைப் பிடித்து இழுக்கும் போது, நீங்கள் வேண்டாம் என்பீர்களா? அந்தக் கன்னிகா ரத்தினத்துக்குத் தக்க மாப்பிள்ளை நீங்களே! உங்களுக்குத் தக்க பெண் அந்தப் பெண்ணேயன்றி வேறில்லை," என்றார்கள்.

இதைக் கேட்டவுடனே ஞானம்பாள் திடுக்கிட்டுத் திகைத்து, ஒன்றும் பேசாமல் என் முகத்தைப் பார்த்தாள்.

அவள் பொய் பேசுகிறவளாயிருந்தால், சமயாநுகூலமாக எப்படி யாவது பொய் சொல்லித் தப்பித்துக்கொள்ளுவாள். பொய்யும் சொல்லக் கூடாமல், மெய்யும் சொல்லக் கூடாமல் இருந்த படியால், அவள் இவ்வாறு மலைப்பதற்கு இடமாயிற்று. நான் அந்தப் பிரபுக்களைப் பார்த்து, "நீங்கள் சொல்லுவது பெரிய காரியமானதால், உடனே எப்படி மறுமொழி சொல்லக் கூடும்?" என்றேன். அவர்கள் என்னைப் பார்த்து, "உபராஜப் பிரபு! இந்த விஷயத்தில் ஆலோசிக்க வேண்டிய சங்கதி என்ன இருக்கிறது? பெண்ணினுடைய குணத்தைப் பற்றி விசாரிக்கப் போகிறீர்களா? அல்லது குலத்தைப் பற்றி விசாரிக் கப் போகிறீர்களா? எல்லா விஷயமும் உங்களுக்குத் தெரிந்தது தானே! இன்றைக்கு மறு மொழி சொல்லக் கூடாவிட்டாலும், நாளைக்காவது எங்களுடைய இஷ்டப்படி மறுமொழி சொல்ல வேண்டும். உபராஜாவாகிய நீங்கள் அந்த மகாராஜாவுக்குச் சொல்லி, அவசியம் எங்களுடைய இஷ்டப்படி நிறைவேற்ற வேண்டும். அந்த ராஜ கன்னிகையின் மனம் மகாராஜாவையே நாடியிருப்பதால், மகாராஜா அந்தப் பெண்ணை வேண்டா மென்றால், பெண் பாவம் அல்லவா? ஆகையால், நீங்களும் முயற்சி செய்து இந்தக் காரியத்தை நிறைவேற்றினால், நாங்கள் உங்களுக்கும் வேறே பெண் தேடி விவாகம் செய்விக்கிறோம். அநு கூலமான மறுமொழியைக் கேட்பதற்காக நாளைக்கு ஆவலுடனே வருவோம்" என்று சொல்லிவிட்டு, எல்லாரும் போய்விட்டார் கள். அவர்கள் போன வகையைப் பார்த்தால், தங்களுடைய வார்த்தையை நாங்கள் அங்கிகாரம் பண்ணிக்கொண்டதாக நினைத்துப் போனதாகத் தோன்றிற்று. எனக்கும் பெண் தேடி விவாகம் செய்வதாக அவர்கள் சொன்னவுடனே, துயர முகமா யிருந்த ஞானம்பாளுக்கும் புன்னகை உண்டாகி, பிறகு அடக் கிக்கொண்டாள்.

அவர்கள் எல்லாரும் போன பிறகு, ஞானம்பாள் என்னைப் பார்த்துத் துக்க முகத்துடனே, "நான் ஆண் வேடம் பூண்டுகொண்டது, இவ்வளவு பிரமாதமாய் விளைந்திருக் கிறது. நான் ஆதியிலே உண்மையைச் சொல்லியிருந்தால், இவ் வளவு விபரீதம் நேரிடுமா? முக்கியமாக, அந்த ராஜ புத்திரி

என்னை விரும்புவதாக அந்தப் பிரபுக்கள் சொன்னது வாஸ்தவமாயிருக்கிற பட்சத்தில், அவனை நான் கொள்ளமாட்டேன் என்று நிராகரிப்பதாக அவள் கேள்விப்படும்போது, அவளுக்கு எவ்வளவு துக்கத்துக்கு இடமாயிருக்கும்? அது பெண் துரோகம் அல்லவா? ஆகையால், காரியம் இன்னும் பிரமாதமாய் வளருகிறதற்கு முன் நான் பெண் என்பதை அவர்களுக்குத் தெரிவிக்க யோசித்திருக்கிறேன்," என்ருள். நான், "நீ சொல்வதெல்லாம் வாஸ்தவந்தான். ஆனால், இப்போது உண்மையை வெளியிடுவது விவேகமாகத் தோற்றவில்லை. ஜனங்கள் எல்லாரும் உன்னைப் புருஷனென்றே நினைத்து, சகல உபசார மரியாதைகளும், வணக்கமும் செய்து வருகிருர்கள். நீ பெண் என்று திடீரென்று கேள்விப்பட்ட மாத்திரத்தில், அவர்களுடைய புத்தி எப்படி இருக்குமோ தெரியாது. ஸ்திரீகள் பட்டாபிஷேகத்துக்கு யோக்கியர்கள் அல்லரென்று இந்தத் தேசத்தார் நினைக்கிருர்கள். அன்றியும், நாம் அநேக சீர்திருத்தங்களைச் செய்ததனால் அநேகருடைய விரோதங்களைச் சம்பாதித்துக்கொண்டிருக்கிறோம். ஆகையால், இந்தச் சமயத்தில் உண்மையைச் சொல்வது சரியல்லவென்று நினைக்கிறேன்," என்றேன். உடனே அவள், "நான் உண்மைக்காகத் தலை கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் ஒரு காரியத்தைப்பற்றி மட்டும் யோசிக்கிறேன்," என்று சொல்லி, அந்தக் காரியம் இன்னதென்று தெரிவிக்காமல் மௌனமாயிருந்தாள். அவள் குறித்துச் சொன்ன காரியம் இன்னதென்று எனக்கு நன்ருக விளங்கிற்று. உண்மைக்காகத் தலை கொடுக்க, தான் சித்தமாயிருந்தாலும் எனக்கு என்ன பொல்லாங்கு விளையுமோவென்று மட்டும் அவள் ஆலோசிப்பதாக நான் தெரிந்துகொண்டேன். ஞானம்பாள் என்னிடத்தில் வைத்திருக்கிற அணை கடந்த அன்பின் நிமித்தம் அவள் பல சங்கடங்களுக்கு உட்பட்டிருப்பதை நினைக்கும்போது என் மனம் பதைத்து, உலை மெழுகு போல உருகிற்று. யாதொரு அபாயமும் இல்லாமல் அவளை இரட்சிக்க வேண்டும் என்று அடிக்கடி நான் கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டேன்.

மறு நாள் காலை அவர்கள் அரண்மனையில் வந்து, கூட்டம் கூடினுர்கள். அவர்கள் ஞானம்பாளைக் கண்டவுடனே, "மகா

ராஜா! நாங்கள் வரும்போது நல்ல சகுனங்கள் கண்டோம். இந்தக் கலியாணம் முடிய வேண்டுமென்று விரும்பாதவர்கள் ஒருவரும் இல்லே," என்ருர்கள்.

ஞானம்பாள் அவர்களே நோக்கி, "இத்தனே ஜனங்களுடைய விருப்பத்துக்கு விரோதம் செய்வது எனக்கு மெய்யாகவே வருத்தமாய் இருக்கிறது. ஆனுல், என்னுலே கூடாத காரியத்துக்கு நான் என்ன செய்வேன்? அந்தப் பெண்ணே நான் கொள்வதற்கு ஒரு பெரிய பிரதிபந்தம் இருக்கிறது. நீங்கள் என்னேக் கலியாணமில்லாத பிரமசாரி என்று நினேத்து, எனக்குக் கலியாணம் செய்விக்க முயலுகிறீர்கள். நான் பிரமசாரியல்ல," என்ருள்.

ஜனங்கள், "உங்களுக்கு முன்னமே கலியாணம் நடந்திருந்தாலுங்கூட, அந்த ராஜகன்னிகையை உங்களுக்கு இரண்டாம் விவாகம் செய்ய எல்லாரும் சம்மதிக்கிருர்கள். சகல சங்கதிகளேயும் நாங்கள் முன்னமே கலந்து பேசிக்கொண்டு தான் உங்களிடத்துக்கு வந்தோம்," என்ருர்கள்.

ஞானம்பாள், "உங்களுடைய அபிப்பிராயம் அதுவானுலும், கொள்ளுகிறவனுடைய சம்மதம் வேண்டாமா?" என்ருள்.

ஜனங்கள், "கொள்ளுகிறவனுடைய சம்மதத்தைக் கேளாமல் இந்தத் தேசத்தில் கலியாணங்கள் நடப்பது வழக்கமாய் இருக்கின்றது. நாங்கள் அப்படிச் செய்யத் துணியாமல், உங்களுடைய சம்மதத்தைக் கேட்கவே வந்திருக்கிருேம். எங்களேப் பாராவிட்டாலும், தாய்தகப்பன் இல்லாத அந்தப் பெண் முகத்தையாவது பாருங்கள்! அந்தப் பெண் உங்களே வேண்டுமென்று விரும்பும் போது, நீங்கள் வேண்டாமென்று தள்ளி விடுவது பெண் துரோகம் அல்லவா?" என்ருர்கள்.

ஞானம்பாள், "அந்தப் பெண்ணுக்காக இவ்வளவு பரிந்து பேசுகிற நீங்கள், அந்தப் பெண்ணுக்குச் செய்ய வேண்டிய ஒரு முக்கியமான நன்மையைச் செய்யாமல் இருக்கிறீர்கள்.

அந்த நன்மையைச் செய்தால், ராஜாக்கள் எல்லாரும் அந்தப் பெண்ணை விரும்புவார்களே!" என்ருள்.

ஜனங்கள், "அந்தப் பெண்ணுக்கு நாங்கள் என்ன நன்மை செய்யாமல் விட்டுவிட்டோம்? அது இன்னதென்று நீங்கள் உத்தரவு செய்தால், இந்த நிமிஷத்தில் நாங்கள் செய்கிருேம். இது சத்தியம், சத்தியம்," என்ருர்கள்.

ஞானம்பாள், "அந்தக் கன்னிகையினுடைய தகப்பனுர் புருஷ சந்ததியில்லாமல் இறந்து போன உடனே, பாரம்பரைப் பாத்தியக் கிரமப்படி அந்தப் பெண்ணுக்குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டியது நியாயமாயிருக்க, நீங்கள் அந்தப்படி செய்யத் தப்பிப் போய்விட்டீர்கள்! ஒரு ராஜா இறந்த உடனே பாரம்பரைப் பாத்தியக் கிரமத்தை அநுசரிக்காமல், புது ராஜாவை நியமிக்கிறதாயிருந்தால், பெரிய கலகங்களுக்கு ஆஸ்பதமாகும். பலவானுயிருக்கிற ஒவ்வொருவனும் தன்னை நியமிக்க வேண்டுமென்று வல்லடி வழக்கு செய்வான். ஒவ்வொருவனுடைய கட்சியிலும் பல பேர் சேர்ந்து யுத்தம் தொடங்கி, ஒருவரையொருவர் மாய்த்துக்கொள்ளுவார்கள். நியாய பரிபாலனம் நடவாமல் நின்றுபோகுமானதால், ஊரிலே திருட்டுகளும், புரட்டுகளும், கொள்ளைகளும், கொலைகளும் அதிகரிக்கும். இது தான் சமயமென்று அந்நிய தேசத்துச் சத்துருக்களும் பிரவேசித்துக் கொள்ளை அடிப்பார்கள். ஒரு ராஜா இறந்த உடனே, அவனுடைய சந்ததி ஆணுயிருந்தாலும், பெண்ணுயிருந்தாலும் அந்தச் சந்ததிக்கே பட்டமாகிற பட்சத்தில் ஒரு கலகத்துக்கும் இடமில்லை. அது சர்வ ஜன சம்மதமாயிருக்கும். ராஜாவினுடைய புத்திரன் அல்லது புத்திரி விஷயத்தில் சகல ஜனங்களுக்கும் அதிக கௌரவமும், மதிப்பும், பயபக்தியும் உண்டாகும். 'ராஜாவுக்குச் சாவில்லை' என்கிற நீதி வாக்கியப்படி, ஒரு அரசன் எந்த நிமிஷத்தில் இறந்து போகிருனே, அந்த நிமிஷத்தில் அவனுடைய வாரிசுக்குத் தேசாதிபத்தியம் உண்டாகிறபடியால், நியாய பரிபாலனங்கள் எல்லாம் நில்லாமல் தொடர்ச்சியாய் நடந்து வரும். சந்ததியாவது அல்லது வேறே உரிமைக்காரனுவது இல்லாமல், ஒரு அரசன் மாண்டு போகிற பட்சத்தில் புது

அரசனை நியமிக்கலாமே அல்லாது, தகுந்த சுதந்தரவாளிகள் இருக்கும்போது புது அரசனை நியமிப்பது ஒழுக்கமின்மையா கும். சகல விஷயங்களும் மந்திராலோசனைச் சபையாருடைய அனுமதிப்படி நடக்கிறபடியால், ராஜாவின் வாரிசுகள் திறமை யற்றவர்களாயிருந்தாலுங்கூட, அவர்களை நியமிக்கத் தடை யில்லை. ராஜாவினுடைய வாரிசுகளை நியமிப்பதனால் உண்டா கிற நன்மைகளையும், அதனால் விளையத்தகுந்த தீமைகளையும் சீர் தூக்கிப் பார்க்குமிடத்தில், தீமையைப் பார்க்கிலும் நன்மைகள் அதிகமாயிருக்கிறபடியால், பாரம்பரைப் பாத்தியக் கிரமப்படி நியமிப்பதே உசிதமாயிருக்கிறது. அப்படியே புது அரசனை நிய மிப்பதனால் உண்டாகிற சாதக பாதகங்களை யோசிக்குமிடத்தில், சாதகத்தைப் பார்க்கிலும் பாதகம் பெரிதாயிருப்பதால், புது ராஜ நியமனத்தை நீக்க வேண்டியது எல்லாருடைய கடமையாக வும் இருக்கிறது. யானையினுடைய கையிலே பூமாலையைக் கொடுத்து, அது யார் கழுத்திலே போடுகிறதோ அவனை அரசனாக நியமிப்பது, இந்த ஊர் வழக்கமாய் இருக்கிறது. மனுஷர்களு டைய யோக்கியதை யானைக்கு எப்படித் தெரியக் கூடும்? அது ஒரு மூடன் கழுத்திலே மாலையைப் போட்டாலும், அவனை அரச னாக ஏற்றுக்கொள்ள வேண்டியதுதானே! அதைப் பார்க்கிலும், இறந்து போன ராஜாவினுடைய பாத்தியஸ்தர்களையே நியமிப் பது சர்வ சிலாக்கியம் அல்லவா? உங்களுடைய அதிர்ஷ்ட வசத் தால், உங்களுடைய பழைய ராஜாவின் குமாரத்தி பட்டாபிஷே கத்துக்குச் சகல விதத்திலும் யோக்கியதை உள்ளவளாயிருக் கிறாள். அந்தப் பெண்ணுக்கு மகுடம் சூட்ட நீங்கள் ஒரு ஆட்சேபமும் சொல்ல மாட்டீர்கள் என்று நம்புகிறேன்,” என்றாள்.

ஜனங்கள், “மகாராஜாவே! உங்களைப் போலத் தர்ம ராஜாக்கள் இந்தப் பூமண்டலத்தில் இருப்பார்களா? தங்களுடைய பட்டத்தை வேறொருவருக்குக் கொடுக்க யாராவது சம்மதிப்பார் களா? தகப்பன் உயிரோடிருக்கும்போது, தன் பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்யச் சம்மதிக்கிறதில்லை. இப்போது ராஜாக் கள் சொற்ப தேசத்தைச் சம்பாதிப்பதற்காக, எத்தனை உயிர் களைக் கொன்று, எவ்வளவோ பாடுபடுகிறார்கள். புராணங்களில்

சொல்லப்பட்ட இராமன், தர்மன், அரிச்சந்திரன், நளன் முதலிய அரசர்கள்கூட நிர்ப்பந்தத்தினுல் சில நாள் ராஜாங் கத்தை விட்டு நீங்கியிருந்தார்களேயல்லாது, மனப்பூர்வமாய் விட்டவர்கள் ஒருவருமில்லை. அந்த அரசர்கள் எல்லாரும் உங் களுக்குச் சமானமாவார்களா? இப்படிப்பட்ட தர்ம ராஜாவை நாங்கள் ஒரு காலத்திலும் விடுவோமா? எங்களுடைய அபீஷ் டப்படிக்கும், உங்களுடைய மனேபீஷ்டப்படிக்கும் அந்த ராஜ கன்னிகைக்கு மகுடமும் மாலையும் சூட்டி, நீங்கள் மூவரும் கூடி அரசு புரிவதைக் காண விரும்புகிறோம்," என்று சொல்லி, சர்வ ஜனங்களும் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார்கள்.

ஜனங்கள் எல்லாரும் போன பின்பு, ஞானம்பாள் என்னைப் பார்த்து, "அத்தான், அந்த ஜனங்கள் சொல்லுவதைப் பார்த் தால் விபரீதமாயிருக்கிறது. அவர்கள் நம்முடைய இஷ்டப்படி அந்தப் பெண்ணுக்குப் பட்டாபிஷேகம் செய்யச் சம்மதித்தது சந்தோஷமான காரியந்தான். ஆனுல், அந்தப் பெண்ணுக்கு நான் மாலை சூட்டி, நீங்களும் நானும் அந்தப் பெண்ணும் ஆகிய மூவரும் கூடி அரசாள வேண்டுமென்பது ஜனங்களுடைய நோக்கம் போலக் காணப்படுகிறது. இந்தத் தர்ம சங்கடத்துக்கு என்ன செய்கிறது?" என்ருள். நான் ஞானம்பாளைப் பார்த்து, "நீ சம்மதித்துத்தானே அந்தப் பெண்ணுக்கு மாலை சூட்ட வேண்டும். உன்னுடைய சம்மதமில்லாமல் யார் என்ன செய்யக் கூடும்? அந்தப் பெண்ணுக்குச் சீக்கிரத்தில் மகுடாபிஷேகம் செய்துவிட்டு, நாம் ஒருவருக்கும் தெரியாமல் இந்த ஊரை விட் டுப் புறப்பட்டு விட்டால், அப்பால் ஜனங்கள் என்ன செய்வார் கள்? ஆகையால், நீ ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்," என்று அவளுக்குத் தேறுதல் சொன்னேன்.

அன்றைய தினம் சாயங்காலம் வீதிக்கு வீதி பேரிகை முழக்க மும், ஜனங்களுடைய சந்தோஷ ஆரவாரமும் கேட்டு, "அது என்ன சப்தம்?" என்று சாரணர்களை நாங்கள் விசாரித்தோம். அவர்கள் எங்களைப் பார்த்து, "மகாராஜாவுக்கும், பழைய அரச ருடைய புத்திரிக்கும் வருகிற சுக்கிர வாரம் காலையில் கலியாண முகூர்த்தமும், அன்றைய தினம் சாயங்காலம் அந்த ராஜ

புத்திரிக்குப் பட்டாபிஷேகமும் நடப்பதாகவும், அதற்காக எல்லாரும் ஊரை அலங்கரிக்க வேண்டுமென்றும் முரசு முழக்குகிறார்கள். அதைக் கேட்டு, ஜனங்கள் எல்லாரும் ஆநந்த கோஷம் செய்கிறார்கள்," என்றார்கள்.

இதைக் கேட்டவுடனே நாங்கள் பிரமித்து, சிறிது நேரம் சிலை போல அசையாமல் உட்கார்ந்திருந்தோம். அந்தச் சமயத்தில் மந்திரிகள் வந்து நுழைந்தார்கள். ஞானம்பாள் அவர்களைப் பார்த்து, "முரசு அறையும்படி யார் உத்தரவு கொடுத்தார்கள்?" என்று வினவினாள். மந்திரிகள், "மகாராஜாவே! இன்று காலையில் நீங்கள் சொன்ன அபிப்பிராயத்துக்கு விரோதமாக ஒன்றும் நடக்கவில்லை. பட்டாபிஷேகமும், கலியாணமும் ஒரே தினத்தில் நடக்க வேண்டும் என்பது எல்லாருடைய பிரார்த்தனையாகவும் இருக்கிறது. அவர்களுடைய கருத்துக்கு விரோதம் செய்தால், பெருங்கலகத்துக்கு இடமாகும் என்று தோன்றுகிறது. மேலும், அந்த ராஜ குமாரத்தி, தனக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டு, நீங்கள் போய்விடுவீர்கள் என்று நினைத்து, தனக்குப் பட்டாபிஷேகமே வேண்டாமென்று அழுதது. நீங்கள் தன்னைக் கலியாணம் செய்துகொள்வீர்களென்று கேள்விப்பட்ட பிறகுதான், அது சந்தோஷமாயிருக்கிறது. உங்களுடைய முயற்சியினாலே தனக்குப் பட்டாபிஷேகம் ஆகிறதென்று தெரிந்துகொண்டு, முன் இருந்ததைப் பார்க்கிலும் நூறு பங்கு அதிகமாக உங்களிடத்தில் அன்பும், பாசமுமாய் இருக்கிறது. ஆகையால், அந்தப் பெண்ணினுடைய ஆசையைக் கெடுக்க வேண்டாம், மகாராஜா!" என்று சொல்லி, நாங்கள் மறுமொழி சொல்வதற்கு இடமில்லாமல் திடீரென்று சடுதியில் போய்விட்டார்கள்.

இந்தச் சமாசாரங்களைக் கேட்ட பின்பு, முன்னே எனக்கு இருந்த தைரியம் நீங்கி, என் பாடும் தடுமாற்றத்தில் வந்துவிட்டது. நாங்கள் அந்த ஊரில் இருந்தால், ஞானம்பாள் அந்தப் பெண்ணுக்கு அவசியம் தாலி கட்ட வேண்டியதாயிருக்கிறது; மாட்டேன் என்றால், ஊராருடைய பகையும், அந்தப் பெண் பழியும் சம்பாதித்துக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது. எங்களுடைய ஊருக்குப் போகலாம் என்றால், கடலும் மலைகளும்

சூழ்ந்த விக்கிரமபுரியை விட்டு, இன்ன மார்க்கமாய்ப் போகிறது என்று தெரியவில்லை. அரண்மனையில் எங்களைச் சூழ்ந்திருக்கிற வர்கள் எல்லாரும் மணமுரசு கேட்டுச் சந்தோஷிக்கிறவர்களா யிருந்ததால், நானும் ஞானம்பாளும் சகல சங்கதிகளையும் கலந்து, தாராளமாய்ப் பேசவும் சந்தர்ப்பம் இல்லாமல் போய் விட்டது.

## 25. அரச போகத்தைவிட்டு ஆதியூர் திரும்புதல்

ஒருவரையும் கூட அழைத்துக்கொண்டு போகாமல், நானும் ஞானம்பாளும் விடிவதற்கு முன் எழுந்து, சில சமயங்களில் வெளியே உலாவப் போகிறது வழக்கமாயிருந்தது. நாங்கள் ஆதியில் விக்கிரமபுரிக்கு வந்த போது ஏறிவந்த மலையின்மேல் ஏறி உலாவுவதும், அந்த மலைமேல் இருக்கிற அரண்மனையில் இரண்டொரு நாள் வசிப்பதும் வழக்கமாய் இருந்தது. அந்தவழக் கப்படி போகிறவர்கள் போல, நானும் ஞானம்பாளும் ஒரு நாள் நடுச் சாமத்தில் எழுந்து, வேறொருவரையும் கூட அழைத்துக் கொண்டு போகாமல், நாங்கள் மட்டும் புறப்பட்டுப் போய், அந்த மலை மேல் ஏறினோம். ஏறின உடனே நான் ஞானம்பாளைப் பார்த்து, “ இனிமேல் இந்த ஊரில் இருப்பது சரியல்ல ; ஆனால், நம்முடைய ஊருக்காவது, ஆதியூருக்காவது எந்த மார்க்கமாய்ப் போகிறதென்று தெரியவில்லை. நாம் முன்னே வந்த வழியாய்ப் போகலாமென்றால், துஷ்ட மிருகங்கள் நிறைந்த காடுகளைத் தாண்டி எப்படிப் போகக் கூடும் ?” என்றேன். ஞானம்பாள் “இந்த ஊரிலிருந்து பெண்ணும் பெண்ணும் கலியாணம் செய்து கொள்வதைப் பார்க்கிலும், அந்த மிருகங்களுடன் வாசம் செய்வது நலமாகத் தோன்றுகிறது. நாம் முன்னே ஏறி வந்த மலையின் தென்புறத்து வழியாக இறங்கிப் பார்ப்போம். கடவு

னுடைய கிருபையால், அந்தக் காடுகளைக் கடந்து போவதற்குத் தகுந்த மார்க்கம் கிடைத்தாலும் கிடைக்கும்,'' என்றுள்.

அந்தப் பிரகாரம் தென் புறத்தில் இறங்கி, அருணைதயத் துக்கு அடிவாரத்தில் நாங்கள் வந்து சேர்ந்தோம். அடிவாரத் தில் முன்னேயிருந்த காடுகள் எல்லாம் அழிக்கப்பட்டுப் போய், மனிதர்கள் சஞ்சரிக்கும்படியாய் இருந்தது. உடனே நாங்கள் சுவாமிக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரம் செய்துகொண்டு, தெற்கு வழியாகக் கடுநடையாக நடந்து போனேம். ஞானம்பாள் ஆண் வேடத்தை மாற்றிப் பெண் வடிவாகவே வந்தாள். ஒரு பெரிய ராஜாங்கத்தையும், திவ்விய சுந்தரமான ஒரு ராஜ புத்திரியை யும் வேண்டாமென்று விட்டு விட்டு ஓடுகிறவர்கள், எங்களைத் தவிர வேறொருவரும் இருக்க மாட்டார்கள்.

பயம் பின்னே இருந்து எங்களைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு போனதால், ஓடுகிற சிரமம் கூடத் தெரியாமல் நாங்கள் காத வழி தூரம் ஓடினேம். பிறகு கொஞ்சத் தூரத்தில் ஒரு பெரிய கூடாரம் அடிக்கப்பட்டிருந்தது. 'யாரோ வந்து கூடாரம் அடித்திருக்கிருர்கள்' என்று நாங்கள் பேசிக்கொண்டு, அந் தக் கூடாரத்துக்கு நேரே போய், அதனுள் நுழைந்தோம். உள்ளேயிருந்த தேவராஜப் பிள்ளையும், கனகசபையும் எங்களைக் கண்டவுடனே ஆவலுடன் ஓடி வந்து, தழுவிக் கொண்டு, சற்றுநேரம் அங்கலாய்த்து, பிறகு களி கூர்ந்தார்கள். நான் தேவராஜப் பிள்ளையைப் பார்த்து, "ஐயா! நாங்கள் பெரிய ஆபத்துக்குத் தப்பி ஓடி வந்திருக்கிறேம். ஒரு வேளை யாராவது எங்களைத் தொடர்ந்து வந்தாலும் வருவார்கள். ஆகை யால், உடனே நாம் புறப்பட்டு ஆதியூருக்குப் போவது நன்மை. வழியில் போகும் போது சகல சமாசாரங்களும் சொல்லு கிறேன்,'' என்றேன்.

நாங்கள் போகும்பொழுது, என்னையும், ஞானம்பாளை யும் பட்டத்து யானை தூக்கிக்கொண்டு போய் மலையில் விட் டதும், நாங்கள் விக்கிரமபுரிக்குப் போய் அரசாண்டதும் முத லிய சகல சங்கதிகளையும் தேவராஜப் பிள்ளைக்கும் கனகசபைக்

கும் நான் தெரிவித்தேன். ஞானம்பாள் ஆண் வேடம் பூண்டு கொண்டு அரசாண்ட வகையைக் கேள்விப்பட்டு, அவர்கள் மித மில்லாத ஆச்சரியமும், ஆநந்தமும் அடைந்தார்கள். ஞானம் பாளைப் புருஷனென்று நினைத்து, அந்த ராஜ கன்னிகையாகிய ஆனந்தவல்லி இச்சைப்பட்டதும், அவர்கள் இருவருக்கும் விவாகம் செய்வதற்காக முகூர்த்த நாள் குறிக்கப்பட்டதும், அதற்காகத் தப்பி நாங்கள் ஓடி வந்ததும் கேள்விப்பட்டு, தகப் பனும், பிள்ளையும் வயிற்றைப் பிடித்துக்கொண்டு விழுந்து விழுந்து சிரித்தார்கள். அவர்கள் ஆடியாடிக்கொண்டு சிரித்த சிரிப்பினால், நாங்கள் ஏறியிருந்த வண்டி கலகலத்துப் போய் விட்டது.

அவர்களுடைய சிரிப்பு அடங்கின பிறகு, என்னுடைய தாய்தந்தையர், மாமனார், மாமியார் முதலியவர்களைப் பற்றி விசாரித்தேன். தேவராஜப் பிள்ளை என்னைப் பார்த்து, "நீங்கள் இருவரும் காணாமல் போன சமாசாரத்தை நான் உடனே அவர்களுக்குத் தெரிவித்தேன். அவர்கள் சகிக்கக் கூடாத துக்கம் உடையவர்களாய் ஆதியூருக்கு வந்தார்கள். இந்தக் காட்டு வழியாக, அந்தயானை உங்கள் இருவரையும் தனித் தனியே தூக்கிக்கொண்டு போனதைப் பார்த்ததாகச் சிலர் சொன்ன படியால், உங்களைத் தேடுவதற்காக நாங்கள் இந்தக் காடுகளை எல்லாம் அழித்து நிர்மூலம் செய்ததுமன்றி, மிருகங்களையும் கொன்று நாசம் செய்துவிட்டோம்; இப்போது மலைகளையும் காடுகளையும் அணு அணுவாய் ஆராய்ந்து பார்த்தோம்; இன்னமும் உங்களைத் தேடிப் பார்ப்பதற்காகவே நடுக் காட் டிலே கூடாரம் அடித்துக்கொண்டு இவ்விடத்திலே வாசமாய் இருந்தோம். உங்கள் தாய்தந்தையர், மாமனார், மாமியார் முதலானவர்களும் எங்களுடன்கூட வந்திருந்து, உங்களைத் தேடிப் பார்த்தும், நீங்கள் அகப்படவில்லை. அவர்கள் உங்களைப் பிரிந்த ஏக்கத்தினால் சரியான ஊண் உறக்கம் இல்லாமல், துரும்பு போல இளைத்துப் போயிருப்பதால், அவர்களை இந்தக் காட்டில் இருக்க வேண்டாமென்று நாங்கள் கட்டாயப்படுத்தி, ஆதியூருக்கு அனுப்பிவிட்டோம். அவர்களை நீங்கள் பார்த்தால், அடையாளம் கண்டு பிடிக்க மாட்டீர்கள்! இன்னும் ஒரு மாதம்

அவர்கள் உங்களைக் காணுமல் இருப்பார்களானுல், அவர்கள் ஜீவித்திருப்பது கஷ்டம். எங்கள் ஊரில் உங்களை நாங்கள் நிறுத்திக்கொண்டது நிமித்தம் இப்படிப்பட்ட ஆபத்து உங்களுக்கு நேரிட்டபடியால், நாங்கள் பட்ட சஞ்சலம் கொஞ்சம் அல்ல. கடவுள் எங்களுடைய பிரார்த்தனைக்கு இரங்கி, மறுபடியும் உங்களை க்ஷேமமாய்க் கொண்டு வந்து சேர்த்ததற்காக, அவருக்கு நாங்கள் மிகவும் நன்றியுள்ளவர்களாய் இருக்கிறேம்," என்ருர். எங்களுடைய தாய்தந்தை முதலானவர்கள் ஆதியூரில் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டவுடனே, அவர்களைச் சீக்கிரத்தில் பார்க்க வேண்டும் என்னும் பெரிய அவாவுடன் நாங்கள் சென்றேம்.

முன்னே எங்களை யானை தூக்கிக்கொண்டு போன வழி சுற்று வழியாகவும், இப்போது நாங்கள் போனது நேர் வழியாகவும் இருந்தபடியால், நாங்கள் புறப்பட்ட நாலாம் நாள் சாயங்காலம் ஆதியூரை அடைந்தோம். என்னையும் ஞானம்பாளையும் பார்த்தவுடனே, எங்களுடைய தாய்தந்தையர் ஓடி வந்து, நெடு நேரம் பிரலாபித்து, பிறகு மனம் தேறினர்கள். அவர்களுடைய தேக மெலிவையும், இளைப்பையும் பார்த்த உடனே எங்களுக்கு ஆற்ருமையும் துக்கமும் உண்டாகி, இனிமேல் ஒரு காலத்திலும் அவர்களை விட்டுப் பிரிகிறதில்லை என்று உறுதி செய்துகொண்டேன். நாங்கள் ஊரைவிட்டுப் போன பிறகு, விக்கிரமபுரியில் நிகழ்ந்த சகல வர்த்தமானங்களையும் என்னிடத்தில் கேள்விப்பட்ட பிரகாரம் தேவராஜப்பிள்ளையும் கனகசபையும் வர்ணித்து வர்ணித்து, என் தாய்தந்தையர், மாமனுர், மாமியார் முதலானவர்களுக்குத் தெரியப்படுத்தினுர்கள். அதைக் கேட்டவுடனே எல்லாருக்கும் உண்டான ஆச்சரியமும், ஆனந்தமும் அபரிமிதமே. தேவராஜப்பிள்ளையும் கனகசபையும் சொன்னது போதாது என்று அந்த அதிசயங்களை எல்லாம் அவர்கள் என் வாயாலே ஒரு தரம் கேட்டார்கள்; பிறகு நான் சொன்னது போதாது என்று ஞானம்பாள் வாயாலே ஒரு தரம் கேட்டார்கள். இவ்வகையாக அந்த இரவு முழுவதும் தேவராஜப் பிள்ளை வீடு சந்தோஷ அமர்க்களமாய் இருந்ததேயன்றி, ஒருவராவது உறங்கவில்லை.

## 26. ஆனந்தவல்லி மகுடாபிஷேகம்

மறு நாள் காலையில் ஞானம்பாள் என்னிடத்திலும் என் தாயாரிடத்திலும் ஆலோசனை செய்துகொண்டு, தான் பெண் என்பது முதலான விவரங்களைக் காட்டி, அடியிற்கண்டபடி, ஆநந்தவல்லிக்கு ஒரு நிருபம் எழுதி அனுப்பினாள் :—

என் பிரியமான தங்கையே !

மகாராஜாவாக விக்கிரமபுரியை அரசாண்ட நான், உன்னைப் போலப் பெண்ணே தவிர, ஆண் அல்ல. உபராஜாவாயிருந்து, அந்த ஊரை ஆண்டவர்தான் என்னுடைய கணவர். நான் ஆண் வேடம் பூண்டுகொண்டு, என்னை விட்டுப் பிரிந்து போன என் பிராண நாயகரைத் தேடிக் கொண்டு வந்த இடத்தில், எனக்கு ராஜ பட்டம் கிடைத்து, நான் அரசாண்ட விவரங்கள் எல்லாம் உனக்குத் தெரியுமே! என்னைப் புருஷன் என்று நினைத்து, நீ என்னைக் கலியாணம் செய்துகொள்ள விரும்பியிருப்பதாக நான் கேள்விப்பட்டு, அளவற்ற வியாகுலம் அடைந்தேன். பல காரணங்களால், நான் பெண் என்கிற உண்மையை உனக்குத் தெரிவிக்கக் கூடாமல் போய்விட்டது. உனக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட்டு, நான் வெளியிலே வந்து விடலாமென்று நினைத்து, ஜனங்களிடத்தில் உன்னுடைய பட்டாபிஷேகத்தைக் குறித்துப் பேசினேன். அவர்களும் என்னுடைய வார்த்தையை அங்கீகரித்துக்கொண்டார்கள். பிறகு உனக்கும் எனக்கும் விவாகமும், பட்டாபிஷேகமும் ஒரே தினத்தில் நடப்பதாக என்னுடைய அநுமதியில்லாமல் ஜனங்கள் பேரிகை முழக்கிப் பிரசித்தம் செய்தபடியால், இனிமேல் அவ்விடத்தில் இருப்பது சரியல்லவென்று நினைத்து நானும் என்னுடைய நாயகரும் வெளிப்பட்டு வந்துவிட்டோம். உனக்கும் மற்றவர்களுக்கும் உண்மை தெரியாதானபடியால், நானும் அவ்விடத்திலிருந்து உனக்கு மாலை சூட்ட நிராகரித்தால், உனக்கு மன வருத்தமும், அவமானமும் நேரிடும்

என்பதை நினைத்தே நான் சொல்லாமல் வந்துவிட்டேன். இனி மேல் நான் ஆண் என்பதை நீ சுத்தமாய் மறந்துவிட்டு, உன்னுடன் கூடப்பிறந்த சகோதரி போல என்னைப் பாவிக்க வேண்டும். நான் புருஷனென்று நினைத்து, என்னிடத்தில் நீ வைத்த நேசமானது, நான் பெண் என்று தெரிந்த பிறகும் மாருமல் இருக்குமென்று நம்புகிறேன். சகல ஜனங்களும் உன்னை அரசியாக அங்கீகரித்துக்கொண்டு முரசு அறைவித்திருப்பதால், இனி நீயே அரசி என்பதற்கு ஐயமில்லை. ஆகையால், உன்னுயிர் போல மன்னுயிரைத் தாங்கி, அரசாட்சி செய்யும்படி சுவாமி உனக்குப் போதுமான ஞானத்தையும், திறமையையும் அநுக்கிரகிக்கும்படி அவரை நான் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்,
ஞானம்பாள்.

அந்த நிருபத்தோடு கூட, மந்திரி, பிரதானிகள் முதலான உத்தியோகஸ்தர்கள் நடக்க வேண்டிய கடமைகளைப் பற்றி அவர்களுக்கும் நிருபங்கள் அனுப்பினேம்.

சில நாட்கள் ஆதியூரில் நாங்கள் தங்கியிருந்து போக வேண்டுமென்று தேவராஜப் பிள்ளை கனகசபை முதலானவர்கள் வருந்திக் கேட்டுக்கொண்டபடியால், நாங்கள் அந்தப் பிரகாரம் சில நாள் தங்கி இருந்தோம். நாங்கள் விக்கிரமபுரிக்கு அனுப்பின நிருபங்கள் போய்ச் சேர்ந்த உடனே ஆநந்தவல்லி, மந்திரிப் பிரதானிகள் முதலிய அதிகாரிகளும், இன்னும் அநேக பிரபுக்களும், ஜனங்களும் எங்களைக் கண்டுகொள்வதற்காக ஆதியூருக்கு வந்தார்கள். ஆநந்தவல்லி முன்னே புருஷ வடிவமாகப் பார்த்த ஞானம்பாளை இப்போது பெண் வடிவமாகக் கண்டவுடனே பிரமித்து, மதி மயங்கி, முகம் மாறி, முத்து முத்தாகக் கண்ணீர் வடித்தாள். அதைக் கண்டவுடனே ஞானம்பாளும் மனம் உருகி அழுதாள். என்னுடைய தாயார் அவர்கள் இருவரையும் பிரத்தியேகமாக அழைத்து வைத்துக்கொண்டு, ஆநந்தவல்லி மனம் தேறும்படியாக அநேக உறுதி மொழிகளைச் சொன்னார்கள். ஆநந்தவல்லி ஒருவாறு மனம் தேறின பிறகு, அவள் ஞானம்பாளைப் பார்த்து, " அக்காள் !

எனக்குத் தாயும் தந்தையுமாயிருந்து சகல உபகாரங்களையும் செய்து வந்த நீங்கள், இப்போது என்னை அந்தரத்தில் விட்டு விட்டு வந்துவிடலாமா? ஒன்றும் தெரியாத சிறு பேதையாகிய நான் எப்படி ராஜாங்கத்தை வகிப்பேன்? ஆகையால், நீங்களும் உங்கள் நாயகரும் வந்து, முன்போலவே அரசு செய்ய வேண் டும்,'' என்று மிகவும் தாழ்வாய்ப் பிரார்த்தித்துக்கொண்டாள். ஞானம்பாள் ஆநந்தவல்லியைப் பார்த்து, "ராஜ புத்திரியாகிய உனக்கே அந்த ராஜாங்கம் சொந்தம். அதில் பிரவேசிக்க எங்க ளுக்குப் பாத்தியமும் இல்லை; விருப்பமும் இல்லை. நான் குடும்ப முறையை அநுசரித்து, என்னுடைய நாயகர், மாமனார், மாமி யார் முதலானவர்களை உபசரிக்க வேண்டியவளே தவிர, நான் அரசு செய்வது தகுதி அல்ல,'' என்றாள். என்ன நியாயம் சொல்லியும் ஆநந்தவல்லி ஒப்புக்கொள்ளாமல், சந்தோஷம் அற்றவளாகவே இருந்தாள். பிறகு நாங்களும் எங்கள் தாய் தந்தையர் முதலியவர்களும் விக்கிரமபுரிக்கு வந்து, எங்கள் கையாலேயே ஆநந்தவல்லிக்குப் பட்டாபிஷேகமாவது செய்து விட்டு வர வேண்டுமென்று எல்லாரும் ஒரே வாக்காய்க் கேட்டுக் கொண்டார்கள். அந்தப்படி நாங்களும், எங்களுடைய தாய் தந்தை முதலானவர்களும், தேவராஜப் பிள்ளையும், அவருடைய குடும்பத்தாரும் விக்கிரமபுரிக்குப் போய் ஆநந்தவல்லிக்கு மகுடாபிஷேகம் செய்வித்தோம். தங்களை ஆண்ட மகாராஜா பெண் என்று தெரிந்த அந்த ஊரார் முன்பு இருந்ததினும் பதின்மடங்கு அதிக விசுவாசமும், பக்தியும் உள்ளவர்களாய், ஞானம்பாளையும் என்னையும் மட்டுமிதமில்லாமல் வாழ்த்தினார் கள்.

## 27. புலம்பினேம்! பதறினேம்!

நாங்கள் ஆதியூருக்குத் திரும்பி, ஒரு நாள் தங்கியிருந்து, மறு நாள் தேவராஜப் பிள்ளை முதலானவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, சத்தியபுரிக்குப் பயணம் புறப்பட்டோம். நாங்கள் போகிற மார்க்கங்களில் உள்ள ஊர்களில் வைசூரி கண்டு, அநேக ஜனங்கள் மடிந்து போனார்கள். ஆதியூருக்கும் சத்தியபுரிக்கும் நடு மத்தியான சந்திரகிரி என்னும் ஊர் வழியாக நாங்கள் போகும் பொழுது, ஞானம்பாளுக்கு அம்மைக் கொப்புளங்கள் உண்டாகி, எங்களுடைய பயணத்தை நிறுத்தும்படியாகச் சம்பவித்தது. ஞானம்பாளுக்கு அந்தப் பயங்கரமான வியாதி கண்ட உடனே, எங்களுக்கு உண்டான பயத்தையும், வியாகுலத்தையும் நான் எப்படி விவரிக்கப் போகிறேன்? அந்த ஊரிலே வசிக்கிறதற்குத் தகுந்த சத்திரமாவது, சாவடியாவது இல்லாமலிருந்தபடியால், நாங்கள் கூடாரம் அடிக்க யத்தனமாயிருந்தோம். அப்போது, "அம்மை கண்டவர்களையெல்லாம் அந்த ஊரில் உள்ள கவர்ன்மெண்டு வைத்தியசாலைக்குக் கொண்டு போய் வைத்தியம் பார்க்க வேண்டுமென்றும், அப்படிச் செய்யாமல் வீடுகளிலாவது, மார்க்கங்களிலாவது அந்த வியாதியஸ்தர்களை யார் வைத்திருக்கிறார்களோ, அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்," என்றும் கவர்ன்மெண்டார் தண்டோரா மூலமாக விளம்பரம் செய்தார்கள். ஞானம்பாளை வைத்தியசாலைக்குக் கொண்டு போக மனமில்லாமல், நாங்கள் தத்தளித்துக்கொண்டிருக்கும் போது, அது எப்படியோ சில இங்கிலீஷ் டாக்டர்களுக்குத் தெரிந்து, அவர்கள் எங்களிடத்தில் வந்து, அம்மை கண்ட ஸ்திரீகளுக்கு வைத்தியசாலையில் இங்கிலீஷ் துரைசானிகள் வைத்தியம் செய்வதால் ஒரு குறைவும் உண்டாகாது என்றும், ஞானம்பாளை உடனே வைத்தியசாலைக்கு அனுப்ப வேண்டும் என்றும் கட்டாயம் செய்தார்கள். நாங்கள் அந்தப் பிரகாரம் ஞானம்பாளை வைத்தியசாலையில் கொண்டுபோய் விட்டோம். அந்த டாக்டர்கள் எங்களுடைய

நிலைமையைத் தெரிந்துகொண்டு, அதற்குத் தக்கபடி ஞானும் பாளை ஒரு தனி அறையில் வைத்து, இங்கிலீஷ் துரைசானிகளைக் கொண்டு சகல பக்குவங்களும் செய்வித்தார்கள். அது தொத்து வியாதியானதால், நாங்கள் அடிக்கடி போய் ஞானும்பாளைப் பார்க்கிறதற்கு வைத்தியர்கள் இடம் கொடுக்கவில்லை. அதனுல் எங்களுக்கு உண்டான சஞ்சலம் கொஞ்சமல்ல. எங்களுடைய பிராணன்களையும் ஆஸ்திகளையும் ஒன்ருகத் திரட்டி, அந்த வைத்தியசாலையில் வைத்திருந்தால் எப்படியோ, அப்படிப் போல, நாங்கள் ஒரு பக்கத்திலும் இருக்க மனமில்லாமல், இரவும் பக லும் அந்த வைத்தியசாலையைச் சுற்றிக்கொண்டே திரிந்தோம்.

ஞானும்பாள் பதினைந்து நாள் வியாதியாயிருந்தாள். அந்தப் பதினைந்து நாளும் பதினைந்து யுகம் போல இருந்தது. வைத்தியர் கள் எங்களைக் காணும் போதெல்லாம் 'சௌக்கியம் ஆகும்; சௌக்கியம் ஆகும்' என்று தைரியம் சொல்லிக்கொண்டு வந் தார்கள். ஆனுல், பதிஞரும் நாள் வைத்தியர்கள் எங்களைக் கண்ட உடனே அழுதுகொண்டு, "காரியம் மிஞ்சிப் போய் விட்டது. விசனப்பட வேண்டாம்," என்ருர்கள். அந்த வார்த் தையைக் கேட்டவுடனே, ஆயிரம் இடி எங்கள் தலை மேலே விழுந்தது போல அடித்து, மோதி, கீழே விழுந்து, புரண்டு, பொருமினேம்; புலம்பினேம்; பதறினேம்; கதறினேம். இன்னும் பல பெயர்கள் இறந்து போய்விட்டதால், அந்த வைத் தியசாலையைச் சுற்றிலும் அழுகைக் குரலே அல்லாமல், வேறு குரல் இல்லை. இத்தனை பெயர்களைக் கொண்டுபோன அந்த வியாதி வந்து எங்களையும் கொண்டு போகாதாவென்று எத்தனையோ தரம் நாங்கள் பிரார்த்தித்தோம். ஆனுல், அந்தத் துர்வியாதி எங்களை நாடவில்லை. ஞானும்பாளுடைய உத்தரக் கிரியைகளைச் செய்யும்படிப் பிரேதத்தை எங்களிடத்தில் ஒப்பு விக்கும்படி நாங்கள் கேட்டுக்கொண்டோம். அம்மையினுல் இறந்து போகிற பிரேதங்களை வெளியே கொண்டு போகாமல், அந்தக் கொல்லையிலே அடக்கம் செய்யும்படி மேலான அதிகாரி கள் உத்தரவு செய்திருப்பதாகவும், ஆகையால் பிரேதத்தைக் கொடுக்கமாட்டோமென்றும் வைத்தியர்கள் சொன்னுர்கள். பிரேதத்தைக் கைப்பற்றுகிறதற்கு நாங்கள் எவ்வளவோ பிர

யாசைப்பட்டும் பயன்படவில்லை. அம்மை மும்முரமாயிருக்கிற அந்த ஊரில் ஒருவரும் இருக்கக்கூடாதென்றும், உடனே அவர வர்களுடைய ஊர்களுக்குப் போய்விட வேண்டுமென்றும் அதி காரிகள் ஒரு பக்கத்தில் நிர்ப்பந்தம் செய்தார்கள். ஞானம்பாள் வியாதியாய் இருக்கும்போது அவளுக்கு எங்கள் கையாலே பக்கு வங்கள் செய்யக் கூடாமலும், அவள் இறந்த பிறகு, அவள் முகத்திலேகூட விழிக்கக் கூடாமலும், அவளுடைய பிரேதத்தை யாவது எங்கள் கையினுலே அடக்கம் செய்வதற்குக்கூட இடமில்லாமலும் போய்விட்டதால், நாங்கள் பட்ட துயரம் இவ்வளவென்று விவரிக்க ஒருவராலும் கூடாது. நான் மெய் சோர்ந்து, மூர்ச்சித்து, நினைவு இழந்து போய்விட்டேன். அப் பால் நடந்தது யாதொன்றும் எனக்குத் தெரியாது. சத்திய புரிக்குப் போன பிறகுதான் எனக்கு மயக்கம் தெளிந்து, நல்ல நினைவு வந்தது. அப்போது என் தாய்தந்தையர் முதலானவர் கள் எல்லாரும் என் படுக்கையைச் சுற்றி அழுதுகொண்டு நின்ருர்கள். நான் கண்ணை விழித்த உடனே, என் தாயா ரைப் பார்த்து, "ஞானம்பாள் எங்கே அம்மா?" என்றேன். அவர்களும் மற்றவர்களும் ஒன்றும் சொல்லாமல் தேம்பித் தேம்பி அழுதார்கள். நான் மறுபடியும் மெய் சோர்ந்து, மனம் கலங்கி, அறிவு தடுமாறித் துக்கித்தேன்.

எங்களுடைய வீட்டில் ஞானம்பாள் இருந்த இடத்தையும், அவள் கட்டின வஸ்திரங்களையும், அவள் படித்த புஸ்தகங்களை யும், மற்றச் சாமான்களையும் பார்த்து, பார்த்துக் கண்ணிர் விட்டுக் கரைந்தேன். சத்தியபுரியில் உள்ளவர்கள் எல்லாரும் நித்தியமும் வந்து ஞானம்பாள் இரகசியத்திலே செய்து வந்த தானங்களையும், தருமங்களையும், நன்மைகளையும் சொல்லிச் சொல்லி, எங்களுடைய துக்கங்களைப் புதுப்பித்தார்கள். ஞானம் பாளை நினைத்து அழாதவர்கள் ஒருவரும் இல்லை.

என் தாயார் எனக்குப் பல சமயங்களில் ஆறுதல் சொல்ல ஆரம்பித்தார்கள். அவர்கள் வாயைத் திறக்கும் போதெல்லாம் அழுகையும் துக்கமும் அடைத்துக்கொண்டு, அவர்களைப் பேச ஒட்டாமல் செய்துவிட்டன. கடைசியாக, அவர்கள் மனதைத்

தேற்றிக்கொண்டு, சொல்லுகிறுர்கள்: "மகனே! கடந்து போன காரியத்தை நினைத்து, அநுதாபப்பட்டு இலாபம் என்ன? நாம் எவ்வளவுதான் அழுதாலும், ஞானம்பாள் வரப் போகி ருளா? உலகத்தில் பிறக்கிறதும் இறக்கிறதும் சகஜமேயல்லா மல், நூதனமான காரியம் என்ன இருக்கிறது? நம்முடைய முன்னேர்கள் எல்லாரும் இறந்து போனுர்களேயன்றி, யாராவது தப்பியிருக்கிறுர்களா? அப்படியே நாமும் ஒரு நாள் இறந்து போக வேண்டியவர்கள்தானே!

"காலம் ஓயாமல் ஓடிக்கொண்டே இருக்கிறது. அது ஓடும் பொழுதே நம்முடைய ஆயுசையும் வாரிக்கொண்டு போகிறது. நாள், வாரம், மாதம், வருடம் என்று பல ரூபம் எடுத்துப் போவது, நம்முடைய ஆயுசேயன்றி, வேறென்ன? சிறியோர் களாய் இருந்தாலும், பெரியோர்களாய் இருந்தாலும், ஏழை களாய் இருந்தாலும், தனவான்களாய் இருந்தாலும் ஒருவரையும் மரணம் விடுகிறதில்லே. இதற்கு நூறு வருஷத்திற்கு முன் இருந்த ஜனங்களில் யாராவது ஒருவர் இப்போது இருக்கிறுர் களா? இன்னும் நூறு வருஷத்திற்குள் இப்போது இருக்கிற சகல ஜனங்களும் மடிந்து போய், அவர்களுடைய சந்ததிகள் வருவார்கள் என்பதற்குச் சந்தேகமா? மரங்களில் இலேகள் பழுத்து, உதிர்ந்து போய்ப் புது இலேகள் உண்டாவது போல, உலகத்திலும் ஜனங்கள் புதிது புதிதாக மாறிக்கொண்டே இருக் கிறுர்கள். காணப்பட்ட பொருள்கள் எல்லாம் அழிந்து போவது நிச்சயமே. பூலோக வாழ்வைப் போல அநிச்சயமான காரியமும், மரணத்தைப் போல நிச்சயமான காரியமும் வேறென்றும் இல்லே.

"ஞானம்பாள் ஊரில் வந்தாவது இறந்து போகாமல், வழியி லேயே இறந்து போனதற்காக நாம் அதிகமாகத் துக்கிக்கி ரேம். அவள் ஊரில் வந்து இறந்து போனுல், நாம் துக்கிக்கா மல் இருப்போமா? நாட்டில் இருந்தாலும், காட்டில் இருந் தாலும், வீட்டில் இருந்தாலும், எங்கே இருந்தாலும் இறப்பது நிச்சயந்தானே! மரணத்தை யார் தடுக்கக் கூடும்?

"தலைமுறை தலைமுறையாய்க் கப்பலில் ஜீவனம் செய்கிற ஒரு மாலுமியை அவனுடைய நேசன் பார்த்து, "உன்னுடைய முன்னோர்கள் எல்லாரும் கடலிலேயே இறந்து போனதால், நீயும் கப்பலிலே ஜீவனம் செய்தால், கடலிலேயே இறந்து போவாய்! ஆகையால், இந்த ஜீவனத்தை விட்டு விடு," என்றான். மாலுமி சற்று நேரம் மௌனமாயிருந்து, பிறகு நேசனைப் பார்த்து, "உன்னுடைய முற்பாட்டனும், பாட்டனும், தகப்பனும் எங்கே இறந்தார்கள்?" என்று கேட்க, "அவர்கள் சமுத்திரத்தில் இறக்கவில்லை; பூமியில்தான் இறந்தார்கள்," என்று சிநேகிதன் மறுமொழி சொன்னான். உடனே மாலுமி அவனைப் பார்த்து, "உன்னுடைய முற்பாட்டனும் பாட்டனும் தகப்பனும் பூமியிலே இறந்து போனதால், நீ பூமியில் இருப்பது சரியல்ல," என்றான். அந்த மாலுமி சொன்னது போல, எங்கே இருந்தாலும் சாவு நிச்சயந்தானே!

"பிள்ளைகளுக்குக் கசப்பான மருந்துகளைக் கொடுத்து, அடித்துத் திருத்தி வளர்க்கிற அன்புள்ள தாய்தந்தையர் போலக் கடவுளும் நம்மைத் திருத்துவதற்காகவே அநேக சமயங்களில் நமக்குத் துன்பங்களைக் கொடுக்கிறார். நீர்க் குமிழி போல நிலையில்லாத இந்த உலகத்தில் நாம் அநுபவிக்கிற சுகமும் சுகமல்ல; துன்பமும் துன்பம் அல்ல! கடவுளை நாம் காணாதபடி நம்முடைய தேகமாகிய திரை மறைத்துக்கொண்டிருப்பதால், அந்தத் திரை எப்போது நீங்குமோவென்று புண்ணியவான்களெல்லாரும் ஆவலுடன் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஞானம்பாளுக்குத் தேகமாகிய திரை நீங்கிவிட்டதால், அவளுக்குக் கடவுளுடைய தரிசனமும், நித்திய பாக்கியமும் கிடைத்திருக்கும் என்பதற்குச் சந்தேகம் இல்லை. அவள் நித்தியானந்தத்தில் பிரவேசித்திருப்பது நமக்குச் சம்மதம் இல்லாதது போல, நாம் அவளுக்காக அழுது பிரலாபிப்பது எவ்வளவும் சரியல்ல!"

இவ்வாறு என் தாயார் எனக்குச் சொன்ன புத்திமதிகளெல்லாம் நீர்மேல் எழுத்துப் போலவும், கல்லின்மேல் விதைத்த விதை போலவும் பயன்படாமல் போய்விட்டன. எனக்கு இதம்

சொன்ன என் தாயாரே ஆறுதல் இல்லாமல் ஓயாத மனமடி வுள்ளவர்களாய் இருப்பார்களானால், என்னுடைய நிலைமை யையும், மற்றவர்களுடைய நிலைமையையும் நான் விவரிக்க வேண்டுமா ?

## 28. போன உயிர் வந்தது !

ஒரு நாள் தேவராஜப் பிள்ளையும், கனகசபை முதலானவர் களும், எங்களுடைய வீட்டுக்குள்ளே வந்து நுழைந்தார்கள். ஞானம்பாள் இறந்து போனதைக் குறித்து, சந்திரகிரியில் இருந்து நாங்கள் அவர்களுக்குக் கடிதம் அனுப்பினபடியால், அவர்கள் துக்கம் விசாரிக்க வந்திருப்பார்களென்று நினைத்து, தேவராஜப் பிள்ளையையும், கனகசபையையும் நான் தனித் தனியே கட்டிக்கொண்டு அழுதேன். அவர்கள் என்னோடு கூட அழவுமில்லை; முகத்திலே துக்கக் குறி விளங்கவுமில்லை. அவர் கள் இரக்கமில்லாத மனிதர்களென்று நினைத்து, நான் முகத் தைச் சுளித்துக்கொண்டு, அப்பால் போய் மௌனமாயிருந் தேன். உடனே தேவராஜப் பிள்ளை என்னைப் பார்த்து, "நாங் கள் சந்தோஷச் செய்தி கொண்டு வந்திருக்கிறோம். நீங்கள் அழ வேண்டாம். உங்களுடைய துக்கக் கடிதம் வந்தவுடனே, நாங்கள் அளவிறந்த துக்கமுள்ளவர்களாய், உங்களை வந்து கண்டுகொள்வதற்காக, உடனே பயணம் புறப்பட்டோம். நாங் கள் சந்திரகிரியில் வந்து சேர்ந்த உடனே, ஞானம்பாள் இறந்த வகையைக் குறித்து விசாரிப்பதற்காக வைத்தியசாலைக்குப் போனோம்; அம்மை வியாதியின் கடுமையினால் ஞானம்பாளுக்கு வெகு நேரம் மூச்சு அடங்கியிருந்ததாகவும், அதைக்கொண்டு அவள் இறந்து போனதாக எண்ணி, அடக்கத்துக்கு யத்தனம் செய்ததாகவும், பிறகு சுவாமி கிருபையினால் ஞானம்பாளுக்குப் போன பிராணன் திரும்பி வந்துவிட்டதாகவும், இன்னமும்

அவள் வைத்தியசாலையிலே இருப்பதாகவும், இனிமேல் உயிருக்குப் பயம் இல்லையென்றும் கேள்விப்பட்டோம்; உடனே வைத்திய சாலைக்குள்ளே போய், ஞானம்பாளையும் பார்வையிட்டுப் பரம சந்தோஷம் அடைந்தோம். ஞானம்பாளுக்கு வைத்தியம் பார்த்த டாக்டர்களை எனக்குத் தெரியுமானதால், ஞானம்பாளை ஊருக்கு அழைத்துக்கொண்டு போவதற்காக என் வசத்தில் ஒப்புவிக்கும்படி நான் அவர்களைக் கேட்டுக்கொண்டேன். அவர்கள், "ஞானம்பாள் மிகவும் துர்ப்பலமாயிருப்பதால், இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அழைத்துக்கொண்டு போக வேண்டும்," என்றார்கள். நாங்கள் அந்தப் பிரகாரம் மூன்று நாள் வரைக்கும் காத்திருந்து, ஞானம்பாளை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறோம். ஞானம்பாளும், என்னுடைய மனைவியும், மருமகளும் ஒரு வண்டியில் இதோ வருகிறார்கள். நாங்கள் இந்தச் சந்தோஷ சமாசாரம் சொல்வதற்காக முந்தி வந்தோம்," என்றார். அவர் வார்த்தை முடிவதற்கு முன், ஞானம்பாளும், மற்றவர்களும் வந்து, உள்ளே புகுந்தார்கள். நான் என் காதலியைக் கண்டேன்; கவலையெல்லாம் விண்டேன்; உள்ளம் பூரித்தேன்; உடலம் பாரித்தேன்; பரமாற்புதமாக ஞானம்பாளைப் பிழைப்பித்த ஜகதீசனுடைய பெருங்கருணையை நினைந்து, நினைந்து ஆநந்தக் கண்ணீர் சொரிந்து, அடிக்கடி மானச பூஜை செய்தேன்.

அப்பொழுது ஆநந்தவல்லியும், அவளுடைய பரிவாரங்களும் வந்து சேர்ந்தார்கள். ஞானம்பாள் இறந்த செய்தி கேட்டது முதல் ஆநந்தவல்லி அழுதழுது, முகம் வீங்கிப் போயும், தேகம் இளைத்துப் போயும் இருந்தாள். ஞானம்பாள் உயிரோடு இருப்பதைப் பார்த்த உடனே ஆநந்தவல்லி என்கிற பெயர் அவளுக்கே தகும் என்று சொல்லும்படியாகப் பிரமானந்தம் அடைந்து, தேக பரவசம் ஆனாள். அவர்கள் எல்லாரையும் நாங்கள் ஒரு மாதம் வரைக்கும் நிறுத்தி வைத்துக்கொண்டு, ஞானம்பாள் பிழைத்ததற்காகத் தினந்தோறும் தேவாராதனைகளும், ஏழைகளுக்குத் தான தர்மங்களும் செய்து வந்தோம்.

பல நாட்களாயின பின், ஞானம்பாள் ஆண் வேடம் பூண்டு அரசாண்ட பாவனையாக இப்போது காட்ட வேண்டுமென்று, ஞானம்பாளை என் பாட்டியார் முதலானவர்கள் வேண்டினார்கள். ஞானம்பாளுக்கு எவ்வளவும் விருப்பம் இல்லாவிட்டாலும், பலருடைய நிர்ப்பந்தத்தினால், ஒரு நாள் ஞானம்பாள் அரசனைப் போல வேடம் பூண்டுகொண்டாள். சாக்ஷாத் ராஜ வடிவாகவே தோன்றின ஞானம்பாளைப் பார்த்து எல்லாரும் அதிசயித்துக்கொண்டிருக்கும் போது, ஆநந்தவல்லி அகக் களிப்புடனே வந்து, ஞானம்பாளைப் பார்த்து, "அக்காள்! என்னை வேண்டி நீங்கள் ஆணாகவே இருந்து விடுங்கள்; இனிப் பெண் ரூபம் எடுக்க வேண்டாம்," என்று சொல்லி, இரு கைகளையும் கூப்பிக் கும்பிட்டாள். உடனே சம்பந்தி முதலியார் மகளைப் பார்த்து, "ஆம் அம்மா! ஆண் பிள்ளை இல்லையென்று உன் தாயாருக்கும் எனக்கும் உண்டாயிருக்கிற வருத்தம் தீரும்பொருட்டு, நீ ஆணாகவே இருந்து விடு," என்றார். அப்போது நான் ஞானம்பாளை நோக்கி, "இவர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு, என்னைத் தெருவில் விடாதே, ஞானம்பாள்!" என்றேன். இதைக் கேட்ட உடனே, அண்ட கடாகமும் வெடிக்கும்படியாக எல்லாரும் துள்ளித் துள்ளி விழுந்து சிரித்தார்கள். நான் விக்கிரமபுரிக்குப் போன உடனே, அந்தத் துர்வழக்காளிகள் இடத்திலும், காவல் சேவகர்களிடத்திலும் அகப்பட்டுக்கொண்டு அவஸ்தைப்பட்ட பாவனையாக வேடம் போட்டுக் காட்டும்படி என் பாட்டியார் என்னை வேண்டிக்கொண்டார்கள். நான் என் பாட்டியாரைப் பார்த்து, "அந்தப் பாவிகளை மனசிலே நினைத்தாலும், எனக்குச் சிம்ம சொப்பனமாய் இருக்கிறது. வேடிக்கைக்குக் கூட அந்த வேடம் போட என் மனம் துணியவில்லை" என்று சொல்லி, நிராகரித்துவிட்டேன். பிறகு ஊரில் இருந்து வந்தவர்கள் எல்லாரும் தனித் தனியே எங்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, அவரவர்களுடைய ஊருக்குப் பிரயாணம் ஆனார்கள்.

ஆனந்தவல்லி அவளுக்குப் பந்துவான ஒரு ராஜ குமாரனை மணம் செய்துகொண்டு க்ஷேமமாயிருக்கிறாள். தெய்வானுக்

கிரகத்தினுலும், உங்களுடைய ஆசிர்வாத மகிமையினுலும் நாங்கள் சகல சாம்பிராஜ்யங்களும் பெற்று, சந்தோஷமாக ஜிவிக்கிரேும்.



முற்றிற்று



★ வேதநாயகம் பிள்ளை 1826-ஆம் ஆண்டில், திருச்சியை அடுத்த குளத்தூரில், சைவ சமயத்திலிருந்து கிறிஸ்தவ மதத்திற்கு மாறின குடும்பம் ஒன்றில் பிறந்தவர். அவருக்கு இளமை முதற்கொண்டே ஆழ்ந்த தெய்வ பக்தியும், தமிழிலும் இசையிலும் பற்றும் ஏற்பட்டிருந்தன.

★ அவர் மாயூரம், சீர்காழி, தரங்கம்பாடி முதலிய இடங்களில் முன்சீப்பாக வேலை பார்த்தார். அவருடைய தீர்ப்புகள் நீதி தவறாத தன்மைக்குப் பெயர் பெற்றவை.

★ முன்சீப்பு வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு அவர் மாயூரம் முனிசிபல் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பொது வாழ்வில் ஈடுபட்டுத் தொண்டுகள் செய்து வந்தார்.

★ பெண் கல்விக்காகவும், முதியோர் கல்விக்காகவும் அவர் மிகுந்த சேவை செய்தார். அவர் கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்தவராயினும் அவரது பரந்த சமரச மனப்பான்மையும், ஆழ்ந்த அன்பும் எல்லா மதத்தாருடைய நட்பையும் அவருக்கு அளித்தன. அவர் இயற்றிய நூல்களில் இந்த சமரச நோக்கு பெரிதும் காணக் கிடக்கின்றது.

★ அவர் இயற்றிய இசை நூல்களுள் புகழ் வாய்ந்தது சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள். அவர் இயற்றிய மற்ற நூல்கள்: நீதி நூல், சித்தாந்த சங்கிரகம், பெண்மதிமாலை, சுகுண சுந்தரி சரித்திரம், பிரதாப முதலியார் சரித்திரம் முதலியன. இவற்றுள் பிரதாப முதலியார் சரித்திரம் தமிழ் மொழியின் முதல் நாவலாகும்.

★ அவர் 1889-ஆம் ஆண்டில் மறைந்தார்.